தமிழ்ப் புலவர் வரிசை

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

மு. அருணாசலம்

காந்தி வித்தியாலயம்
திருச்சிற்றம்பலம்

தமிழ்ப்புலவர் வரலாறு

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

மு. அருணாசலம்

காந்தி வித்தியாலயம்
திருச்சிற்றம்பலம்
மாயூரம்—தஞ்சை ஜில்லா

# ஸ்ரீ காசி குமரகுருபர சுவாமிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்

## முகவுரை :

சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை
நற்பான்மை அறியாத நாயினேனை
நன்னெறிக்கே செலும் வண்ணம் நல்கினானைப்
பற்பாவும் வாயாரப் பாடியாடிப்
பணிந்தெழுந்து குறைந் தடைந்தார் பாவம் போக்க
கிற்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே.

—அப்பர் சுவாமிகள் தேவாரம்

ஸ்ரீ குமர குருபர சுவாமிகளுடைய பிரபந்தத் திரட்டு என்னும் அவருடைய நூல்கள் ஆறுமுறை இதுவரையில் அச்சிடப்பட்டுவ்ளன. அந்தப் பதிப்புக்களுள் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் உதவியோடு மகா மகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் குறிப்புரை எழுதி ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு 1939 ஆம் ஆண்டு வெளியிட்ட பதிப்பே மிகவும் சிறப்புடைய பதிப்பு,

அவருடைய நூல்களில் ஐந்தாவது நூலாகிய நீதி நெறி விளக்கம் மட்டும் நால்வர் எழுதிய ஆங்கில மொழி பெயர்ப்புக்களோடு வெவ்வேறு ஆண்டுகளில் அச்சிடப் பட்டுள்ளது.

சுவாமிகளுடைய நூல்கள் அனைத்தையுமே அவை பாடிய காலம் தொடங்கிப் பண்டிதர்கள் மட்டுமல்லாமல் ஏனையோரும் விரும்பிப் படித்து வருகிறார்கள். இந்த நிலைமை இவருக்கே உரிய தனிச்சிறப்பு. ஆரம்பகாலம் முதல்

இவருடைய நூல்களை அச்சிட்ட புலவர்கள் எல்லோரும் சுருக்கமாகவோ, விரிவாகவோ இவருடைய வரலாற்றை நூல் முகப்பில் எழுதிச் சேர்த்திருக்கிறார்கள். பெரும் பான்மையோர், சம்பிரதாயமாகச் சொல்லப்பட்டு வருகின்ற வரலாற்றுக் கதைகளை அப்படியே தொகுத்துச் சரித்திரமாக எழுதியிருக்கிறார்கள்.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் எம்.எல். பிள்ளை 'என்று பிரசித்தி பெற்றிருந்த கா. சுப்ரமணிய பிள்ளையவர் கள் மரபு வழிக்கதைகளை மட்டுமல்லாமல் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சுவாமிகளுடைய சரித்திரம் என்ற பெயரில் எழுதி ஐயரவர்களால் வெளியிடப் பட்ட மரபு வழிக்கு மாறான கவிதை நூலையும் நம்பித் தாம் எழுதிய வரலாற்றைப் புனைந்திருக்கிறார்.

நம் நாட்டில் புலவர்கள் அருளாளர் போன்றார் வரலாற்றை ஆதார ரூபமாக யாரும் எழுதி வைக்காமை யினாலே உண்மை வரலாறும் தெரிவதில்லை, பொய்க்கதை களும் சேர்ந்து கொள்ளுகின்றன. இந்நிலையில் உண்மை வரலாற்றைக் காண்பது மிகவும் அரிது.

சுவாமிகள் திருநெல்வேலி மாவட்டத்தில் ஸ்ரீ வைகுண்டம் என்ற ஆழ்வார் மங்களா சாசனம் பெற்ற திருப்பதியின் பாகமான கயிலாசபுரம் என்ற பகுதியில் சுமார் 1615இல் அவதாரம் செய்தார். இளம் வயதிலேயே திருச்செந்தூர், மதுரை, திருவாரூர், புள்ளிருக்கு வேளூர், சிதம்பரம் ஆகிய தலங்களெல்லாம் தரிசித்து அங்குக் கோயில் கொண்டிருக்கும் தெய்வங்களைப் பாடிப் பின்னர் மாயூரத்துக்கு அருகிலுள்ள தருமபுரத்துக்கு வந்து அங்குத் திருக்கயிலாய பரம்பரையில் குருஞான சம்பந்தர் மரபில் நான்காம் பட்டத்து ஆசாரிய ராக வீற்றிருந்த ஸ்ரீ மாசிலாமணி தேசிகரால் ஆட்கொள்ளப் பெற்று அவருடைய கட்டளைப்படி காசிக்குச் சென்றார். அங்கு இவர் சென்ற சமயம் அந்நாட்டை அவுரங்க சீப்பின்

தமையன் தாராஷுகோ என்பவன் கூட்டியிருந்த சர்வசமய மகாநாட்டில் கலந்து கொண்டு அவர்களுடைய மொழியில் பேசிச் சைவ சமய தத்துவங்களை அந்த மக்களுக் கெல்லாம் உணர்த்தினார். இவருடைய விளக்கத்தினால் மனம் கவரப் பட்ட தாராஷுகோ இவருக்குப் பெருஞ்சிறப்புக்கள் செய்து குமாரசாமிமடம் என்று இன்றும் பெருஞ் சிறப்போடு விளங்கி யிருக்கின்ற மடத்தைக் காசியின் மத்திய பாகத்தில் கட்டிக் கொடுத்ததும் அல்லாமல், அப்போது அழிக்கப்பட்டிருந்த கங்கைக் கரையிலுள்ள ஸ்ரீ கேதார நாதர் கோயிலையும் திருப்பணி செய்து மீண்டும் நித்திய நைமித்திக பூசைகளை நடத்தும்படி இவர் வசம் ஒப்புவித்தான்.

நாட்டின் அரசியல் கொடுமைகளும் சமயக் கொடுமை களும் பலவாக நடந்தும் கூட இந்து சமயத்துக்கு பயங்கர மான அழிவு காலமாயிருந்துங் கூட இத்தனைக்கும் இடையில் இந்த மடமும் கோயிலும் இன்று வரையில் தலை நிமிர்ந்து விளங்கி வருகின்றன. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நேபாள நாட்டிலுள்ள மோரங்கி என்ற ஊரிலும் தம்முடைய கிளை மடம் ஒன்று அமைத்திருந்தார் என்று வரலாற்றால் அறிகிறோம். இவ்வளவையும் நடத்திய சுவாமிகள் காசியிலேயே கி.பி. 1688ஆம் ஆண்டு மே மாதத்துக்கு நேரான விபவ வருஷம் வைகாசி மாதம் தேய்பிறைத் திருதியை திதியில் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தார்.

சுவாமிகளுக்குப் பின் ஆறாம் பட்டத்திலிருந்த தில்லை நாயக சுவாமிகள் என்பவர் காசியிலிருந்த ஸ்ரீ குமாரசாமி மடத்தைப் பல சௌகரியங்களைக் கருதித் தென்னாட்டில் கொண்டு வந்து நிறுவ வேண்டும் என்று எண்ணி, 1720இல் சோழ நாட்டிலுள்ள திருப்பனந்தாளைத் தேர்ந்தெடுத்து அங்குக் காசி மடம் என்ற பெயரில் ஒரு மடம் அமைத்தார். அது முதல் திருப்பனந்தாள் காசிமடம் தலைமை ஸ்தான மாகவும், காசியிலிருக்கின்ற குமார சாமிமடம் கிளைமடமாக

வும் இயங்கி வருகின்றன. ஆதி குமர குருபரருக்குப் பிறகு 20 பட்டங்கள் தலைவர்களாக வீற்றிருந்து இப்போது ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித்தம்பிரான் சுவாமிகள் 21 ஆம் பட்டம் தலைவராகவும் இருந்து இந்த இரண்டு மடங்களையும் இவற்றின் கிளை மடங்களையும் இவற்றின் பொறுப்பில் இருந்து வருகின்ற பிற தருமங்களையும் நிர்வகித்து வருகிறார்கள்.

ஸ்ரீகுமர குருபர சுவாமிகள் மறைந்த ஆண்டு கி.பி. 1688. இந்த 1988 இல் அதிலிருந்து 300 ஆண்டுகள் நிறைகின்றன என்று மடத்தார் நம்பிக்கை. இந்தக் குமர குருபர சுவாமிகள் வரலாறு இப்போதைய காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் விருப்பப்படி 300 ஆவது ஆண்டு நிறைவு விழாமலராக வெளிவருகிறது.

இந்த வரலாற்றில் இயன்ற வரையில் எல்லாச் செய்திகளையும் நன்கு ஆய்ந்து தொகுத்து, விலக்க வேண்டியவற்றை விலக்கி எழுதப் பெற்றிருக்கிறது. ஓரளவு நூல் ஆராய்ச்சியும் இதனுள் சேர்க்கப் பெற்றிருக்கிறது.

ஸ்ரீ மடத்தின் வரலாறு இதுவரையில் எழுதப் பெறவில்லை. அவ்வரலாற்றில் கி.பி. 1880 முதல் 1894 வரையில் ஓர் இருண்ட காலம். அக்காலத்து நிலைமை கொஞ்சமும் தெரியவில்லை. அது மாத்திரமல்ல முன்னிருந்த மடத்து வரலாறு எதுவுமே பின்னர்த் தெரியக் கூடாத நிலைமை அப்போது செய்யப்பட்டு விட்டது. இந்தச் சூழ்நிலையில் இத்தகைய இருளின் மத்தியில் எவ்வித வரலாற்றாதாரமும் கிடைக்காதிருக்கும் போது, கிடைத்தவரை அனைத்துச் செய்திகளையும் தொகுத்து இந்தக் காசி மடத்து வரலாறு என்ற புத்தகம் இரண்டாவது தனிப் புத்தகமாக இதே சமயம் வெளியிடப் பெறுகிறது.

இப்போது வெளியாகின்ற இந்த ஸ்ரீ குமரகுருபரர் வரலாறு என்பது, யாம் இருபது ஆண்டுகளாக எழுதி வெளியிட்டு வருகின்ற பெரிய திட்டமாக தமிழ் இலக்கிய நூற்றாண்டு முறை என்ற வரலாற்று வரிசையில் 17 ஆம் நூற்றாண்டின் முதற்பாகத்துக்குரிய தொடக்கப் பகுதி யாகும். 9 ஆம் நூற்றாண்டு தொடங்கி 16 ஆம் நூற்றாண்டு முடிய வரலாற்றுப் பகுதிகள் வெளியாகியுள்ளன. அந்த வரிசையில் இப்போது வெளியாகும் இந்தக் குமரகுருபரர் சரித்திரம் 17 ஆம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாற்று முதல் பாகத்தின் முதற்பகுதியாகும். குமரகுருபர சுவாமிகள் 12 பிரபந்தங்கள் பாடியிருக்கிறார். பின்னும் மூன்று பிரபந்தங்கள் அவர் பேரில் வழங்குகின்றன. பாடல்களின் தொகை 709 ஆகும். அவர் முத்திப் பேறு எய்தியகாலம் 1688 ஆம் ஆண்டு எனக் கணித்து திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தார் அவருடைய ஆண்டுக் குருபூசையை மிக்க விரிவாக நடத்தி வருகிறாக்கள். சென்ற 1988 ஜூன் மாதம் 3ஆம் தேதி அவருடைய 3 ஆவது நூற்றாண்டு குருபூசைத் தினம் அதாவது அவர் முத்தி பெற்று 300 ஆவது ஆண்டு நிறைவு. இந்த 300 ஆவது ஆண்டு நிறைவு காசிமடத்தில் மட்டுமின்றி தமிழ்நாடு முழுமையும் பாரததேசம் முழுமை யும் ஒரு பெருந் தேசிய விழாவாகக் கொண்டாடப் பெறு கின்றது. அதாவது 1688 மே முதல் 1989 மே வரையில் ஓராண்டுக் காலம். இதையொட்டி டில்லி சாகித்திய அகாடமியார் சென்னையில் நடத்திய விழாவில் எம்மைப் பேச அழைத்திருந்தார்கள். பல தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களிலும் பிறவற்றிலும் அவ்விழாவை மிக்க சிறப்போடு கொண்டாடியிருக்கிறார்கள். திருப்பனந்தாளிலும் காசி யிலும் இவ்விழாவில் அன்னதானமும் சிறப்பாக நடை பெற்றது. எந்தத் தமிழ் நாட்டுப் புலவருக்கும் அல்லது அடியவருக்கும் இல்லாத அருஞ் சிறப்பு குமரகுருபரருக்குக் கிடைத்திருந்தது.

மிகவும் பழங்காலத்தில் இருபெரு ஞானிகள் தமிழ் நாட்டிலிருந்து வடநாடு சென்று அங்குத் தங்கள் சமயக் கொள்கையைப் பரப்பியிருக்கிறார்கள். ஆதிசங்கரர் (கி.பி. 788-820) தம்முடைய அத்வைதக் கொள்கையைப் பரப்பி னார். இராமானுஜர் (1017-1137) தம்முடைய விசிஷ்டாத்து வைதக்கொள்கையைப் பரப்பினார். இராமானுஜருக்குப்பின் கொடிய பகைமைச் சூழ்நிலை நிலவிய 17ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் காசி சென்ற குமரகுருபரர் தம்முடைய சைவ சித்தாந்தக் கொள்கையை அங்குப் பிரசாரம் செய்தார். மூவரும் தமிழ் நாட்டில் பிறந்தவர்கள். சங்கரர் மேல் கடற் கரையிலுள்ள (அன்றைய தமிழ் நாட்டுக்) காலடி என்ற ஊரில் பிறந்தார். இராமானுஜர் இன்றைய தமிழ் நாட்டில் கீழ் கடற்கரைக்கு அணித்தான ஸ்ரீ பெரும் பூதூரில் பிறந்தார். இருவரும் பிராமண மரபு. ஆனால் குமர குருபரரோ வேளாளமரபு. இவர் பிறந்தது தமிழ்நாட்டுத் தென் கோடிக்கு அருகிலுள்ள ஸ்ரீ வைகுண்டம் என்ற சிற்றூரில் பிறந்து பல நாடுகளையும் கடந்து முகம்மதிய ஆதிக்கம் நாடு முழுமையும் சொல்லொண்ணாக் கொடுமை களைச் செய்த காலத்தில் இந்து மக்களுக்கு மிகவும் புனிதமான தலமாகிய காசியை அடைந்து அங்கிருந்த முகம்மதிய மன்னனின் ஆதரவு பெற்று அப்போது அங்கே இடிக்கப் பட்டிருந்த காசி விசுவநாதர் கோயில், கேதார நாதர், கோயில் பாண்டுரங்கர் கோயில் முதலியவற்றை யெல்லாம் புதுப்பித்து தமக்கென்று அங்கேயே சிறப்பான ஒரு மடமும் கட்டிக் கொண்டு பல தருமங்களும் செய்து கொண்டு காசியிலேயே தங்கிவிட்டார். சங்கரரும் இராமானுஜரும் காசியிலேயே தங்கவில்லை. தமிழ் நாட்டுக் குத் திரும்பிவிட்டனர். இவர் செய்த சாதனை அன்று மட்டு மல்லாமல் இன்று வரை யாரும் செய்யாத சாதனை,

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தம்முடைய பாடலின் இனிமை காரணமாக அன்று முதல் இன்றுவரை கற்ற தமிழ் மக்கள் அனைவர் உள்ளத்திலும் சிறப்பான இடம் பெற்றிருக் கிறார். புதிய தமிழ் உலகத்தால் புரட்சிக் கவிஞர் என்று போற்றப் பெறுகின்ற பாரதிதாசன் இவருடைய கவிதையில் கொண்ட ஈடுபாட்டால் இவர் வரலாற்றையே புதிதாக ஒரு காவியமாகப் புனைந்திருக்கிறார். 1988-89 ஆகிய ஆண்டில் குமரகுருபர சுவாமிகளுக்கு நாடெங்கும் பல சிறப்புக்கள் செய்து பெரு விழாக்கள் எடுக்கப்பட்டன. சிறப்புக்களில் ஒன்று அவருடைய வரலாற்றை விரிவாக ஆய்ந்து எழுதுதல். அப்பணி எமக்கு ஒப்புவிக்கப்பட்டது. இதை யாம் பெரும் பேறாகக் கருதுகிறோம். அந்த முறையில் இச்சரித்திரம் 1988-89 ஆகிய நிறைவு விழா ஆண்டில் எழுதி வெளி வருகிறது.

கண்பார்வை மலினமுற்று யாம் துன்புற்றிருந்த வேளையில் பக்கத்து ஊரிலிருந்து செல்வி கஸ்தூரி என்ற பெண் எம்மிடம் வந்து எழுத்து வேலையைச் செவ்வனே செய்து முடித்திருக்கிறாள். ஸ்ரீகுமரகுருபர சுவாமிகளுக்கு எல்லா நலன்களையும் அருள் செய்த திருச்செந்தூர் முருகப் பெருமான் இவளுக்கும் எல்லா நலன்களையும் அருளுமாறு அவனுடைய திருவடிகளை இறைஞ்சுகிறேன்.

திருச்சிற்றம்பலம்
பொங்கல் திருநாள்
14-1-1990

மு. அருணாசலம்

# பொருளடக்கம்

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றை ஊன்றி நோக்கும்போது வரலாறானது திட்டமான சில காலப் பகுதிகளாக அமைந்த போதிலும், பல சமயங்களில் மிகப்பெரும்புலவர்கள் தோன்றி எந்தக் காலப் பாகுபாட்டுக்குள்ளும் அடங்காமல் தனித்த பெரும் அருட்கவிஞர்களாக விளங்கி வந்திருப்பதைக் காண்கிறோம். 14-15 ஆம் நூற்றாண்டில் அருணகிரிநாதரும், 16ஆம் நூற்றாண்டில் அதிவீரராம பாண்டியரும், 17ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ குமரகுருபரரும், 18ஆம் நூற்றாண்டில் தாயுமானவரும் ஒப்பற்ற அருட்கவிஞர்களாகத் தோன்றித் தமிழ் இலக்கியத்தைத் தங்கள் பாடல்களால் மேம்படுத்தியவர்கள். தமிழ் இலக்கியத்தை மட்டுமல்ல; இவர்கள் சைவ சமயத்தையே தங்கள் பாடல்களால் மேம்படுத்தியவர்கள். இவர்களை எந்தப் பாகுபாட்டினுள்ளும் அடக்க முடியாது. இந்த நிலையானது சைவம் மிகப் பழைய காலம் தொடங்கி இடையறாது வளர்ந்து வந்திருக்கிறது என்பதை நமக்குப் புலப்படுத்தினாலும், கோச்செங்கட்சோழர், காரைக்காலம்மையார், திருமூலர் ஆகியோர் வாழ்ந்த ஐந்தாம் நூற்றாண்டு தொடங்கி இடையறாது வளர்ந்து வந்திருக்கிறது என்பதையும் உணர்த்துவதாகும்.

இந்த மரபில் 17ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்கு உரியவராகிய ஸ்ரீ குமரகுருபர முனிவருடைய வாழ்க்கையை

என்று தாம் கருதியோர் வரலாறுகளை 2991 பாடல்களால் புலவர் புராணம் என்ற பெயரில் பாடியிருக்கிறார். இதில் அடங்கிய புலவர்கள் 76 பேர். இவர் தாம் இந்த நூல் பாடுவதற்கு ஆதாரம் யாவை என்பதைப் பாயிரப் பகுதியில் ஒரு பாடலில் சொல்லுகிறார்.

நாற்பொருளும் பெற விரும்பில் ஆதாரம் முன்னோர்
நவில்மொழியுங் கலைவாணி நடம்புரியும் நாவும்
வேற் பிடித்து மலைதொறும் போய்த் திருவருட்பே ராடல்
வினைக்கு முழு துணர்புலவன் விரைமலர்த்தாள் களுமே

இங்கு இவர் தமக்குரிய ஆதாரம் என்று குறிப்பிடுவது "முன்னோர் நவில்மொழியும், கலைவாணி நடம்புரியும் நாவும், முருகன் மலர்த்தாள்களும்" என்று கூறுகிறார். இவர் திட்டமான ஆதாரம் எதையும் சொல்லவில்லை. செவிவழிச் செய்திகளையெல்லாம் தொகுத்துப் புலவர் புராணம் என்று பெயரிட்டுப் பாடியிருக்கிறார். கலைவாணி நடம்புரியும் நா என்று சொல்லும்போது இவர் உள்ளத்தில் தோன்றி வெளிப்படும் கருத்துக்கள்; ஆகவே இவர் உரைத்ததெல்லாம் புராணம். ஆதலினால் இது ஆதாரமுடைய வரலாற்றுக்கு உதவாது. ஆனால் வேறு வரலாறுகள் கிடைக்காதபோது செவிவழிச் சான்றுகளைத் தள்ளிவிட முடியாது. ஆகையால் இப்புராணத்தையும் ஏற்ற பெற்றி கொள்ள வேண்டி வருகிறது. இவர் சொல்வது சரித்திரமல்ல, புராணம் என்பதை மறக்கலாகாது.

மேற்கூறியவை யாவும் செய்யுள் நூல்கள். வைணவ மரபில் கி.பி. 1290-இல் பின்பழகிய பெருமான் ஜீயர் என்ற பெரியவர் எழுதியிருக்கிற குரு பரம்பராப்பிரபாவம் என்ற மணிப்பிரவாள உரைநடை நூல் ஆழ்வார் ஆசாரியர் வரலாறுகளைக் கூறுவது. ஆதலினால் அதுவும் வரலாற்றுக்கு ஆதாரமாகிறது. இந்த ஜீயருக்குப் பின் பலர் பின்னும்

புதிய கற்பனைகளைக் கலந்து 12 ஆயிரப்படி முதலான நூல் களாகக் குரு பரம்பரையை எழுதியிருக்கிறார்கள். குரு பரம்பரைப் பிரபாவம் ஆறாயிரப்படியையும் பின்னால் வந்த பன்னீராயிரப் படியையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, காலப் போக்கில் வரலாற்றில் எத்தனை ஆதாரமற்றவை சேர்ந்து விடுகின்றன என்பதை நன்கு உணரலாம். அன்றியும் இந்த (20 ஆம்) நூற்றாண்டில் ஸ்ரீனிவாசாசாரியர் எழுதிய திவ்விய சூரி சரிதம் என்ற தமிழ்ச் செய்யுள் நூல் ஆழ்வார் ஆசாரியர் வரலாறுகளைச் சொல்வ தாக 2224 பாடல்களால் எழுதி வெளியிடப்பட்டுள்ளது. ஒருகால் புலவர் புராணம் இதற்கு வழிகாட்டியாக இருத்தல் கூடும்.

புலவர் புராணத்தில் தண்டபாணி சுவாமிகள் குமர குருபர சுவாமிகள் சரித்திரத்தை 42 பாடல்களால் பாடி யிருக்கிறார். இந்தக் குமரகுருபர சுவாமிகள் வரலாற்றைச் சொல்வதற்கு நமக்கு உள்ள ஆதாரங்கள் மூன்று.

ஒன்று குமரகுருபர சுவாமிகள் வழியாக வந்து இன்றும் செம்மையாகப் பணிபுரிந்து வருகின்ற திருப்பனந்தாள் காசி மடத்தார் கொண்டிருக்கிற வரலாறு.

இரண்டாவது சென்ற நூற்றாண்டின் பிற்பாதியில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை எழுதியுள்ள குமரகுருபர சுவாமிகள் சரித்திரம். மகாவித்துவான், குமர குருபர சுவாமிகள், திருவாவடுதுறை சிவஞான யோகிகள் ஆகிய இருவருடைய வரலாறுகளையும் தனித்தனிப்புராணம் போலப் பாட எண்ணினார். குமரகுருபருடைய வாழ்க்கையைப் பாடி முடித்து விட்டார். சிவஞான சுவாமி யின் வாழ்க்கையைப் பாட எண்ணிப் பாடிய போது பாயிரப் பகுதி கூடப் பூர்த்தியாகவில்லை; நின்று விட்டது. மற்றப்படி குமரகுருபருடைய வரலாற்றை எண்ணியபோது

திருவாவடுதுறையிலிருந்து எழுதிய காரணத்தால் அங்குள்ளோர் சொல்லிய உண்மையல்லாத பல கதைகளையும் உண்மையென நம்பி இவர் வரலாறு எழுதிவிட்டார்.[1] இதன் சுருக்கம் பின்னால் தனியே உள்ளது.[2]

மூன்றாவது தண்டபாணி சுவாமிகள் பாடுகின்ற வரலாறு. இதிலுள்ள பல செய்திகள் செவி வழக்காகவே கலந்து விட்டன. இத்தனையும் நம்பித்தான் குமரகுருபர சுவாமிகள் வரலாற்றை உருவாக்க வேண்டியிருக்கிறது. அவருடைய நூல்கள் பல தனித்தனி வெளியீடுகளாகப் பலர் எழுதி அச்சிட்டிருக்கிறார்கள். அவற்றுள் அவர்கள் எழுதியுள்ள வாழ்க்கைக் குறிப்புக்களும் இந்த வரலாற்றுக்குத் துணையாக நிற்கும். முக்கியமான விவரங்களில் எல்லாவற்றிலும் எந்த மாறுதலும் இல்லை. ஆயினும் பலர் மிகுந்த கற்பனைகளைச் சேர்த்திருக்கிறார்கள். அவையும் ஆங்காங்குச் சுட்டப்பெறும்.

## ஸ்ரீ வைகுண்டம்

தென்பாண்டி நாட்டில் பொருனையாற்றின் வடகரையில் ஸ்ரீவைகுண்டம் என்று பெயர் வழங்குகின்ற ஒரு திருமால் தலம் உள்ளது. பொருனையாற்றின் கரையில் ஒன்பது திருப்பதிகள்[3] என்ற திருமால் தலங்கள் மங்களா

1. இதுபற்றிய ஐயரவர்களுடைய விளக்கம், இந்த நூலில் பின்னால் குமரகுருபர சுவாமிகளைப் போற்றினோர்—3 என்ற தலைப்பில் உள்ளது. அங்குக் காண்க'
2. அனுபந்தம் காண்க.
3. நவ திருப்பதிகளாவன : திருக்குருகூர், குளந்தை, திருக்கோளூர், தொலைவில்லிமங்கலம் (இரட்டைத் திருப்பதி) புளிங்குடி, திருப்பேரை, வரகுணமங்கை, ஸ்ரீவைகுந்தம். நவகயிலாசங்களாவன : பாபநாசம், சேரன்மாதேவி, கோடகநல்லூர், குன்றத்தூர், முரப்பநாடு, சீவைகுந்தம், தென்திருப்பேரை, இராசபதி, சேர்ந்த பூமங்கலம் என்னும் ஒன்பது. இவற்றுட் சில இன்று நல்ல நிலைமையில் இல்லை.

சாசனம் பெற்றவை உள்ளன. அவை நவ திருப்பதிகள் என்று பெயர் பெறும். ஒன்பது கயிலாசங்கள் என்ற சிவஸ்தலங்களும் அமைந்திருப்பதாக ஐதிகம். அத்திருமால் தலங்களில் ஒன்று இந்த ஸ்ரீவைகுண்டம். இதன் இடப்புறப் பகுதி கயிலாசபுரம் என்று பெயர் பெறும். இந்த ஸ்ரீவைகுண்டமும் இந்தக் கயிலாசபுரமும் பழமையான பெரிய கற்கோயில்கள்.

அங்கு 17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சைவ வேளாளர் மரபில் உதித்துத் தமிழ்ப் புலமை மிக்கவராய்ச் சண்முகசிகாமணி என்ற கவிராயர் வாழ்ந்து வந்தார். அவருடைய மனைவியார் சிவகாம சுந்தரி அம்மையார். முருக பக்திமிக்கவர்களான இவர்களுக்குச் சில காலம் புத்திரப் பேறின்மையால் இவர்கள் திருச்செந்தூர் முருகனை உபாசித்து வந்தார்கள். பின்னும் நாட்கள் சில செல்லவும் இருவருக்கும் ஓர் ஆண் குழந்தை பிறக்க, இவர்கள் முருகனது அருள் என்றே பாவித்து அக்குழந்தைக்குக் குருநாதனாகிய முருகப்பெருமானுடைய குமரகுருபரன் என்ற பெயர் சூட்டி, உரிய கிரியைகள் யாவும் குறைவறச் செய்து வளர்த்து வந்தார்கள்.

அக்குழந்தை ஐந்தாண்டு வரையில் எந்தப் பேச்சும் பேசாமல் ஊமை போல இருந்தமையால் குழந்தை ஊமை என்றே பெற்றோர் எண்ணினார்கள். இது அவர்களுக்கு மிகுந்த வருத்தம் அளித்தது. ஐந்து வயதானபோது, பேசாது என்று உறுதியாகத் தெரிந்தபின், பெற்றோர் குழந்தையை ஏந்திக் கொண்டு தம் வழிபடு கடவுளாகிய திருச்செந்தூர் முருகன் சந்நிதியை அடைந்து தம் குறையைச் சொல்லி முறையிடுவாராயினர்.

### திருச்செந்தூர்

திருச்செந்தூரில் பெற்றோர் இருவரும் உலக வழக்கை யொட்டி ஒரு மண்டல காலமாகிய 45 நாள் வரையில் நாள்

தோறும் தவறாது வதனாரம்பம் என்ற கடல் தீர்த்தத்தில் நீராடி, முக்காலமும் முருகனைத் தரிசித்து ஒரு பொழுதே உணவருந்திச் சந்நிதிக்கு முன்னுள்ள சண்முகவிலாசத்தில் தங்கியிருந்து கொண்டு, இரவு கண் துயிலாது விரதம் இருக்கலானார்கள். 45 நாள் விரதம் முடிவதற்குள் முருகப் பெருமான் தங்கள் குறையைத் தீர்த்துக் குழந்தையைப் பேச வைக்காவிட்டால் தாங்கள் இருவரும் உயிர் துறப்பது என்று உறுதி பூண்டு வழிபட்டுக் கொண்டிருந்தார்கள். விரத கால எல்லையாகிய 45ஆம் நாள் இரவு கடையாமத்தில் முருகன் இவர்களுடைய குறையைத் தீர்த்து வைக்கும் திருவுள்ளம் உடையவனாய்ச் சண்முக விலாசத்தில் உறங்குகின்ற இவர் கள் அருகில் வந்து, 'குமரகுருபரா' என்று குழந்தையை அழைத்துத் தட்டி எழுப்பினான். அருள் வசத்தால் குழந்தை விழித்துக் கொண்டு எழுந்து, தம்முன் கோயில் அர்ச்சகர் வடிவத்தோடு வந்துநின்ற முருகப்பெருமானைத் தெரிந்து கொள்ளாவிட்டாலும், பக்தியோடு எழுந்து நின்றது. வந்த பெருமான் குழந்தையின் நாவிலே தம்முடைய வேலால் தமக்குரிய ஆறெழுத்து மந்திரத்தை எழுதி, "குழந்தாய், நமது விசுவரூபதரிசனம்[2] காண வருவாயாக" என்று கூறி மறைந்து விட்டார். இந்தப் புதிய அனுபவத்தை உணர்த்துவதற்காகக் குழந்தை தம் பெற்றோரை எழுப்பினார். அப்போதே குழந்தையிடம் முருகன் அருள் முழுமையாகப் பதிந்து அருட்குழந்தையாக ஆகிவிட்டார். பேசும் ஆற்றலை முருகன் அளித்திருந்தமை யினால் பெற்றோரை நோக்கி 'அம்மா அப்பா' என்று வாயினால் சொல்லி அழைத்தார்.

---

1. முருகன் இவ்வாறு அழைத்த பிறகுதான் குழந்தைக்குக் குமரகுருபரன் என்று பெயர் அமைந்தது என்று சொல்வதும் உண்டு.
2. விசுவரூபதரிசனம் என்பது அதிகாலையில் திருப்பள்ளி எழுச்சி நேரத்தில் பெருமானைத் தரிசித்தலாகும்.

பெற்றோர் துடித்து எழுந்தார்கள். புதல்வருடைய குரல் அவர்களுக்குப் புதிதல்லவா ? புதிய ஒளிவிடும் முகத்தோடு நின்ற புதல்வரை ஆனந்தத்தோடு வாரி எடுத்து அணைத்துக் கொண்டார்கள். தங்கள் தவத்துக்கு இரங்கி முருகன் குழந்தையைப் பேசவைத்துவிட்டான் என்று அறிந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள். அதன்மேல் குழந்தை முருகன் அர்ச்சகராக வந்து தமக்கு அருள் செய்த விவரத்தைச் சொல்லால் எடுத்துச் சொன்னார். உடனே பெற்றோர் முருகனுடைய அருளை எண்ணி வியப்பும் மகிழ் வும் ஒருங்கே அடைந்து, தூய்மை செய்து கொண்டு திருநீறு அணிந்து, முருகன் கட்டளையிட்டவாறே குழந்தையையும் அழைத்துக் கொண்டு சந்நிதிக்குச் சென்று விசுவரூப தரிசனம் செய்தார்கள்.

புதிதாக வாயால் பேசுகின்ற ஆற்றல் வந்த இந்தத் தெய்வக்குழந்தை திருவருளாலே பாடும் சக்தி பெற்றுப் "பூ" என்ற மங்கல மொழியால் தொடங்கிப்

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும்—

என்ற இரண்டு அடிகளையும் தொடக்கமாக உடைய நீண்ட கலிவெண்பாப் பாடலை விரிவாகப் பாடினார். இப்பாடல் திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா என்று பெயர் பெறுகிறது. இதனுள் முருகப் பெருமான் தமக்கு உணர்த்திய தாகிய கடவுள் நிலை, கடவுள் உயிர்களுக்கு அருளும் முறை, முருகனது திருவுருவம், அவனுடைய சரித்திரம், இறுதியாகத் தமது குழந்தைப் பருவ நிலைக்கு ஏற்பத் தாம் அவனை வேண்டும் வரம் ஆகிய இத்தனையும் அழகாகப் பாடினார். இது முருகப்பெருமானுக்கு மிக்க உவப்பளித்தது என்பது சொல்ல வேண்டியதில்லை. கோயிலுக்கு வந்திருந்த அன்பர் கள் இந்தத் தம்பதிகளுடைய பிரார்த்தனைக்கு இரங்கி

முருகப் பெருமான் இவர்களுடைய ஊமைக் குழந்தைக்குப் பேசும் ஆற்றலை அருள் செய்த பெருங் கருணைத் திறத்தை நேரில் கண்டு வியந்து போற்றினார்கள்.

பெற்றோர் முருகன் சந்நிதியில் குழந்தையை வணங்கச் செய்து முருகன் திருநீற்றுப் பிரசாதத்தைப் பெற்றுக் குழந்தைக்கு அணிவித்துக் கோயிலை வலம் வந்து பின் குழந்தையை ஏந்திக் கொண்டு தாங்கள் தங்கியிருந்த இடம் நோக்கிப் புறப்பட்டார்கள். இதற்குள் இவ் ஊமைக் குழந்தை பேசிப்பாடிய செய்தி ஊர் முழுதும் பரவ, ஊர் மக்கள் அனைவரும் இந்த அற்புதக் குழந்தையைக் காணக் கோயிலுக்கே வந்துவிட்டார்கள். இல்லம் நோக்கிப் புறப் பட்ட பெற்றோரோடு அவர்களும் வீடு வரையில். வந்து இவர்களை வீட்டில் விட்டுச் சென்றது ஒரு பெருவிழா ஊர்வலமாக அமைந்தது.

அடுத்த சில தினங்களில், பெற்றோர் குழந்தையை அழைத்துக்கொண்டு தங்கள் ஊர் திரும்பினார்கள். வந்த மறுநாள் கயிலாயபுரம் கோயிலை அடைந்து அங்குக் கயிலாசநாதரையும் தேவி சிவகாமியம்மையையும் குழந்தை யோடு வழிபட்டார்கள்.

இவ்வாறு அருள்பெற்ற குழந்தை கதைகளில் சொல்கிற மாதிரி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது என்று நாம் சொல்லலாம். அந்தக் குடும்பத்தினரின் மகிழ்ச்சியை அளந்து சொல்ல முடியாது. இவர் முருகன் மீது பாடிய பாடல் திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா என்று பெயர். பெற்றுத் தமிழ் நாடெங்கும் இன்று வரையில் பிரசித்தமாக வழங்கி வருகிறது.

கயிலாசபுரத்தில் உள்ள சிவாலயம் கயிலாசநாதர் கோயில் என்று பெயர் பெறும். அங்கு அம்பிகை திருநாமம்

சிவகாமசுந்தரி. அங்குப் போய் வழிபட்ட காலத்தில் குமர குருபரர் சுவாமி மீது **கயிலைக் கலம்பகம்**[1] என்றவொரு பிரபந்தம் பாடினார். ஐந்து வயது வரையில் ஊமையா யிருந்து முருகனுடைய அருளால் பேசும் ஆற்றல் பெற்ற சிறு குழந்தைக்குச் சம்பிரதாயமான கல்வி விளைவது பெரிதன்று. ஆனால் இவருக்குத் திருவருளே கல்வி விளையும் களமாக அமைந்தது. தாம் பாடிய கந்தர் கலிவெண்பா இறுதியில் 'எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து பேசும் இயல் பல்காப்பியத் தொகையும் அறியும் பழுத்த தமிழ்ப் புலமை' இவர் கேட்டுப் பெற்றார் ஆதலினாலே, கலம்பகம் பாடியது ஒரு பெரிய காரியம் என்று நாம் நினைக்க வேண்டியதில்லை.

குழந்தை பிள்ளைப் பருவம் எய்தியது. அப்பிள்ளையின் உள்ளத்தில் ஒரே எண்ணம் இருந்தது என்று நாம் இப்போது அறியலாம், அப்போது யாருக்கும் தெரியாது. திருவருளே அக்குழந்தையைப் பேசச் செய்த காரணத்தால் அத் திருவருளே ஒரு ஞானாசிரியரைப் பெறவேண்டும், அதையே முருகனிடம் வேண்டவேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் ஓங்கச் செய்திருந்தது. நாள்தோறும் தம்மூராகிய கயிலாச புரம் முருகன்கோயிலிலும் திருச்செந்தூரிலும் சென்று ஞானா சிரியர் வேண்டும் என்ற ஒரு வேண்டுகோளைச் சொல்லி வழி பட்டு வந்தார். இந்த அடங்காத வேட்கையோடு கோயிலை வலம்வந்து கொண்டிருந்தகாலத்தில்,ஒருநாள் அவர் கேட்கும் படியாகக் ''குழந்தாய், நீ வடதிசை யாத்திரை செய்து கொண்டு பல தலங்களும் சென்று வழிபட்டு வருவாயாக, அவ்வாறு வழிபடும் காலத்துக் காசிவரை செல்வாயாக. செல்லும் காலத்து எந்தச் சந்நிதியில் உன் வாக்குத் தடைப் படுகிறதோ அந்தச் சந்நிதியே நீ ஞானம் பெறுவதற்கான இடம் என்று அறிவாயாக'' என்று முருகன் அசரீரியாக இக் குழந்தைக்கு உணர்த்தினான். கேட்ட குமரகுருபரர் மிகுந்த

---

1. இக்கயிலைக் கலம்பகம் இன்று கிடைக்கவில்லை.

மகிழ்ச்சி அடைந்து பெருமானுடைய இந்த அருளையும் தம் பெற்றோர்க்கு உணர்த்தினார். தொடர்ந்து கயிலாசபுரத்தில் சிலகாலம் தங்கி அங்குக் கோயில் கொண்டிருக்கும் கயிலாசநாதரை வழிபட்டதோடு திருச்செந்தூர் முருகனையும் அடிக்கடி சென்று வழிபட்டு வந்தார்.

இதற்கிடையில் இவருக்கு ஒரு தம்பி பிறந்தான். அவனுக்கு முருகன் பெயரையே இட்டுப் பெற்றோர் கருத்தோடு வளர்த்து வந்தார்கள். ஞானநாட்டம் கொண்ட தம் மூத்த புதல்வன் எப்படியும் தங்களை விட்டுப் பிரிந்து செல்வான் என்று பெற்றோர் மனத்தினுள் ஓர் அச்சம் அடைந்தபோதிலும் தங்களுக்கு மற்றோர் ஆண் மகவு பிறந்திருந்தமையால் அவன் வளர்ந்து பிள்ளைப்பருவம் அடைய இவர்களுக்கு அதுவே மகிழ்ச்சியும், ஆறுதலும் தந்தது. குமரகுருபரருடைய தம்பி குமாரகவி என்ற பெயர் சூட்டப்பெற்றுப் பிள்ளைப் பருவம் அடைந்து பெற்றோரை மகிழ்வித்தான்,

உரிய காலத்தில் குமரகுருபரர் ஒரு நல்ல நாள் நிச்சயித்துப் பெற்றோரை வணங்கிக் கயிலாசநாதரையும் முருகனையும் வழிபட்டுத் தம்முடைய ஞானயாத்திரையைத் தொடங்கினார். தம்பியும் உடன் வந்தார்,

## மதுரை

எல்லோரும், மதுரையே மிகப் பெரிய சிவக்ஷேத்திரமாக இருந்தமையாலும், அதன் அருகிலேயே திருப்பரங்குன்றம் என்ற பிரசித்தமான முருகன் தலம் இருந்தமையாலும் மதுரையையே யாத்திரைக்குரிய முதலிடமாகச் சொல்ல, இவரும் மதுரை நோக்கிப் புறப்படலானார். இவருக்கு அருள் செய்த முருகனுக்குத் திருச்செந்தூர் ஒரு படை வீடாக இருந்ததுபோலத் திருப்பரங்குன்றமும் மற்றொரு படை வீடு. தம் ஊர் எல்லையிலேயே பெற்றோரை நிறுத்திவிட்டுத்

தம்பி ஒருவரையுமே உடன் கொண்டு புறப்பட்டார். இரு சிறு பிள்ளைகள் திருவருளே துணையாகப் பிரயாண வசதி இல்லாத அக்காலத்தில் இவ்வாறு யாத்திரை செய்வதில் உள்ள பெருங்கஷ்டத்தை இன்று நாம் நினைத்துப் பார்க்கவும் முடியாது.

அக்காலம் தெய்வ யக்தியும் தலயாத்திரையும் மிகுந் திருந்த காலமாதலால், பிரயாணத்தில் நடக்க வேண்டும் என்பது ஒன்று தவிர, உணவு முதலிய எல்லாவற்றுக்கும் ஆங்காங்கு உள்ள சைவ மக்கள் நன்முறையில் வசதி செய்திருந்தார்கள். மதுரையை நோக்கிப் புறப்பட்ட குமர குருபரர் எவ்விதத் துன்பமும் இல்லாமல் உரிய காலத்தில் மதுரையை அடைந்தார்.

இவருடைய புகழ் மதுரைக்கு முன்னமே எட்டியிருந்தது. திருச்செந்தூர் முருகன் அருள் பெற்ற குழந்தை வருகிற தென்பதை நகர மக்கள் அறிந்து கொண்டு, இவர் நகர் புகுமுன் எதிர் கொண்டு நகர எல்லையில் வரவேற்றுப் பல சிறப்புக்கள் செய்து ஒருநன்மடத்தில் இருக்கச் செய்து, காலந் தோறும் மீனாட்சி சுந்தரேசர் ஆலயத்தில் சென்று வழிபடுவ தற்கு ஆவனவெல்லாம் செய்தார்கள்.

அங்கயற்கண் அம்மையோடு எழுந்தருளிய சுந்தரேசப் பெருமானைச் சிலநாள் முறையாக வழிபட்டு வந்து பெருமான் மீது மதுரைக் கலம்பகம் என்ற ஒரு பிரபந்தம் பாடினார். இவ்வாறு குமரகுருபரர் பாடும் பாடல்களைத் தம்பியாகிய குமாரகவி பட்டோலை இட்டு வந்தார். பின்னும் சில நாளில் அங்கயற்கண் அம்மை மீது மீனாட்சி யம்மை பிள்ளைத் தமிழ் என்று மதுரம் சொரிகின்ற ஓர் அற்புதமான பிள்ளைத்தமிழ் பாடிமுடித்தார். (அங்கயற் கண்ணம்மை—தமிழ்; மீனாட்சி—வடமொழி.)

தந்தையும் தாயுமாகிய சுந்தரேசரையும், மீனாட்சியையும் சொல்மாலையால் துதித்த பிறகு குமரகுருபரர் சேயாகிய முருகனைத் தரிசிக்கும் நோக்கத்தோடு மதுரையின் அருகில் இருந்த முருகனுக்குப் பிரசித்தமான படைவீடாகிய திருப்பரங்குன்றத்தைத் தரிசிக்க எண்ணி ஒரு நாள் தம் தம்பியோடும் உடன் வந்த சில அன்பர்களோடும் அங்கு எழுந்தருளிக் காலை நேரத்தில் முருகன் சந்நிதியில் நின்று தரிசித்துக் கொண்டிருந்தார்.

அக்காலத்தில் மதுரையில் முன்னிருந்த பாண்டியர் ஆட்சி மறைந்து பின்னர் முகம்மதியர் ஆட்சி ஏற்பட்டுச் சைவம் சீர்குலைந்தது. அப்போது விஜயநகரத்தில் ஆட்சி புரிந்த ராயருடைய பிரதிநிதியாகிய குமார கம்பணன் என்ற தலைவன் தன் படையோடு வந்து முகம்மதியரைத் துரத்தி விட்டு அங்குத் தங்கள் படைத்தலைவரில் ஒருவனான நாயக்கருடைய ஆட்சியை ஏற்படுத்தியிருந்தான். அந்த நாயக்கர் பரம்பரையில் திருமலைநாயக்கன் (1623-1659) என்ற ஒரு பெருவீரன் அச்சயமயம் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் வீரத்தாலும் செய்த தருமங்களாலும் பக்திப் பெருக்காலும் கட்டிய கோயிற் கட்டிடங்களின் பெருமையாலும் வரலாற்றில் மிக்க புகழ் பெற்றிருந்தான். குமரகுருபரர் மதுரை சென்றது இந்த நாயக்கன் ஆட்சிக்காலம். இவன் மீனாட்சியம்மையிடத்து அளவிறந்த பக்தியுடையவன். குமரகுருபரர் திருப்பரங்குன்றம் செல்வதற்கு முதல்நாள் இரவு அம்மை இவன் கனவில் தோன்றிக் "குமரகுருபரன் என்ற நமது பக்தன் சீவைகுண்டத்திலிருந்து இங்கு வந்திருக்கிறான். அவன் நம் புதல்வனாகிய முருகன் அருளைப் பெற்றவன். நாளை அவன் திருப்பரங்குன்றம் முருகனைத் தரிசிப்பதற்காகச் செல்கிறான். அவன் நம் மீது சிறப்பான ஒரு பிள்ளைத் தமிழ் பாடிவந்திருக்கிறான். நீ நாளை திருப்பரங்குன்றம் சென்று உரிய சிறப்புக்களோடு குமர

குருபரனை மதுரைக்கு அழைத்து வந்து அவன் பாடிய பிள்ளைத்தமிழை நம் சந்நிதியில் அரங்கேற்றம் செய்விப்பாயாக' என்று கட்டளையிட்டார்.

கேட்டு விழித்த நாயக்கன் மிகுந்த ஆச்சரியமடைந்து, தன் கனவை மந்திரிமாருக்கும் பிறருக்கும் சொல்லி, அதிகாலையில் தன் பரிவாரங்களோடும் படைகளோடும் திருப்பரங்குன்றத்தை நோக்கிப் புறப்பட்டுச் சென்றான். குமரகுருபரரைக் கண்டு வணங்கி அவரையும் அவர் தம்பியை யும் பிள்ளைத் தமிழ் எழுதிய சுவடியையும் யானைமேல் ஏற்றி மதுரைக்கு அழைத்துவந்து நகர்வலம் செய்வித்து அம்மை சந்நிதிக்கு அழைத்து வந்தான். அரங்கேற்றத்துக்கு ஆவன செய்திருந்தான்.

அரங்கேற்றத்துக்காக அவைக்குச் செல்லுமுன் குமர குருபரர் ஆலயம் சென்று சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்த பின் ''மீனாட்சி அம்மையரது சந்நிதியில் சேர்ந்து அவ்வம்மையாரை நமஸ்கரித்து எழுந்து நின்றார். அப்பொழுது மீனாட்சியம்மையார் தெய்வத்தன்மை பொருந்திய தமது அரிய திருக்கோலத்தை அவருக்குக் காட்டி யருளினார். சுவாமிகள் அத்திருக்கோலத்தைத் தரிசித்து ''அடியேன் செய்த பிள்ளைத் தமிழுக்கு இது பரிசு போலும்'' என்று நினைத்துப் பேராச்சரியமும் பெருமகிழ்வும் அடைந் தார். அரங்கேற்ற மண்டபம் வந்தபோது உரியமுறையில் பாடற்சுவடிக்குப் பூசனையெல்லாம் செய்யப் பெற்றுக் குமர குருபரரை உயர்ந்த ஆசனத்தில் இருத்தி அம்மை சந்நிதியில் அரங்கேற்ற ஏற்பாடுகள் அனைத்தும் நிறைவேறின. அம்மை கட்டளைப்படி நூலைப் பாடி உரைக்குமாறு அவரை மன்னன் வேண்டினான்.

தம்பியார் ஏடு வாசிக்க, குமரகுருபரர் ஒவ்வொரு பாடலாகப் பாடி விளக்கி உரைத்து அரங்கேற்றம் செய்து

வரலானார். தினம் ஒரு பருவமாகப் பத்துப் பருவங்களும் பத்து நாளில் வாசித்து விளக்கியுரைக்கப் பெற்றன.

அரங்கேற்றம் தொடங்கிக் காப்புச் செய்யுள் முடித்தவுடனே, அவையில் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்தது. குமரகுருபரருக்குப் பெருஞ்சிறப்புச் செய்ய அம்மையார் திருவுளங் கொண்டார். இதை யாரே அறிய முடியும்?

மீனாட்சி யம்மைத்கு த் தினந்தோறும் பூசை செய்யும் பட்டர் மதுரையில் பிரசித்தமானவர். அவருடைய ஐந்து வயது மகள் அரசவையுள் இருந்த எல்லாருக்கும் நன்கு தெரிந்த குழந்தை. பட்டர் மகளானதால் நாயக்கரிடத்தும் விசேஷ சலுகை உண்டு. பாடல் தொடங்கியவுடன் அம்மையார் இக்குழந்தை வடிவம் கொண்டு அவைக்கு வந்து நாயக்கர் மடியில் ஏறி அமர்ந்து கொண்டாள். அம்மையே இந்தக் கோலத்தில் வந்தாள் என்பது .ஒருவருக்கும் தெரியாது.

நான்கு நாளும் இவ்வாறு நிகழ்ந்தது. ஐந்தாம் நாள் முத்தப்பருவம் தொடங்கிக் குமரகுருபரர் அதற்கு விளக்கம் சொல்லத் தொடங்கிய நேரத்தில் நாயக்கர் மடியில் அமர்ந்திருந்த குழந்தை எழுந்து அவர் கழுத்திலிருந்த முத்து மாலையை எடுத்துக் குமரகுருபரர் கழுத்தில் இட்டு உடனே மறைந்து விட்டாள். பாடல் பின்வருவது :

**காலத் தொடுகற் பனைகடந்த**
**கருவூலத்துப் பழம்பாடற்**
**கலைமாச் செல்வர் தேடிவைத்த**
**கடவுள் மணியே, உயிரால**
**வாலத் துணர்வு நீர்பாய்ச்சி**
**வளர்ப்பார்க் கொளிபூத் தளிபழுத்த**
**மலர்க்கற் பகமே, எழுதாச்சொல்**
**மழலை ததும்பு பசுங்குதலைச்**

சோலைக் கிளியே, உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே, முத்தந் தருகவே!
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய், முத்தந் தருகவே!

குழந்தை மறைந்தவுடனேதான் குமரகுருபரருக்கும் அரசருக்கும் அவையினர் அனைவருக்கும் அம்மையே குழந்தை வடிவம் தாங்கி வந்து குமரகுருபரருக்குத் தம் பாராட்டைத் தெரிவித்தார் என்ற உணர்வு வந்தது. எல்லோரும் மிகுந்த கோஷமிட்டு அம்மையின் கருணையைத் துதித்ததோடு குழந்தையையும் துதித்தார்கள். அரங்கேற்றம் தொடர்ந்து நடைபெற்று முத்தப்பருவம் அன்று முடிந்தது.

மறுநாள் வருகைப்பருவம், அதில் 9ஆம் பாடல் ''தொடுக்கும் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே'' என்ற இன்று பிரசித்தமாயுள்ள பாடல். இப்பாடலைக் குமரகுருபரர் விளக்கி உரைத்து முடித்தவுடனே திருமலை நாயக்க மன்னன் ''மீண்டும் ஒருமுறை இதை உரைத்தருளுக'' என்று வேண்டிக்கொண்டான். அவ்வாறே குமரகுருபரர் இரண்டாம் முறையும் அதற்கு விளக்கம் சொன்னார்.[1] (இப்பாடல் பின்னே மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் என்ற தலைப்பில் முழுமையாகச் சொல்லப்பட்டுள்ளது.) உரிய காலத்தில் அரங்கேற்றம் நிறைவேறியது. நாயக்கன் குமர குருபரருக்குப் பெருஞ் சிறப்புக்களைச் செய்தான்.

---

1. இந்தப்பாடல் அரங்கேற்றம் வரையில் அம்மையார் குழந்தையாக மன்னன் மடியிலேயே வீற்றிருந்து இப்பாடலை இவரே இரண்டாம் முறை விளக்கி யுரைக்கும்படி கேட்டுப் பின் மறைந்தார் என்றும் ஒரு வரலாறு சொல்வதுண்டு.

பின்னர்ச் சிலகாலம் இவர் நாயக்கனுடைய வேண்டு கோளுக்கு இணங்கி மதுரையிலேயே தங்கிச் சுந்தரேசர்—அம்மை—திருப்பரங்குன்றம் முருகன் ஆகியோரைத் தினந் தோறும் தரிசித்து மகிழ்ந்திருந்தார்.[2]

திருமலை நாயக்க மன்னன் சிறந்த வீரனாய் இருந்த போதிலும் கூட, அக்காலத்து அரசியல் பூசல்கள் மிக்க அதிகம். அவனிடத்துத் தளவாய் இராமப்பையன் என்ற சிறந்த படைத் தலைவன் இருந்தான். இருந்தும் போர்கள் அதிகம். சேதுபதியோடு இராமேசுரத்தில் போர். கேரள நாட்டில் போர். இப்படியெல்லாம் அதிகமான போர்கள் நடந்து வந்தன. அவை காரணமாக அவன் மிகுந்த கவலை யில் ஆழ்ந்திருந்ததைக் குமரகுருபரர் ஒருசமயம் கண்டார். ஒருநாள் இக்காரணத்தால் அவன் நெடுநேரம் உணவு கொள்ளாமல் சிந்தனையில் மூழ்கி இருந்ததை அவடரிம் அதிகாரிகள் மிக்க கவலையோடு வந்து சொன்னார்கள். இவர் அருளாளர் ஆதலால் மன்னன் மனத்தைத் தேற்றக் கூடிய உபதேசம் ஏதேனும் செய்யக்கூடும் என்பது அவர்கள் எண்ணம். நாயக்கன் தம்மிடம் பழகிய நற்பழக்கம் காரண மாகக் குமரகுருபரர் அவனை அழைத்து நல்லுரை கூறிக் கவலையால் மனம் மாழ்குதல் கூடாதுஎன உணர்த்தி,

வகுத்தான் வகுத்த வகைஅல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது

---

2. அவ்வாறு வாழ்ந்த காலத்தில் இவர் மீனாட்சி யம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணி மாலை என்ற இரண்டு பிரபந்தங்களைச் செய்தார் என்று சொல்வார்கள். ஆனால் இப்பிரபந்தங்கள் குமரமருபரர் வாக்கல்ல என்பது மீனாட்சிசுந்தரம் பிள்ளை—ஐயரவர்கள் போன்ற ஆன்றோர் கருத்து. இப்பிரபந்தங்களைக் குறித்த விளக்கத்தை சுவாமி கள் பாடிய நூல்கள் என்ற இரண்டாம் பகுதியின் இறுதியில் காண்க.

என்ற திருக்குறளைச் சொல்லி அதன் கருத்தை விரித் துரைத்தார்.

கேட்ட நாயக்கன், சுவாமிகள் கூறியவற்றை நன்கு மனத்தில் வாங்கிக் கொண்டான். அப்போது அவன் மனத்தில் சுவாமிகளே இவற்றையெல்லாம் சுருக்கி எளிய நடையில் ஒரு சிறு நூல் நமக்காக எழுதிக் கொடுத்தால் உலகுக்குப் பயன்படுமே என்ற எண்ணம் உதயமாயிற்று. சுவாமிகளை நோக்கி, ''சுவாமி, தாங்கள் எடுத்துக் காட்டிய குறள் கருத்து எனக்கு இப்போது தெளிவாக விளங்குகிறது. ஆனால் தெய்வத் திருக்குறள் மிக்க விரிவாயும் மிக்க நுட்ப மாயும் இருத்தலால் என் போன்றோர்க்கு எளிதில் பொருள் விளங்குமாறு இல்லை. தாங்கள் அருள் கூர்ந்து நான் எளிதில் பொருள் விளங்கிக் கொள்ளுமாறு எளிய சிறிய நூலாக அதன் கருத்துக்களைச் சுருக்கிச் செய்து தர வேண்டுகிறேன்'' என்று குறையிரந்தான்.

குமரகுருபரர் அதற்கிசைந்து தரும நீதியையும் உலகிய லையும் உவமைகளால் விளக்கி நன்கு உளங்கொள்ளக் கூடியமுறையில் நீதிநெறி விளக்கம் என்ற பெயரில் ஒரு புதிய நீதிநூல் செய்து கொடுத்தார். பெற்ற அரசனும் மகிழ்ந் தான். இந்த நூல் இன்று வரையில் மிக்க சிறப்புடைய நல்ல நீதி நூலாக விளங்கி வருகிறது.

பின் பலநாள் கழித்துக் குமரகுருபரர் மதுரையை நீங்கித் திருவாரூரை நோக்கிப் புறப்பட்டார். புறப்படுமுன் மதுரை எல்லையில் தம்முடன் வந்த அரசனையும் பரிவாரங் களையும் நிறுத்தி விட்டுத் தம்முடன் இத்தனை நாளும் துணையாக வந்திருந்த தம் தம்பியை நோக்கி, ''நான் ஞானாசிரியரைத் தேடிச் செல்கிறேன். நீ சீவைகுண்டத் தில் தங்கி மணம் செய்து கொண்டு பெற்றோருக்கு முதுமைப் பருவத்தில் உறுதுணையாக வாழ்வாயாக'' என்று சொல்லி

அவரை ஆசீர்வதித்துக் கயிலாசபுரத்திற்குச் செல்லவிட்டுத் தாம் மீண்டும் யாத்திரை தொடங்கலானார். அவருடைய நாட்டம் ஞானாசாரியரைத் தேடுவதிலேயே சென்றது.

['குமரகுருபரர் மதுரையை நீங்கித் திருவாரூரை நோக்கிப் புறப்பட்ட நிலையைப் பலரும் பின்வரும் முறையில் எழுதியிருக்கிறார்கள். ''நானாவித வாத்தியங்களும் முழங்க விருதுகள் புடைசூழத் தமக்குச் சேருகிற திரவியங்களை அரசர் வேண்டுகோளின்படியே ஒட்டகங்களின் மீது ஏற்றிக் கொண்டு, தாம் சிவிகை மேற்கொண்டு பாண்டிநாடு கடந்து, சோழநாடு புகுந்து ஆங்காங்கு வசிக்கும் அடியார்கள் எதிர்கொண்டு வந்து பணியச் சுவாமி தரிசனம் செய்து கொண்டு அவ்வத் தலங்களிலே சில நாள் வசித்துத் திருவாரூரை யடைந்தார்.

ஞான நாட்டமே கொண்டு ஞானாசிரியரைத் தேடிச் செல்கின்ற இளைஞர், ஸ்ரீ வைகுண்டத்திலேயே பெற்றோரை நிறுத்திவிட்டு மதுரையில் தம்பியையும் நிறுத்திவிட்டு யாத்திரையைத் தொடர்கிறவர் இவ்வளவு ஆடம்பரங்களோடு செல்கிறார்என்பது இயற்கைக்கு மாறு. இவர் நடந்தே செல்கிறார். திருமலை நாயக்கன் கொடுத்த பொருள்களைத் தம்பியோடு பெற்றோருக்கு அனுப்பிவிட்டார். ஒருகால் பக்குவம் மிக்க அடியார் சிலர் இவரோடு உடன் வந்திருக்கக்கூடும். மற்று எவ்வித ஆடம்பரமும் இன்றி இவர் நடந்தே திருவாரூர் நோக்கிச் செல்கிறார்.

திருவாரூர் நோக்கி வரும் வழியில் இவர் திரிசிராப்பள்ளி வழியாக வந்தார் என்றும் அங்கு ஸ்ரீ ரங்கத்தில் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இவரிடம் பூசல் விளைவித்தார் என்றும், இவர் அவரை வெற்றி கொண்டு யாத்திரையைத்

தொடர்ந்து திருவாரூர் அடைந்தார் என்றும் கதைகள் கூறும். அவற்றைத் தனியே ஓர் அனுபந்தத்தில் கூறியிருக்கிறோம்.

## திருவாரூர்

இவர் திருவாரூருக்கு வந்தது திருவருளின் உந்துதல் என்றுதான் தெரிகிறது திருவாரூர் சைவ சமயத்தின் ஆதிகாலம் தொடங்கி மிக்க பெருமையுடைய சிறப்புத் தலமாக உள்ளது. பிரபஞ்சம் எல்லாம் தோன்றுவதற்கு முன் தோன்றியது திருவாரூர் என்பது ஆன்றோர் கருத்து. இக்கருத்தை யெல்லாம் அப்பர் சுவாமிகள், ‘‘ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ’’ எனத் திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் நன்கு புலப்படப் பாடியிருக்கிறார்.

ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும்விண்ணும் தெரித்த நாளோ
மான்மறிக்கை ஏந்தியோர் மாதோர் பாகந்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.

இது பெருமான் திருமகளுக்கு அருள்புரிந்த தலம். முசுகுந்தச் சக்கரவர்த்தி விண்ணுலகில் இந்திரனிடமிருந்த தியாகேசரை இங்குக் கொண்டு வந்து வீதிவிடங்கர் என்ற பெயரால் பிரதிட்டை செய்து வழிபட்ட தலம். இது பஞ்சபூதத்தலங்களில் பிருதிவித்தலமாய் உள்ளது. பிறக்க முத்தி அளிப்பது என்பது இதன் சிறப்பு. மனுநீதிகண்ட சோழர் இங்கு ஆட்சிபுரிந்தார். கறவைக் கன்றைத் தெரியாமல் தம் மகன் தேரில் ஊர்ந்த செயலுக்குப் பிராயச் சித்தமாகச் சோழர் தம் மகனையே தேர்க்காலில் இட்டு

ஊர்ந்த பெருஞ்சிறப்பைப் பெற்றது இத்தலம். இத்தலத்தில் விறன்மிண்ட நாயனார், நமிநந்தி அடிகள், செருத்துணை நாயனார், தண்டி அடிகள் நாயனார், கழற்சிங்கநாயனார் ஆகிய நாயன்மார்கள் தாங்கள் செய்த சிவத்தொண்டுகளின் பயனாக முத்திபெற்றவர்கள். சுந்தரமூர்த்தி நாயனார் பாடுவதற்காகத் திருத்தொண்டத் தொகைக்குப் பெருமான் அடியெடுத்துக் கொடுத்த தலம். அவருக்காகப் பெருமான் பரவை பால் இரவில் இருமுறை தூது நடந்த தலம். தேவாசிரியன் என்னும் ஆயிரக்கால் மண்டபம், கமலாலயம் என்னும் பெரியதிருக்குளம், தியாகேசருக்குக் கோயில் ஐந்து வேலி, குளம் ஐந்து வேலி, ஓடை ஐந்து வேலி என்ற இத்தனைச் சிறப்புக்களும் கொண்டது.

இத்தனைச்சிறப்புக்களோடு, சைவ சித்தாந்தத்துக்குரிய மெய்கண்டாரின் ஞான பரம்பரை, திருக்கயிலாய பரம்பரை என்ற பெயரில் திருவாரூர் வழியாகத் தமிழ்நாட்டில் நீடிக்கிறது. அப்பரம்பரை உமாபதி சிவத்தின்பின் அருள் நமச்சிவாயர் என்று தொடர்ந்து திருவாரூர் (கமலை) ஞானப்பிரகாசர் வழியே குருஞானசம்பந்தர் மூலம் தரும புரத்தில் நிலைபெற்று வளர்ந்து வந்திருக்கிறது. ஞானாசிரி யரைத் தேடிச் சென்ற குமரகுருபரருக்கு இனி ஞானாசிரியர் தருமபுரத்தில் கிடைக்கப் போகிறார், ஆகவே அவர் இப்போது தருமபுரத்துக்கு மூலமான இத்தனைச் சிறப்பும் பொருந்திய திருவாரூரை நோக்கி வந்தது திருவருளின் செயலே.

இவருக்கு முந்திய காலத்தில், இதே குருஞான சம்பந்தர் பாண்டி நாட்டுச் சீவில்லிபுத்தூரில் பிறந்து மதுரை சென்று வழிபட்டுப் பின் திருவாரூருக்குச் சென்று கமலை ஞானப் பிரகாசரின் மாணாக்கர் ஆன வரலாற்றை இவ்விடத்தில் நினைவு கூரலாம்.

குமரகுருபரர் இத்தலத்தில் பலநாள் தங்கித் தியாகேசப் பெருமானை வழிபட்டு வந்தார். அப்போது இத்தலம் சம்பந்தமாகத் திருவாரூர் 'நான்மணிமாலை' என்றவொரு சிறந்த பிரபந்தம் பாடினார். இதுவும் திருவருட் குறிப்பு என்றே கருதவேண்டும்.

திருவாரூரில் தங்கி வன்மீக நாதரையும் தியாகேசரையும் வழிபட்டுக் கொண்டிருந்த குமரகுருபரர், அங்கு ஞானா சாரியராக விளங்கியிருந்த கமலை ஞானப்பிரகாசரைப் பற்றிய செய்திகளைக் கேள்வியுற்றார். ''அவரிடம் ஞானோபதேசம் பெற்றுக் குருஞானசம்பந்தர் என்ற பாண்டி நாட்டு இளைஞர் தருமபுரத்தில் ஒரு சைவமடம் நிறுவி அதில் பக்குவிகளான சைவர்களுக்கு ஞானோபதேசம் செய்தார். அவருடைய ஞானபரம்பரை அன்றும் தொடர்ந் திருந்தது, இன்றும் அங்கு ஞானாசாரியர் இருந்து ஞானோப தேசம் செய்து வருகிறார்'' என்று கேள்வியுற்றார். இப்படிக் கேள்வியுற்றுச் சிலநாள் அங்கேயே வாழ்ந்த பின் ஒரு சமயம் அத்தகைய ஞானாசிரியரைத் தேடிப் போய்க் காணவேண்டும் என்ற அவா உந்த, அவர் அங்கிருந்து மாயூரத்துக்கு அருகிலுள்ள தருமபுரத்தை நோக்கிப் புறப்பட்டார், உரிய காலத்தில் அத்தலத்தை அடைந்தார்.

### தருமபுரம்

இத்தலம் நாயன்மார் பாடல்பெற்ற தலம் அல்ல. திருஞானசம்பந்தர் யாழ்முரி என்ற பண்பாடிய தருமபுரம் என்ற தலம் வேறு, அது காரைக்கால் அருகில் திருநள்ளாறு செல்லும் வழியில் உள்ளது.

இத்தலம் பல சித்தர்கள் பழங்காலத்தில் வாழ்ந்திருந்த இடம். அது பற்றிப்போலும் கமலை ஞானப்பிரகாசர் இங்கு மடம் அமைத்துச் சைவம் வளர்க்குமாறு குருஞான சம்பந்தருக்குக் கட்டளையிட்டு அனுப்பினார். யம தருமராசன் பூசித்தமையால் தருமபுரம்.

குருஞானசம்பந்தர் இங்குத் தம்முடைய சொக்கலிங்க பூசையைப் பிரதிட்டை செய்து ஒரு சைவ சித்தாந்தமடம் நிறுவி அதில் பக்குவிகளுக்கு ஞானோபதேசம் செய்து கொண்டிருந்தார். அவர் முத்தி பெற்றபின் ஆனந்த பரவச தேசிகர் இரண்டாவது குருவானார். பின் சச்சிதானந்த தேசிகர். அவருக்குப் பின் அப்போது ஆசாரிய பீடத்தில் எழுந்தருளியிருந்தவர் நாலாவது பட்டம் ஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகள்.

அவ்வூரை நெருங்கியதும் அங்கு ஒரு சைவ ஞானபீடம் இருப்பதும், ஞானாசாரியர் ஒருவர் இருந்து அடியவர்களுக்கு ஞானோபதேசம் செய்வதும் கேள்வியுற்று அவரைத் தரிசிக்கும் நோக்கோடு அங்குச் சென்றார். சென்றவர் அங்குப் பல சைவத் துறவிகள் ஞான நூல்களைப் பயில்வதும் அவற்றின் பொருளைச் சிந்திப்பதும் விவாதிப்பதுமாக இருந்ததைக் கண்டார்.

இளம் பருவத்தினராய் ஞான ஒளிவீசும் திருமுகத் தினராய் வந்த புதியவரை அங்கிருந்த துறவிகள் கண்டு வரவேற்று முறைப்படி தங்கள் ஆசாரியரிடம் அழைத்துச் சென்றார்கள். குமர குருபரருக்கு அவரைக் கண்டதுமே மனநிறைவு ஏற்பட்டது. அப்போது அங்கு ஆசாரியராய் எழுந்தருளியிருந்தவர் தருமபுர ஆதீனத்தை நிறுவிய முதல் ஆசாரியரான குருஞான சம்பந்தருக்குப் பின் நான்காம் பட்டத்தில் அமர்ந்திருந்த மாசிலாமணி என்ற தேசிகர். அவருடைய திருக்கண் நோக்கம், வந்த இளைஞர் மீது விழுந்தது, இவரை ஆட்கொள்ளும் நோக்கம் அவருக்கு இயல்பாக எழுந்தது. வந்தவர் தாம் அறிந்த முறைப்படி அவ்ஆசாரியரை வணங்கித் தம்மை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டார். இவரைச் சோதித்து அறிவதற்காகச் சைவசமயத் தோத்திர சாத்திரங்

கள் சம்பந்தப்பட்ட பல வினாக்களை ஆசாரியர் வினவிக் கொண்டு வந்தார். குமரகுருபரர் அவற்றுக்கு நன்முறையில் விடை அளித்துக் கொண்டு வந்தார். இது ஆசாரியருக்கு மகிழ்ச்சி தந்தது. இறுதியில் ஆசாரியர், திருத்தொண்டர் புராணத்தில் தடுத்தாட் கொண்ட புராணத்துள் சுந்தர மூர்த்தி சுவாமிகள் தில்லை அடைந்து நடராஜப் பெருமானுடைய திருக்கூத்தைத் தரிசித்த போது பெற்ற அனுபவத்தைச் சொல்லுகின்ற பாடலைச் சொல்லி, அதன் அனுபவப் பொருளைச் சொல்ல முடியுமா என்று கேட்டார். பாடல் பின்வருவது.

**ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள,**
**அளப்பருங் கரணங்கள் நான்கும்**
**சிந்தையே யாக, குணமொரு மூன்றும்**
**திருந்துசாத் துவிகமே யாக,**
**இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த**
**எல்லையில் தனிப் பெருங் கூத்தின்**
**வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து**
**மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்**

என்பது அந்தப்பாடல். அந்தப் பாடலானது நடராஜப் பெருமானைத் தரிசித்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் குவித்த கையோடு நிற்க, அந்தக் கரணங்களும் தொழில் செய்யும் தன்மை நீங்கி அப்படியே நிலைத்து விட்டன என்பதைக் கூறுகின்ற பாடல். இதன் சொற்பொருளாவது "வெவ்வேறாக அறியும் ஐந்து சிறப்புடைய புலன்களும் கண்களின் மூலமே தொழிற் பட்டன. அதாவது அந்தநேரம் செவி கேட்க வில்லை. நா சுவைக்க வில்லை, கண் ஒன்றே தொழிற்பட்டது, மனம், சித்தம், புத்தி. அகங்காரம் என்று நான்காகத்தொழிற்படுகின்ற (அந்தக் கரணங்கள்) உட்கருவி களான நான்கும் தத்தம் தொழிற்பாடின்றிக் கண்ட காட்சியைச் சிந்திப்பதாகிய சித்தம் ஒன்றின் செயற்

பாடாகவே நின்றுவிட்டன. தாமதம் இராசதம் சாத்துவிகம் என்னும் மூன்று குணங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சமயம் தொழிற்படுமேனும், குறித்த சமயம் முதல் இரண்டும் தங்கள் செயல் மறந்து செம்மை பெற்ற சாத்துவிக குணமாகவே அமைந்தன. இவ்வாறு சுந்தரமூர்த்தி சுவாமிகளின் புறக்கருவி உட்கருவி ஆகிய யாவும் ஒரு தன்மையில் நிலைத்து விட்டன. அவ்விதமாக பிறைச் சந்திரனை அணிந்த சடையுடைய கூத்தப் பெருமான் ஆடுகின்ற ஒப்பற்ற மேலான ஆனந்த நடனக் காட்சியினால் தம்மிடம் பெருகியமிகுந்த பேரின்ப வெள்ளத்தில் திளைத்துச் சிறிதும் கலங்கல் இல்லாத மகிழ்ச்சியோடு விளங்கினார்.''

இதுவே அப்பாட்டின் சொற்பொருள். ஆனால் ஆசாரியர் கேட்டது அனுபவப் பொருள். குமரகுருபரர் முருகனுடைய அனுக்கிரகத்தைப் பெற்றிருந்தாலும் அவர் பரஞானத்தைப் பெறவில்லை. ஆதலால் பரஞானத்தால் மட்டும் பெறக்கூடிய அனுபவப் பொருள் இப்போது அவருக்குத் தெரியாது, எனவே அவருக்கு விடை ஏதும் சொல்ல நா எழவில்லை, அந்த நேரம், முருகனுடைய கட்டளைப்படி, தமது வாக்குத் தடைப்பட்ட இடம் என்பதை நன்கு உணர்ந்து ஆசாரியர் திருவடியில் எட்டுறுப்பும் நிலம் தோய விழுந்து வணங்கித் தம்மை ஆட் கொள்ளுமாறு வேண்டினார். ஆசாரியர் இவருக்கு இன்னும் பக்குவம் முதிர வேண்டும் என்பதைத் திருவுளத்தில் அடைத்து ''நீ காசியாத்திரை செய்து வருவாயாக'' என்று பணித்தார்.

குருவின் கட்டளையை மீறும் எண்ணம் இவருக்கு இல்லாத போதிலும், அன்று காசியாத்திரை போவதில் உள்ள பெருந்துன்பங்களையும் போய்த் திரும்புவதில் உள்ள நிச்சய மற்ற நிலையையும் குறிப்பால் ஆசாரியருக்கு உணர்த்தித் தம்மை அப்போதே ஆட்கொள்ளுமாறு

குறையிரந்தார். கேட்ட ஆசாரியர் இவருடைய கருத்தை ஏற்று மகிழ்ந்து, ''அப்படியானால் நீ தில்லைத் தலத்தை யேனும் அடைந்து அங்கு ஒருமண்டலம் நடராச தரிசனம் செய்து கொண்டு இருந்து, மீண்டும் இங்கு வருவாயாக'' என்று கூறிக் குமரகுருபரருக்குச் சமயதீட்சை மட்டும் செய்து விடை கொடுத்து அனுப்பினார்.

குமர குருபரர் தருமபுரத்திலிருந்து புறப்படுகிறார். அவருக்கு ஒரே நினைவு. 'ஒரே ஓட்டமாக ஓடித் தில்லையை அடைந்து நடராஜ தரிசனம் செய்ய வேண்டியதுதானே, ஒரு மண்டலம் 45 நாள் இருக்க வேண்டியதுதானே, இது என்ன பெரிய காரியம்? 45 நாளையும் 45 நிமிஷமாக நான் கழித்து விட்டுத் திரும்பி விடுவேன்' என்று குமரகுருபரர் தமக்குள் எண்ணிக்கொண்டார். அவருடைய இளைய உள்ளம் அதற்கு மேல் சிந்திக்கவில்லை. அவருக்கு மனத்தில் இருந்த ஒரே நினைப்பு குருநாதருடைய பூரணமான அருளைப் பெற வேண்டும், அவரிடம் பூரணமான ஞானம் பெற வேண்டும் என்பது ஒன்றுதான். அவரைப் பிரிந்திருப்பது அவருக்கு மிக்க துன்பமாயிருந்தது. ஆதலால் தில்லைக்குச் சென்று விரைந்து திரும்புவதை மட்டுமே எண்ணியிருந்தார்.

ஆனால் குருநாதருடைய சிந்தனை வேறு. அவர் வருங்காலத்தையும் சிந்திக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். குமரகுருபரர் ஏன் இந்தப் பூமியில் பிறந்தார் என்பது அவருக்குத் தெரியும். முன்னமே திருஞான சம்பந்தருடைய அவதாரத்தையும் கமலை ஞானப்பிரகாசருடைய அவதாரத் தையும், தருமபுரம் குருஞானசம்பந்தருடைய அவதாரத் தையும் நன்கு சிந்தித்து உணர்ந்தவர்; எப்படித் திருவாரூரில் பரமேசுவரனின் கட்டளைப்படி குருஞானசம்பந்தர் என்ற எதிர்காலச் சீடருடைய வரவுக்காகக் கமலை ஞானப்பிரகாசர் சித்தீசுவரத்தின்முன் காத்திருந்தாரோ, அதுபோல, இப்போது தருமபுரத்தில் அதே பரமேசுவரன் கட்டளைப்படி

குமரகுருபரர் என்ற எதிர்கால மாணாக்கருடைய வரவுக்காக தாமும் காத்திருப்பது அவர் ஒருவருக்கே தெரியும். திருவருளே குமரகுருபரரை இந்த ஆசாரியரிடத்துக் கூட்டி வரப் போகிறது. அது வேறு யாருக்கும் தெரியவேண்டிய அவசியமில்லை.

குருஞான சம்பந்தராகிய ஸ்ரீவில்லிபுத்தூர்க் குழந்தை மதுரையில் சொக்கநாதருடைய அருளைப் பெற்றது. அந்தக் குழந்தை சொக்கலிங்கத்தைப் பெற்றும் கூட, பூஜையை உபதேசிப்பதற்கு ஓர் ஆசாரியரைத் தேடிற்று. அது போலவே ஸ்ரீவைகுண்டத்து ஊமைக் குழந்தை திருச்செந்தூர் முருகன் அருளைப் பெற்றும் கூட ஞானாசிரியர் வேண்டும் என்று அலைகிறது. மதுரையில் மீனாட்சி அம்மையின் அருளைப் பெற்றது இக்குழத்தையின் பாக்கியம். அந்த அருள், ஞானாசிரியர் வேண்டும் என்ற லட்சியத்தை நோக்கிப் போவதைத் தடை செய்யவில்லை.

இந்த ஒற்றுமைகளையெல்லாம் ஸ்ரீமாசிலாமணி தேசிகர் சிந்திக்கிறார். அவர் ஞானி ஆனமையினாலே காலம்—300 ஆண்டுகளுக்கு முன் என்பதை மறக்கக் கூடாது. - குமரகுபரர் இவ்வுலகில் செய்ய வேண்டிய சாதனைகள் அவர் கண் முன் தெரிகின்றன. தம் மூல குருவான குரு ஞான சம்பந்தரைத் தருமபுரம் சென்று ஒருமடம் அமைத்து சைவம் பரப்பு என்று அவருடைய குரு கட்டளையிட்டார். ஆகவே இதைச் சிந்தித்த மாசிலாமணி தேசிகர் தாமும் இந்த மாணாக்கரைக் காசிக்குச் சென்று மடம் அமைத்துச் சைவமும் தருமமும் பரப்பு என்று கட்டளையிட எண்ணுகிறார். குரு ஞான சம்பந்தருக்கு நூறு ஆண்டுகளுக்குப் பிற்பட்டு வருகிறார் குமர குருபரர். ஆதலால் நிலைமைகள் மாறு கின்றன. சைவம் பரப்புவதோடு தருமங்களையும் பரப்ப வேண்டும் என்று குரு எண்ணுகிறார்.

எனினும் அவர், வருகின்ற இளைஞருக்குப் பின்னும் பக்குவம் முதிர வேண்டும் என்று நினைக்கிறார். முருகன் அருள் பெற்றிருந்தாலுங்கூட குமரகுருபரருக்குத் தில்லை நடராஜப் பெருமானுடைய தரிசனம் மிகவும் முக்கிய மானது. முன்னே திருவாரூரைக் குறிப்பிட்டோம். ஞானா காசத்தில் ஆனந்தத் தாண்டவம் புரிகின்ற நடராஜப் பெருமானின் தலமாகிய தில்லையின் பெருமை அளவு படாதது. இது கோயில். சிவ பெருமானுடைய ஐந்தொழில் வடிவமே நடராஜ வடிவம். இதுவே சைவ சித்தாந்தத்தின் முதற் பொருளும், முடிவான பொருளும் ஆகும். இதைக் குமரகுருபரர் உபதேசித்துக் காண்பதற்கு முன்னே அனு பவித்துக் காணவேண்டும் என்றும் குரு எண்ணுகிறார். ஆகவே இவரைத் தில்லைக்குச் சென்று ஒரு மண்டலம் தரிசித்துக்கொண்டு தங்கும்படி உத்தரவிடுகிறார்.

## புள்ளிருக்கு வேளூர்

அவ்வாறே குமரகுருபரர் தருமபுரத்திலிருந்து புறப் பட்டுத் தில்லையை நோக்கிச் சென்றார். செல்லுகிற வழியில் இன்று வைத்தீசுவரன்கோயில் என்று வழங்குகின்ற புள்ளிருக்கு வேளூர் உள்ளது.

இத்தலம் சம்பந்தர் அப்பர் இருவர் பதிகங்களும் கொண்டது. புள் (சம்பாதி சடாயு என்று இராமாயணக் கதையில் வரும் கழுகரசர்கள்) இருக்கு (இருக்கு வேதம்) வேள் (முருகன்) ஆகியோர் பூசித்ததால் தலம் இப்பெயர் பெற்றது. இங்கு இறைவன் வயித்திய நாதன் என்ற பெயரில் மக்களுடைய தீரா நோயாகிய பிறவி நோயைத் தீர்க்கிறான் என்பது நம்பிக்கை. இக்கருத்தை அமைத்து அப்பர் சுவாமிகள் பாடிய திருத்தாண்டகப் பாசுரம் எல்லோரும் நன்கறிந்தது.

பேரா யிரம்பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

இதனால் தலத்தின் பெயரே வயித்தீசுவரன் கோயில் என்று இன்று வழங்கி வருகிறது.

'மருளுலாம் மலங்கள் தீர்க்கும் மருந்திவை வயித்திய நாதன்' என்ற சித்தியார் பாடலும் (123) இங்குச் சிந்திக்கத் தக்கது.

சிதம்பரம் செல்வோர், இத்தலம் பிரதான சாலையில் அமைந்துள்ளமையால் இதன் வழியாகத்தான் செல்ல வேண்டும். சுவாமிகளும் எல்லோரையும் போல, இவ்வழியே செல்லும் போது, ஆலயம் சென்று முறையாக சுவாமி வயித்தியநாதரையும் அம்பிகை தையல் நாயகியையும், முத்துக்குமாரசுவாமி என்ற பெயருடைய இத்தலத்து முருகப் பெருமானையும் வழிபட்டு மேற்செல்வாராயினார். அப்போதெல்லாம் ஆசிரியர் கட்டளைப்படி விரைந்து தில்லைத்தலத்தில் ஒரு மண்டல காலம் தங்கி மீண்டு வந்து ஆசிரியரைத் தரிசித்து ஞானோபதேசம் பெற வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கி இருந்தது. வேறு எச்செய லிலும் அவருக்கு மனம் செல்லவில்லை. அப்படி அவர் புள்ளி ருக்குவேளூர் வணங்கிச் செல்லும்போது, ஊர் எல்லையை நெருங்கியவுடன், முத்துக் குமாரசுவாமி தம் அர்ச்சகர் வடிவத்தில் இவர் முன்தோன்றித் திருநீற்றுப் பிரசாதம் அளித்து, "அப்பனே, நம்மைப் பாட மறந்தனையோ? நம் மீதும் ஒரு பிள்ளைத் தமிழ் பாடுவாயாக" என்று கட்டளை

யிட்டுத் திருவுருக் கரந்தார். வந்தவர் முருகப் பெருமானே என்று அப்போது தான் தெளிந்த சுவாமிகள் நிலத்தில் விழுந்து பணிந்தெழுந்து திரும்பி ஆலயம் சென்று முத்துக் குமாரசுவாமி சந்நிதியடைந்து, வணங்கிப் பின் பாடல் தொடங்கச் சிந்தித்த நேரம், பெருமான் திருவருளால் ''பொன் பூத்த குடுமி'' என்ற ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. அத்தொடரையே முதலாகக் கொண்டு, விநாயகர் காப்பாக.

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட்டிமவான்
பொருப்பிற் பிறந்துதவளப்
பொழில்நிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர்
போர்க்களிற் றைப்புணர்ந்து
தென் பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்

என்று தொடங்கி முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் பாடினார். தம்மை ஆட்கொண்டவனும் முருகனேயாதலால், இந்த முருகன் சந்நிதியில் மிக்க உணர்ச்சிப் பெருக்கோடும் ஈடுபாட்டோடும் பிள்ளைத்தமிழ் பாடினார்.

இவ்வாறு பாடிக்கொண்டு வரும்போது அங்கே ஊரில் உள்ள முருக பக்தர்கள் திரளாக அவரைச் சூழ்ந்து நின்று அவருடைய அருள் வாக்கைச் செவிமடுத்து நின்றார்கள். அவ்வாறு பாடிவரும்போது கூடியிருந்த அடியவர்கள் அழகிய தொடர்கள் சொல்ல நேரிட்டால் அவை தெய்வசித்தத்தால் நமக்குக் கிடைத்தவை என்று இவர் அவற்றையும் தம் முடைய பாடல்களில் சேர்த்துக் கொள்வதுண்டு என்று ஆன்றோர் கூறுவர்.

செங்கீரைப் பருவம் தொடங்கியபோது ''செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்'' என்ற தொடர் அவ்வாறு இவர்

காதில் விழுந்தது. அதைச் "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள செங்கீரை யாடியருளே" என்று இப் பருவத்தின் முதல் ஐந்து பாடல்களுக்கு மகுடமாகச் சேர்த்துக் கொண்டார். பின்னால் தேனூறு கிளவிக்கு என்ற ஐந்தாம் பாடலின் நான்காம் அடியைத் தொடங்கிய போது வாய் ஊறி நின்றவன் என்ற தொடர் காதில் விழுந்தது. அதை அப்படியே 'தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்' என்று சேர்த்து அமைத்துக் கொண்டார் என்று சொல்வார்கள். இப்படியே பின்னும் பல நிகழ்ச்சிகள். இவற்றையெல்லாம் நன்கு அமைத்து முத்துக் குமாரசுவாமி யினுடைய திருவருட் பொலிவில் பெரிதும் ஈடுபட்டு அழகு ஒழுகும்படியான 102 பாடல்களால் முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழைப் பாடி முடித்தார். அப்பிரபந்தத்தை அப் பெருமானுடைய சந்நிதியிலேயே சில நாளில் அரங்கேற்றி னார். பின் அத்தலத்தில் சிலநாள் வசித்து மீண்டும் தம் முடைய தில்லை யாத்திரையைத் தொடங்கினார்.

## தில்லை

தில்லைக்குச் செல்லுகிற வழியில் சீகாழித்தலம் உள்ளது. அங்குத் திருஞான சம்பந்த மூர்த்திக்கு மூன்று வயதுக் குழந்தையாயிருந்த போது அம்மையார் திருமுலைப் பால் அளித்ததாகிய அற்புதம் முன்னர் நடந்திருந்தது. இவருக்கு அது தெரியும். இந்தத் தலம் வழியாகத்தான் அவரும் செல்கிறார். முன்னமே மதுரை மீனாட்சியைப் பாடிய போது

செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே
திருவரு ளமுதுகு ழைத்து விடுத்தமு லைப்பாலாற்
கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யில்.

என்று இவர் பாடியிருக்கிறார். ஆகவே அந்த நினைவு இங்கு இவருக்கு எழுந்து ஆலயதரிசனம் செய்து பாடியிருக்கவும் கூடும். ஆனால் நமக்கு அவ்வாறு எந்தப் பிரபந்தமும் கிடைக்கவில்லை.

பின் யாத்திரையைத் தொடர்ந்து மேற்கொண்டு தில்லைத் தலத்தை அடைந்தார். நகர் மக்கள் அவரை வரவேற்றுத் தக்க சிறப்புச் செய்தார்கள். அங்குப் பலநாள் உறைந்து ஆனந்தமாகப் பெருமானுடைய திருக்கூத்தைத் தினந்தோறும் பல காலும் தரிசித்துக் கொண்டு தங்கியிருந் தார். தங்கியிருந்த காலத்தில், 'நடராஜப் பெருமான் திருவருளால் இவருக்குத் தம்முடைய ஆசாரியர் தரும புரத்தில் வினாவிய வினாவின் பொருள் சிறிதளவு விளங்கி யிருக்கக் கூடும். அனுபவமாகியும் இருத்தல் கூடும். தம் முடைய அனுபவத்தையும் மகிழ்ச்சியையும் நடராஜப் பெருமான் மீது சிதம்பரமும்மணிக்கோவை என்ற பிரபந்தம் பாடி வெளியிட்டார்.

இந்த நூலில் சிதம்பரத் தலத்தினுடைய பெருமை யையும், பெருமானுடைய ஆடல் அனுபவத்தையும் தம் முடைய உள்ளக்கிடக்கையையும் பலபடச் சொல்லித் துதிக் கிறார். சிதம்பரத்தில் இயல்பாக இவருக்கு இருந்த ஒப்பற்ற ஈடுபாடும், குருநாதர் "அங்கு நீ போய் ஒரு மண்டலம் தங்கித் தரிசித்துப் பின் இங்கு வா" என்று கட்டளையிட்டதிலுள்ள கருத்துச் சிறப்பும் இதில் பாடல் தோறும் வெளிப்படுகின்றன.

அவ்வாறு இருந்த காலத்தில் இவருடைய பக்திச் சிறப்பும் புலமையும் அங்கிருந்த சைவ மக்களை இவர்பால் ஈடுபடுத்தின. அம்மக்களுள் பலர் புலமை நிறைந்தவர்கள். அதனோடு இலக்கணமும் வல்லவர்கள். அவர்களுக்கு நெடுங் காலமாக ஒரு குறையிருந்து வந்தது. தாங்கள் இதுவரை கற்ற யாப்பிலக்கண நூல்களுள் சொல்லிய பலவகை யாப்புக் களுக்கும் எடுத்துக்காட்டாகச் சொல்லப்பட்ட பாடல்கள் யாவும் புறச் சமயச் சார்புடையவைகளாக இருந்தன. அது அவர்களுக்குப் பெரும் குறையாயிருந்தது. அப்போது

அவர்கள் குமரகுருபரருடைய புலமைப் பெருக்கை நன்கு கண்டு அவருடைய வாக்கின் அருள்தன்மையையும் நன்கு அனுபவித்தார்கள். ஆதலால் அவரைக் கொண்டு யாப்பு உதாரணங்களுக்குச் சைவச் சார்புடைய பாடல்களைப் பாடு வித்துத் தங்கள் குறையை நீக்கிக் கொள்ளலாம் என்று எண்ணம் தோன்றிற்று. இந்த எண்ணத்தைச் சுவாமிகளிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவரும் இதையும் இறைவன் ஆணையாகக் கருதிச் 'சிதம்பரச் செய்யுட் கோவை' என்ற ஓர் அரிய பிரபந்தம் செய்து அளித்தார். இந்த நூல் பலவகையான யாப்பு விகற்பங்களுக்குத் தில்லைத்தல சம்பந்தமான உதாரணமாக 84 பாடல்களைக் கொண்டுள்ளது.

### மீண்டும் தருமபுரம்

தில்லைத்தல தரிசனமும் ஒரு மண்டல வாசமும், நிறைவேறின.[1] குருவின் ஆணையை நினைவிற் கொண்டு தருமபுரத்திற்குத் திரும்பினார். சுவாமிகள் சிதம்பரத்தில் தங்கி ஆற்றியபணிகள் அவ்வப்போது குருவினுடைய செவிக்கு எட்டியிருந்தன. திரும்பியவர் ஞானாசாரியரைத் தரிசித்து வணங்கி அவருக்கு அணுக்கத் தொண்டராகச் சிலகாலம் இருந்துவந்தார். அவ்வாறு இருந்த காலத்தில் பற்பல சமயங் களில் பலவகையான தனிப்பாடல்களும் பாடியிருந்தார். இவருடைய சீலத்தாலும் தொண்டினாலும் சிதம்பரத்தில் ஆற்றிய பணிகளின் நினைவாலும் ஆசாரியார் பெருமகிழ்ச்சி யடைந்து இவருக்கு விசேடம் நிருவாணம் ஆகிய தீட்சை

---

1. தில்லையில் உறைந்த காலத்தில் அன்பர்கள் விரும்பிய படி தில்லை சிவகாமியம்மை இரட்டை மணிமாலையும் பாடினார் என்று இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது. ஆனால் இது இவர் வாக்கன்று என்பது பலர் கருத்து. இதைப் பற்றிய ஒரு குறிப்பு. சுவாமிகள் பாடிய நூல்கள் என்ற பகுதியில் சொல்லப்பட்டுள்ளது.

களையும் அளித்து துறவுக் குரிய ஆடையும்நல்கி ஞானோப தேசமும் செய்து சொக்கலிங்க பூசையும் எழுந்தருளப் பண்ணினார். தருமைக்கு மூல குருவாகிய குருஞான சம்பந்தர் மதுரையில் பொற்றாமரை வாவியில் நீராடிய போது அவர் கரத்தில் வந்து தங்கிய சொக்கலிங்க மூர்த்தியை தருமபுரத்துக்குக் கொண்டு வந்து அங்கு அம்மூர்த்தியைத் தனிக்கோயில் கட்டி அதில் பிரதிட்டை செய்து வழிபட்டு வந்தார். அன்று முதல் இந்தச் சொக்கலிங்க மூர்த்தியே தருமையில் பின்வந்த எல்லா ஆசாரியர்களுக்கும் வழி பாட்டுக் குரிய ஆன்மார்த்த மூர்த்தியாக ஆனார். ஆசாரியர்கள் தங்கள் சீடர்களைத் தம்பிரான் நிலைக்கு உயர்த்தியபோது அவர்களுக்கு வழி பாட்டுக்காக எழுந்தருளச் செய்து கொடுக்கின்ற ஆன்மார்த்த பூஜா மூர்த்தியும் இந்தச் சொக்கலிங்க மூர்த்தியே. அந்த முறையில் தான் இப்போது குமரகுருபரர் இந்த மூர்த்தியையே தம் முடைய பூஜாமூர்த்தியாகக் கொடுக்கப்பட்டார். அப்போது தமக்குக் குருநாதர் செய்த பெருங்கருணையை மனத்தில் எண்ணி அவர் மீது பண்டார மும்மணிக்கோவை (ஞானக் கருவூலமாகிய ஆசாரியர் மீது பாடிய மும்மணிக்கோவை) என்றவொரு சிறு பிரபந்தம் பாடிக்குருநாதர் திருவடியில் சூட்டினார். இந்தப் பிரபந்தம் ஒரு சைவ சித்தாந்த ஞானக் கருவூலமாக இன்றும் விளங்குகிறது. உபதேசம் பெற்றது முதல் குமரகுருபரர் குமரகுருபர சுவாமிகள் (தம்பிரான்) ஆனார். அச்சமயம் இவர் பாடிய வேறு தனிப்பாடல்களில் ஒன்று பின் வருவது.

''பூதங் கடந்த புகழ்க்கூடற் சம்பந்தன் போதித்தசொல்
வாதங் கடந்து மனோலய மாய்இந்து மண்டலம்போய்
நாதங் கடந்து நடுவெளி தாண்டி நலஞ்சிறந்த
போதங் கடந்தின்ப பூரண மாகிப் பொலிந்ததுவே.''

சிலநாளில் ஆசாரியர் இவரை அழைத்து இவருடைய பக்குவ முதிர்ச்சியால் மனம் மகிழ்ந்து, ''இனி நீ நாம் முன்னமே கட்டளையிட்டபடி காசி நகரை அடைந்து அங்குச் சைவம் பரப்புவாயாக, சைவத்துக்கும் மட்டுமன்றி வைதிக சமயம் முழுமைக்குமே மிகவும் புனிதமான தலமாகிய காசி விசுவநாதர் கோயில் முகம்மதியர் கொடுமையால் இடிக்கப் பட்டுப் போயிற்று என்று செய்திகள் கிடைக்கின்றன. நீ அங்குச் சென்று சிவ்வழிபாட்டுக்குப் புத்துயிர் அளிப்பது திருவுளச் சம்மதமாயிருக்கும்'' என்று சொல்லி இவரைச் சில பரிவாரங்களோடு காசிக்கு அனுப்பி வைத்தார். குமர குருபரரும் குருவின் ஆணையை மறுக்க இயலாதவராய், ஒரு நல்ல நாளில் காசி நோக்கிப் புறப்பட்டார்.

முன்னமே காசிக்குப் போகும்படி தருமை தேசிகர் இவருக்கு சொன்மையால் அது பற்றிய எண்ணம் மனத்தில் இருந்திருக்கும் போலும். காசிக்குச் செல்வது எத்துணைக் கஷ்டம் என்பதை எண்ணிப் பார்த்திருப்பார், அதனால் இவர் சிதம்பரத்தில் தங்கிச் சிதம்பர மும்மணிக்கோவை பாடிய போது காசியில் இறந்தால் முத்தி என்று சொல்லப் பட்ட போதிலும் அது அவ்வளவு எளிதில் கிடைப்பதன்று என்ற எண்ணத்தை அந்நூலின் இரண்டாம் பாடலில் சில வரிகளால் வெளியிடுகிறார்.

காசியி லிறத்தல் நோக்கித் தேசம் விட்டு
அறந்தலைத் தந்த அரும்பொருள் தாங்கிப்
பிறன்பொருள் கொள்ளாப் பேரறம் பூண்டு
கழிபெருங் கானம் நீங்கி வழியிடைத்
தீப்பசிக் கிரங்கி நோய்ப்பனிக் கொதுங்கிப்
பல்பிணிக் குடைந்து செல்லுங் காலத்து
இடைச்சுரத் திறவாது இன்னுயிர் தாங்கிக்
கிடைத்தனனாயின் அடுத்தநல் லொழுக்கமோடு
உடல்விடு காறுமத் தடநகர் வைகி
முடிவது கடைபோக முடிவதோ அரிதே.

காசி என்பது இங்கிருந்து 1,500 மைல் தொலைவில் கங்கைக் கரையில் உள்ள பெருநகரம். குமரகுருபரர் காசியை நோக்கிப் பயணம் செய்த காலத்தில் பயணம் எவ்வளவு கஷ்டம் என்பதை இன்று நாம் எண்ணிப் பார்க்க முடியாது. அன்று நாடு முழுமையுமே துண்டு துண்டான சமஸ்தானங் களாக இயங்கிக் கொண்டிருந்தது. எங்கும் போர்கள்—மராத்தியர், முகம்மதியர், பிற சுதேச மன்னர்கள் இவர் களுக்கு இடையில் எந்த நேரமும் போர்கள். ஆகவே இந்த நாடுகள் வழியே செல்லும் போது உயிருக்கே ஆபத்து. அராஜகம் காரணமாக வழியெங்கும் கேட்பாரற்ற கொள்ளைக்காரர்கள். தவிர இடையில் உள்ளமொழிகள் பல-தமிழ்நாட்டுக்கு அப்பால் தெலுங்கு, மராத்தி, இந்துஸ்தானி உருது இவை தமிழுக்குப் பழக்கம்இல்லை என்பதைநினை வில் கொள்ள வேண்டும். சைவ உணவு கிடைப்பது அருமை.

காவிரிக்கரையில் இருந்து இளவயதினரான குமரகுருபரர் என்னும் துறவி புறப்பட்டுச் செல்கிறார். காசியை இவர் சென்று அடைந்தார் என்பதே மிக்க ஆச்சரியமான செய்தி. முருகனுடைய திருவருளே இவரைக் காசியில் கொண்டு போய்ச் சேர்த்தது என்று சொன்னால் அது மிகை அன்று.

**காசி**[1]

அக்காலம் டில்லியில் அரசு புரிந்தவன் ஷாஜகான் என்ற மொகலாய மன்னன். அவன் தன்னுடைய நாட்டை நான்கு

---

1. இந்த இடத்தில் சுவாமிகள் காசிக்குச் சென்று சேர்ந்த வரலாற்றைப் பலர் பலவிதமாக எழுது யிருக்கிறார்கள். நாட்டு வரலாறு அவர்கள் எழுதிய காலத்தில் தெளிவு பெறாமல் இருந்தமையால் இந்த நிலை. வரலாற்றிலிருந்து பல செய்திகளைத் திட்டமாய்த் தெரிந்து கொண்டு பின்னால் இவருக்கு அங்கிருந்த மன்னனுடைய சிறப்பான சலுகைகள் பல வடிவத்தில் கிடைத்தன என்பதை யும் மனத்தில் கொண்டு அடுத்த வரலாறுகள் சொல்லப்படுகின்றன.

பாகமாக்கித் தன்னுடைய நான்கு புதல்வர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்திருந்தான். டில்லியில் தனக்குப் பிரியமுள்ள மூத்தமகனான தாராஷுகோவை உடன் வைத்துக் கொண்டான். இரண்டாம் மகனான ஷுஜாவைப் பஞ்சாபிலும், மூன்றாவது மகனான ஔரங்கசீப்பை தக்காணத்திலும், நான்காம் மகனான மூராத்தை வங்காளத் திலும் நிர்வாகத்தை நடத்துமாறு அமர்த்தினான். தாராஷுகோ இளமை முதல் இந்துசமயப் பண்டிதர்களை உடன் வைத்துக் கொண்டு தத்துவ விசாரணையில் ஈடுபட்டு டில்லியிலும் காசியிலுமாக வாழ்க்கையை நடத்தி வந்தான். இந்து சமயத்திலும் வடமொழியிலும், வடமொழி வல்ல பண்டிதர்களிடத்திலும் இவனுக்குப் பற்றுதல் மிகுதி. காவேரிக் கரையிலிருந்து புறப்பட்ட குமரகுருபரர் ஔரங்கசீப் பின் நிருவாகத்தில் இருந்த தக்காணத்தைக் கடந்து காசியை அடைந்தார் என்பது, மிகவும் அற்புதமான சாதனை; ஏனெனில் அவன் சமயப் பொறை இல்லாது இந்து சமயத்தினரை மிகவும் துன்புறுத்தினான் என்று வரலாறு சொல்லும்.

**காசி மகாநாடு**

சுவாமிகள் காசியை அடைந்த சமயம் காசியில் தாராஷுகோ ஒரு சர்வசமய மகாநாடு கூட்டியிருந்தான். இதையறிந்து இந்த மகாநாட்டுக்குக் குமரகுருபரர் தாமே சென்றார். இவர் சென்ற நிலையை விவேகானந்தர் 1888இல் அமெரிக்க நாட்டில் சிகாகோ நகரில் நடந்த சர்வசமய மகாநாட்டில் கலந்து கொண்டதற்கு ஒப்பிடலாம். தமிழ் நாட்டுத் துறவி ஒருவர் காசிக்கு அச்சமயம் சென்றார் என்றால் அங்கிருந்த தமிழ்நாட்டு மக்கள் இவரைச் சூழ்ந்து கொண்டு அம்மகாநாட்டில் தமிழ்நாட்டுச் சமயத்தைப் பற்றிப் பேசித் தமிழ்நாட்டின் பெருமையை எடுத்துச் சொல்ல வேண்டும் என்று இவரை வேண்டிக் கொண்டதில்

வியப்பில்லை. இறைவன் அருளும் தமிழ் மக்களின் பேரார்வமும் இளமையின் வேகமும் அவ்வேண்டுகோளுக்கு இவரை இணங்கச் செய்தன. காசி அடைந்த இவர் இந்த நிலைமைகளை எல்லாம் மனத்துள் கொண்டு விரைவில் இந்துஸ்தானி மொழியைக் கற்று அதில் சமய உண்மைகளை எடுத்துப் பேசும் வல்லமை பெற்றார். சகலகலாவல்லியாகிய சரசுவதியை வேண்டி அவள் மீது ஒரு தோத்திரமாலை பாடி அத்தேவியின் அருளால் இந்துஸ்தானி மொழியில் சாமானியமாகப் பேசும் ஆற்றலை விரைந்து பெற்றார் என்றும் சொல்வார்கள்.[1] இதில் மறுப்பில்லை. முருகன் அருளும் சரசுவதிதேவி அருளும் அவருக்குத் துணை செய்தன. இவ்வாறு தெய்வ அருளைத் துணையாகப் பெற்றவர் இந்துஸ்தானி மொழியை முயன்று கற்றதாகச் சொல்வது அவருக்குக் குறைவாகாது. ''குடிசெய்வல் என்னும் ஒருவர்க்குத் தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் அல்லவா?''

மகாநாட்டுக்குச் சென்றார். இவருடைய கம்பீரமான தோற்றமும் முகத்தில் வீசிய அருள் ஒளியும் வசீகரமான துவராடையும் இவரைப் பார்த்த உடனே அனைவரும் வணங்குமாறு செய்தன. எல்லோரும் இருக்கை விட்டு எழுந்து வணக்கம் தெரிவித்தார்கள். மன்னனும் எழுந்து வணங்கினான். இவர் சிங்கம் போல் கம்பீரமாக அந்த மகாநாட்டு மண்டபத்துக்குள் புகுந்ததை சிங்கவாகனத்தின் மீது ஆரோகணித்து வந்தார் என்று உலகத்தார் உபசாரமாகச் சொல்வது ஏற்றுக் கொள்ளத் தக்கதே. (அனுபந்தம் 4 பார்க்க)

---

1. சகலகலா வல்லிமாலை என்ற இத்தோத்திரமாலை பாடிய வேறு வரலாற்றை அந்நூல் விளக்கப் பகுதியின் முடிவில் காண்க.

மகாநாடு பல நாட்கள் நடந்தது. அங்கு இரண்டு விதமான கருத்துக்களே நிலவின. ஒன்று முகம்மதிய சமயத்தார் அந்த நாட்டில் அப்போது அதிகமாகப் பரவி இருந்தமையால் அவர்கள் சமயத்தின் அடிப்படைக் கொள்கை. அதாவது உலகத்தில் போக போக்கியங்களே வாழ்க்கையின் முடிவான இலட்சியம் என்று கருதிய நிலை. இது பாரத நாட்டில் ஒன்றும் புதியதன்று. வைதிக சமயத்தில் சாருவாகம் என்று சொல்லப்படும் சமயநிலை. இது சைவ சமயத்திலும் சாருவாகம் லோகாயதம் என்றும் சொல்லப் படுகின்ற சமயமாகும். இது சிவஞான சித்தியார் பரபக்கத்துள் விரிவாகப் சொல்லி மறுக்கப்படுகின்றது.

மற்றது, பூரணமான அத்வைதம் என்று மற்ற வடமொழிச் சாஸ்திரங்களும் விரித்துரைக்கின்ற கொள்கை. அதாவது உள்பொருள் ஒன்றே. அதுவே பிரும்மம் அந்தப் பொருளின் வெளிப்பாடே மற்றவையாகும். உயிர் எனத் தனியாக இல்லை. அது பிரும்மத்தின் வெளிப்பாடுதான். பாசம் என்று தனியாக இல்லை. எல்லாம் மாயையின் செயல். இவையே வேறு பொருள் இல்லை என்ற ''அகம் பிரும்மாஸ்மி'' கொள்கையாகும்.

இந்த இரண்டையும், கூடியிருந்த அவையோர் பல நாளாகக் கேட்டுக் கேட்டுச் சலிப்படைந்திருந்தார்கள். அவர்களுக்கு வாழ்க்கையில் ஒரு பற்றுக்கோடு காட்டப்பட வில்லை. அவர்கள் மனத்தில் இருந்த பற்றுக்கான தாகத்தை யாரும் தணிக்கவில்லை.

இந்த வகையான வாதங்களைத்தான் தாராஷுகோவும் பல நாளாகக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போயிருந்தான்.

இந்த நிலையில் குமரகுருபர சுவாமிகளுடைய வார்த்தைகள் அமிர்த வருஷம்போல் இருந்தன. கடும் வெயிலினிடை வீசுகின்ற மெல்லிய தென்றல் போல்

இதயத்துக்குக் குளிர்ச்சியாக இருந்தது. எளியநடையில் இவர் தம்முடைய கருத்துக்களைத் தெளிவாகப் படாடோபம் இன்றி இதயத்தோடு இதயம் பேசுவது போலச் சொல்லி யமையால் எல்லோரும் நன்றாகப் புரிந்து கொண்டார்கள். பண்டிதர்களோடு பாமரர்களும் ஒத்து உணர்ந்தார்கள். சுவாமிகளுடைய சொற்கள் எல்லோருக்கும் ஒரு சிறப்பான நம்பிக்கையை ஊட்டின. சுவாமிகள் தாம் சுத்த அத்வைதக் கொள்கையை ஆதரித்த போதிலும் கூட, மெய்கண்ட பரம்பரையில் தமது குருவினால் தமக்கு உபதேசிக்கப்பட்ட படி, தனி மனிதன் தன்னுடைய எண்ணத்தாலும் சொல்லாலும் செயலாலும் தன் விதியையும், தன் எதிர் காலத்தையும் கடவுள் அருள் கொண்டு தானே நிர்ணயித்துக் கொள்ளும் சுதந்திரம் உடையவன். வினைப்பயனை அனுபவித்தே தீரவேண்டும் என்ற புதுக்கொள்கையை இவர் விளக்கி உபதேசித்தார். கேட்ட தாராஷுகோவுக்கு இவருடைய சொற்கள் தேன் எனச் செவியில் பாய்ந்தன. மெய்ம்மறந்து இவருடைய சொற்களையே கேட்டுக் கொண் டிருந்தான். இவருடைய வசீகரமான தோற்றமும், ஆடம்பரமற்ற எளிய அருட்பொலிவும் அவனைப் பெரிதும் கவர்ந்தன. இவர் புதிதாக இந்துஸ்தானி கற்றுப் பேசுகிறவர் ஆனமையால் படாடோபம் இல்லாமல் எளிமையாகப் பேசினார். இத்தனையும் தாராவைத் தேனுண்ட வண்டு போல மயங்கச் செய்தன.

சில நாளின்பின் மகாநாடு கலைந்தது தாரா இவரைத் தனியே அழைத்து முறைப்படி வணங்கி ''தங்களுடைய பேச்சினால் கவரப்பட்ட யான் மிக்க மனத்தெளிவு அடைந் திருக்கிறேன். தங்களுக்கு ஏதேனும் செய்ய விரும்புகிறேன். உத்தரவிடவேண்டும்'' என்று பக்குவமாய்க் கேட்டுக் கொண்டான்.

## காசிமடம்

அப்போது குமரகுருபரர் அவனை நோக்கி, ''அரசே, நான் துறவி, எனக்குத் தேவை எதுவும் இல்லை. ஆனால் காசியில் நான் தங்குவதற்கு ஒரு மடமும் அங்கிருந்து என்னுடைய சைவசமயப் பிரசாரத்தைச் செய்வதற்கு வசதியும் செய்து கொடுத்தாயானால் அதுவே போது மானது'' என்றார். எதையும் செய்யத் தயாராய் இருந்த தாராவுக்கு இந்த எளிய வேண்டுகோள் மிக்க மனஉருக்கம் தந்தது. சுவாமிகளை அழைத்துக் கொண்டு வீதிக்கு வந்தான். ஆகாயத்தை அண்ணாந்து நோக்கியபோது, அங்கு இரட்டைக்கருடன் வட்டமிட்டுக் கொண்டிருந்தமை தெரிந்தது. ''சுவாமி, இக்கருடன் பறக்கின்ற எல்லை முழுவ தையும் தங்களுக்குத் தானம் செய்கின்றேன்.'' என்று சொல்லி அப்படியே தான சாசனமும் எழுதிக் கொடுத்தான். கருடன் இரண்டும் காசிநகரில் பாதியை அடைத்துப் பறந்தன. அவ்வளவு பரப்பும் சுவாமிகளுக்கு உரியதாயிற்று. அந்த இடத்தில் கங்கைக் கரையில் பழைய கேதாரநாதர் கோயிலுக்கு அருகில் ஒரு பெரியமடம் கல்லால் கட்டிக் கொடுத்தான்.

கட்டிடங்களுக்கு முகப்பு அலங்காரமாக யாருக்கும் அக் காலத்தில் கட்ட அனுமதியில்லை. அரசர் போன்றோர் மட்டும் முகப்புக்கட்டிக் கொள்ளலாம். இதற்கு அங்கு சர்ஜா என்று பெயர். சம்பிரதாயத்தையொட்டிக் குமரகுருபரர் மடம் கட்டிக் கொண்டபோது, இவர் இம்முகப்பு கட்ட வில்லை. ஆனால் பெருமை விளங்கும்படியாக அதைக் கட்டிக் கொள்ள வேண்டுமென்று முகம்மதியத் தலைவன் வேண்ட, குருபரர் அவ்வாறே கட்டுவித்தார். அதற்குத் தனியாக ''பால தேவிகா வது'' என்று பெயர் வழங்கிற்று. அந்த மடம் இன்றும் கோட்டை போல் விளங்குகிறது. குமர குருபரர் மடம் என்பது குமாரசாமி மடம் என்ற பெயரால் இன்று

வழங்குகிறது. வடநாட்டாருக்குக் குமர குருபரர் என்பதை விடக் குமாரசுவாமி என்பது எளிதில் நாவில் பழகக் கூடிய சொல். கருடன் காட்டிய அல்லது பறந்த இடம் முழுமையும் குமார சுவாமி மடத்துக்கு உரியதாயிருந்தது. காசியில், ''காசி மகாராஜா பாதி, குமாரசுவாமி மடம் பாதி'' என்றவொரு பழமொழி அன்று முதல் இன்று வரையில் வழங்கி வந்திருக்கின்றது. இதன் பொருளானது காசிநகரம் முழுமையும் அக்காலத்தில் காசி நகரத்தை ஆண்ட மன்னனுக்குப் பாதியும் குமாரசுவாமி மடத்துக்குப் பாதியும் சொந்தமாக இருந்தன என்பதாகும். இந்த நிலை நெடுங்காலம் இருந்தது. சென்ற நூற்றாண்டில் தான் இதில் பெருத்த மாறுதலும் குறைவும் ஏற்பட்டு விட்டன. இதற்குக்காரணங்கள் இரண்டு ஒன்று அரசியல் சூழ்நிலைகள். இரண்டு திருப்பனந்தாளில் காசி மடத்தில் ஏற்பட்ட குழப்பங்கள்.[1]

### கேதாரர் கோயில்

அக்காலத்தில் ஔரங்கசீப் தன் தந்தையைச் சிறையி லிட்டு வைத்துச் சகோதரர்களான ஷூஜா, முராத் இருவரை

1. யாம் 1945இல் காசி இந்து சர்வகலாசாலையில் சைவ சித்தாந்தப் பேராசிரியராகப் போய்ச் சேர்ந்த காலத்தில் சர்வகலாசாலைக் கணக்கராயிருந்த மயிலாறையா என்ற பெயருடைய ஒரு கன்னடக் காரர் காசிக்குமாரசுவாமி மடத்துக்கும் கணக்கரா யிருந்தார், அவர் எம்மை அழைத்துச் சென்று எங்கெங்குக் குமாரசுவாமி மடத்தின் சொத்துக்கள் இருந்து அக்காலம் கைநழுவிப் போய் விட்டன என்று சுட்டிக் காட்டினார். கை நழுவியதற்குக் காரணம் முன்மாதிரி பராமரிப்பதற்கு இருதம்பிரான்கள் இல்லாமை, காலை நேரம் முழுமையும் இவ்வாறு சுற்றிப் பார்த்தோம். அச்சமயம் காசிராஜா கங்கை யின் எதிர்க்கரையில் தனி அரண்மனையில் வாழ்ந் தார். அவர் இடம் ராம் நகர் எனவழங்கியது. அங்கு பிரசித்தி பெற்ற திருமால் கோயில் ஒன்று இருந்தது. காசிக்கு வருவோர் எல்லோரும் கங்கையை ஓட மேறிக் கடந்து சென்று தரிசித்து வருவதுவழக்கம்.

யும் கொன்று விட்டுச், சிம்மாசனத்தைக் கைப்பற்றித்தான் டில்லி பாதுஷா ஆனான். விசுவநாதர் கோயிலை அடியோடு இடித்துவிட்டு அங்கு ஒரு பெரிய மசூதி கட்டினான். கேதார கட்டத்திலுள்ள கேதாரநாநர் கோயிலும் அவனால் முன்னமேயே இழக்கப்பட்டது. இந்தக்கோயில் இமயமலை யின் மீதுள்ள பனி சூழ்ந்த கேதார நாதர் கோயிலைப் பின் பற்றியே காசி நகரத்தில் வசிட்ட முனிவரால் அமைக்கப் பெற்றது. பாண்டுரங்கர் கோயில் என்ற பெரிய திருமால் ஆலயத்தையும் இடித்து விட்டான்.

காசிக்ஷேத்திரத்தின் தென்பகுதியில் கங்கைக் கரையை யொட்டிக் கேதாரநாதர் ஆலயம் இருந்தது. இங்கு வசிட்ட முனிவர் நெடுநாள் பூசித்துவந்தார். அவர் தம் தவ வலிமை யால் இமயமலையின் மீதுள்ள திருக்கேதாரம் என்ற தலத்தில் இருந்த கேதார நாதரின் கலைகளில் பதினாறில் ஒருபங்கை மட்டும் அங்கேயே நிறுத்தி விட்டு எஞ்சிய பதினைந்து கலை களையும் கங்கைக் கரைக் கேதாரர் கோயிலில் எழுந்தருளி யுள்ள கேதார நாதரிடம் கொண்டு வந்து சேர்த்தார் என்று கேதார மாகாத்மியம் என்ற வடமொழிப் புராணம் கூறும். வசிட்டர் இங்கிருந்து 60 முறை இமயமலைக் கேதாரரைச் சென்று வழிபட்டு வந்தார். அதனால் மகிழ்ந்த பெருமான் அவருக்காக இங்கேயே சாந்நித்தியம் கொண்டுள்ளாராம், இது இடிக்கப்பட்டிருந்த இடம் கூடத் தெரியாமல் மண்மூடிப் போய் விட்டது. இதைப் பற்றிய செய்திகள், எல்லாம் சுவாமிகள் காசிநகர் வாசிகளான இந்துக்கள் சொல்லக் கேள்வியுற்றார். அவர் மனம் அதில் மிகவும் வருந்தியது என் பதில் ஐயமில்லை. அவருக்கு இமயமலையின் மீதுள்ள கேதாரம் என்ற க்ஷேத்திரத்துக்குத் திருஞான சம்பந்தர் செவ்வழிப் பண்ணில் பாடிய அருமையான பாசுரம் நன்கு நினைவிருந்தது.

தொண்டரஞ்சு களிறும் அடக்கிச் சுரும்பார் மலர்
இண்டை கட்டி வழிபாடு செய்யும் இடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே.

அந்த நினைவினால், இந்தக் கேதார நாதர் கோயிலை அவர் கண்ணால் கண்டவராகா விட்டாலும் கோயில் அழிந்தது மிகுந்த வருத்தமாயிருந்தது. கோயில் இருந்த இடம் தெரியாத நிலையில் இரவு உறக்கத்திலும் அவருக்கு இதே நினைவு. உறக்கத்தில் அவருடைய கனவில் கேதாரநாதர் தோன்றி, "அப்பா, நம்முடைய கோயில் இன்ன இடத்தில் இருக்கிறது. அதை நீ வெளிப்படுத்தி எமக்கு வழிபாடு செய்விப்பாயாக" என்று அறிவுறுத்தினார். இதைக் கேட்ட குமரகுருபரர் மிகுந்த மகிழ்ச்சியோடு காலையில் எழுந்து கனவில் கண்ட அடையாளத்தை இப்போது நேரில் சென்று தோண்டிப் பார்த்தபோது கோயில் இருந்த அடையாளங்கள் வெளிப்பட்டன. பின்னர்த் தாராஷுகோவிடம் சொல்லிக் கோயில் முழுமையும் வெளிப்படுத்தச் சொன்னார். தாராஷுகோ அந்தக் கோயிலைப் புதிதாக இவர் திட்டப்படி கட்டிக் கொடுத்தான் என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

### தருமபுரம் வருகை — முதல் முறை

குமரகுருபர சுவாமிகள் காசியிலிருந்து மூன்று முறை தருமபுரம் திரும்பிவந்தார் என்பது வரலாறு. வரலாற்றை ஊன்றி ஆய்ந்து பார்த்தால் ஏன் இத்தனை முறை தருமபுரம் வந்தார் என்ற ரகசியம் வெளிப்படும். முதல் தடவை சென்ற போது அங்கிருந்து தமிழ் நாட்டுக் கோயில் சிற்பிகளை அப்படியே தம் குருநாதரிடம் விண்ணப்பித்து அவருடைய உத்தரவின்படி தேவையான சிற்பிகளை அழைத்து வருவதற்காக. குருநாதர் உதவியில் அவர்களை அழைத்து வந்து கேதாரநாதர் கோயிலைத் தாராஷுகோவின் உதவி கொண்டு புதுப்பித்தார். புதுப்பித்தபோது, சிறப்பான

வாயில் மண்டபங்கள், சருவறை, பிராகாரங்கள், சுற்றுக் கோயில், அம்பிகை, சண்டேசர், கணபதி, முருகர், தக்ஷிணா மூர்த்தி கோயில்கள், கோஷ்டங்கள், பிராகாரங்கள், ரிஷபம் பலிபீடம் முதலியவை அனைத்தையும் சாங்கோபாங்கமாகத் தமிழ் நாட்டு முறைப்படி அமைக்கச் செய்தார். காசியில் சிவாலயம் நிறுவும் பணியில் ஈடுபடுவது பெரும் புண்ணியம் என்று அந்தச் சிற்பிகள் (ஸ்தபதிகள்) எண்ணினார்கள் என்று சொல்வது அவசியமில்லை. இவன் இந்தக் கோயிலைப் புதுப் பித்தது மட்டுமல்லாமல், அதை நிர்வகித்து வருவதற்கு வேண்டிய பொருள் வசதிகளையெல்லாம் சுவாமிகளுக்குச் செய்து என்றென்றும் குமாரசுவாமிமடத்துக்கு இருந்து வரும்படியே அன்று முதல் மடத்தின் நிர்வாகத்துக்கே விட்டு விட்டான்.

காசி நகரில் கங்கைக்கரையில் அமைந்துள்ள புனிதமான ஸ்நான கட்டங்களில் கேதார கட்டம் என்பதும் ஒன்று. அது மிகப் பழங்காலந் தொடங்கியே வழங்கி வந்த பெயர். கேதாரர் கோயிலுக்கு உரிய தீர்த்தக்கட்டம், கேதார கட்டம் என்று பெயர் பெற்றிருந்தது. இது தமிழ்மரபு. இதற்கு மாறாகச் சிறப்பான விசுவநாதர் கோயிலைச் சார்ந்த ஸ்நான கட்டம் தசாசுவமேத கட்டம் என்று இன்று சொல்லப்பெறு கிறது. தசஅசுவமேத யாகங்கள் நிகழ்ந்தமையால் இப்பெயர் என்று சொல்வார்கள். உண்மையாயிருக்கலாம். ஆனால் உலகப் பிரசித்தி பெற்ற விசுவநாதர் கோயிலால் விசுவநாதர் கட்டம் என்று அதற்குப் பெயரில்லை. ஆனால் கேதார நாதர் கோயிலைச் சார்ந்த கட்டம் அன்று போல இன்றும் கேதார கட்டந்தான்.

சுவாமிகள் மிகுந்த மகிழ்ச்சியோடு தமக்கு மன்னன் அமைத்துத் தந்த மடத்தில்[1] இருந்து கொண்டு தம்மிடம் வந்த பக்தர்களுக்கும் மற்றக் காசிப் பொது மக்களுக்கும்

நல்லொழுக்க உபதேசமும் சைவசமய உபதேசமும் செய்து வந்தார். தமிழ் நாட்டிலிருந்து அக்காலத்திலும் பின்னரும் காசியாத்திரையாகப் பிரயாகை, காசி, கயை ஆகிய இடங்களுக்கு யாத்திரையாகச் செல்லும் தமிழ்மக்களுக்கு இந்த இடமானது தங்க இடம் கொடுத்து உண்டியும் அளித்து வழி காட்டியாக இருந்து ஆற்றுப்படுத்தி வந்திருக்கிறது.

குமரகுருபர சுவாமிகளுடைய திருக்கோலமும் தருமமும் உபதேசமும், தமிழ் நாட்டு நாகரிகத்தையும் பண்பாட்டை

---

1. இந்த நிலையில் மடம் என்ற சொற்பொருளைச் சற்றுத் தெளிவு செய்து கொள்ள வேண்டும். பழங் காலத்தில் சைவ அடியவர் வீடு (இல்லம் அல்லது தங்குமிடம்) மடம் எனப்பட்டது; தருமம் நிகழு மிடம் அல்லது ஆதீன நிலையம் என்ற இன்றைய பொருள் அதற்கு அப்போது இல்லை. மதுரைக்குச் சென்ற திருஞான சம்பந்த சுவாமிகள் தமக்கும் அடியவர் கூட்டத்துக்கும் அரசியாரும் மந்திரியாரும் அமைத்துக் கொடுத்த தங்குமிடத்தை மடம் என்றே சேக்கிழார் கூறுகிறார். சம்பந்தர் திருமடத் துக்குச்சமணர் தீ இட்டார்கள் என்கிறார். அங்கு மடம் என்பது சம்பந்தர் வீடு என்பது மட்டுமே அர்த்தமாகும். புதிதாக மதுரைக்குச் சென்ற சம்பந்தருக்கு நாம் நினைக்கிறபடி ஒரு மடம் எதுவும் உண்டாகி விடவில்லை. தங்க வீடுதான் கொடுக்கப்பட்டது.

அரசன் சுவாமிகளையும் அவருடைய பெரும் அடியார் கூட்டத்தையும் பார்த்தபோது இத்தனை பேருடைய தேவைக்காகப் பெரிய கட்டிடமாகக் கட்டிக் கொடுத்தான். அதில் சமையல் இடம், பூசைக்கான இடம், உணவுக்கான இடம் அத்தனை பேருக்கும் உண்டு உறங்குவதற்கான விரிவிடம் எல்லாம் விரிவாக அமைக்கப்பெற்றன. இது குமர குருபரசுவாமிகளுடைய இல்லம். நாம் இன்று நினைக்கிற மாதிரி மடம் அல்ல. பின்னால் இரண் டாம் முறை இச்சுவாமிகள் தருமபுரம் சென்று மீண்ட பிறகுதான் இது அவருடைய திருவாக்கின் படி மடமாக மாறுகிறது.

யும் சைவசமய வளத்தையும் காசி மக்களுக்கு உணர்த்தின என்பது உண்மையே. ஆனால் அவற்றினும் மேலாக கேதார நாதர் கோயிலின் அமைப்பும், அதில் தெய்வங்களின் திருஉருவங்களும், அங்கு நடைபெற்ற நித்திய நைமித்திக பூசைகளும் தமிழ்நாட்டுச் சமயத்தின் சிறப்பை அங்குள்ளவருக்கு மிகவும் தெளிவாக எடுத்துணர்த்தின.

### தருமபுரம்—இரண்டாம் முறை

சுவாமிகள் சில ஆண்டு கழித்து இரண்டாம் முறை தருமபுரம் வந்தார். அப்போது அவர் தம்மிடம் அடியவர்களும் அரசர்களும் அன்போடு கொடுத்த ஏராளமான செல்வத்தை வைத்திருந்தார். அவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டு தருமபுரம் வந்து சந்நிதானத்தின் திருவடியில் வைத்து வணங்கினார். சுவாமிகள் சந்நியாசம் பெற்ற போது சந்நியாசத்துக்கு ஓர் அடிப்படைக் கொள்கை தனக்கென்று எந்தச் சொத்தும் வைத்திருக்கக் கூடாது என்பது. மண், பொன், பெண் மூன்று ஆசைகளையும் விட்டவர் அல்லவா சந்நியாசி? அக்காலம் எல்லோருமே உண்மைச் சந்நியாசிகள். இவ்வாசைகளைத் துறந்தவர்கள் அந்த எண்ணத்தில்தான் குமரகுருபர சுவாமிகள் தாம் பெற்ற செல்வங்களையெல்லாம் மூட்டை கட்டி எடுத்துக் கொண்டு தருமபுரம் வந்தார். அவர் கொண்டு வந்தது ஏராள செல்வம். அக்காலம் சந்நியாசிக்கு மிகுந்த மரியாதை காசியிலிருந்து தருமபுரம் வரும் வழியில் வழிப்பறி முதலிய பயம் கிடையாது.

இவர்தம் செல்வங்களைக் கொண்டு வந்து குருநாதருடைய திருவடியில் வைத்து வணங்கி அவற்றை ஏற்றுக் கொள்ளும்படிபிரார்த்தித்தார். அந்தக் குரு இந்தச் செல்வங்களை ஏற்றுக் கொள்ளவில்லை. இந்தச் சீடருக்கு ஏற்ற குரு அல்லவா அவர்? சொன்னார். "இவற்றை நாம் ஏற்றுக்

கொள்ள முடியாது. இவற்றை நீ காசிக்கு எடுத்துப் போ. அங்குத்தானே இவை உனக்குத் தரப்பட்டன? அங்கு நீ ஒரு மடம் அமைத்து இத்தச் செல்வத்தைச் சமயப் பணிகளுக்கும் அன்னதானம் முதலிய பொதுத் தருமங்களுக்கும் அங்கேயே பயன்படுத்திக் கொள்வாயாக'' என்றார். அப்படியே சுவாமிகள் அச்செல்வத்தை மீண்டும் காசிக்குக் கொண்டு வந்து குருவின் கட்டளைப்படியே அச்செல்வத்தை அவர் சொன்ன காரியத்துக்கே பயன்படுத்துவாராயினார்.[1]

### மூன்றாம் முறை—சொக்கநாதத்தம்பிரான்

சிலகாலம் கழித்துச் சுவாமிகள் தமக்கு முதுமை வந்து அடைந்ததை எண்ணி இந்தக் குமாரசுவாமி மடத்தில் தக்க ஒரு தம்பிரானை அமர்த்திப் பரிபாலிக்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் மூன்றாம் முறையும் தருமபுரம் சென்றார். சென்று அங்கு மகாசந்நிதானத்தை வணங்கி அங்குள்ள திருக்கூட்டத்தாரில் பக்குவம் முதிர்ந்தவராய்த் தமக்குப் பின் காசியிலிருந்து குமாரசுவாமி மடத்தின் தருமங்களைப் பரிபாலிக்கும் தகுதி உள்ளவராய் ஒரு தம்பிரானைத் தம்மோடு காசிக்கு அனுப்பியருளுமாறு பிரார்த்தித்தார். சந்நிதானமும் அதற்கு இசைந்து தம் அடியார் கூட்டத்தில் எல்லாத் தகுதியும் பெற்றவராயிருந்த சொக்கநாதத் தம்பிரான் என்பவரைத் தேர்ந்தெடுத்துக் குமரகுருபர சுவாமிகளோடு காசிக்கு அனுப்பி வைத்தார். குமரகுருபரரும் அவரை இங்கு அழைத்துக் கொண்டு வந்து அவருக்கு இங்குள்ள இந்துஸ்தானி பாஷையிலும் மடத்தின் பரிபாலனத்திலும் கேதாரர் கோயில் நிர்வாகத்திலும் சில ஆண்டுக்காலம் பயிற்சி அளித்துத் தம்மோடு வைத்திருந்தார். இந்தச் சுவாமிகளெல்லாம் காசி குமாரசுவாமி மடத்தில்

---

1. Para 9, Justice Muthuswami Aiyar's judgement No. 10 of Madras, The Indian Laws Reporter, Volume X Page 390,

இருந்த காரணத்தால் இவர்களுக்குக் காசிவாசி என்றவொரு பட்டம் உண்டு. பின் வந்த சந்நியாசிகள் சிலர் காசியில் மற்றொருவரை இருக்கச் செய்துவிட்டுத் தாங்கள் திருப்பனந் தாளுக்கே போய்விட்ட போதிலும்கூட இருவருக்குமே காசி வாசி என்ற அடை இன்றும் வழங்கி வருகிறது.

### சீடர்கள்

இவ்வாறு இந்தத் தம்பிரான்களும் பிறரும் காசிக்கு வந்து சைவத்திலும் தமிழிலும் சிறப்பான பயிற்சி பெற்றுக் கொண்டார்கள். அவர்கள் எல்லோரையும் பற்றிய வரலாறு கள் சிறிதும் நமக்குத் தெரியவில்லை. ஆனால் ஒருவரைப் பற்றிய வரலாறு மட்டும் நமக்குத் தெரிகிறது. அவரே கமலை வெள்ளியம்பல வாணத்தம்பிரான் என்பவர்.

வெள்ளியம் பலவாணர் பெரும் கல்விமான். தருமபுரம் ஐந்தாம்பட்டம் ஞானசம்பந்த சுவாமியின் சீடராகி, காசி சென்று நீண்டகாலம் குமரகுருபரரிடம் தமிழும் சைவமும் பயின்று வந்தார். குமரகுருபரர் சிவபிரான் திருவடி அடைந்த பின் இவர் தருமபுரம் திரும்பினார். இவர் எழுதிய தமிழ் இலக்கிய நூல்களும் சைவநூல்களும் உரைகளும் மிகப் பல. குமரகுருபரருடைய பிற மாணாக்கர் பற்றிய செய்திகள் தெரியவில்லை.

ஆயினும் வாகீச முனிவர் என்ற ஒரு தம்பிரான் இவ்விருவரோடு பக்குவம் வாய்ந்த முதிய தம்பிரானாய்க் குமாரசாமி மடத்தில் சுவாமிகளோடு உடன் இருந்தார் என்று தெரிகிறது. அக்காலத்தில் குமாரசாமி மடத்துக்கு நேபாளத்தில் இமயமலைச்சாரலில் உருத்திராக்கக் காடுகள் இருந்தன. அவற்றில் உருத்திராக்கம் நிரம்ப விளைந்து வந்தன. உருத்திராக்கம் சிவ சின்னங்களில் ஒன்றல்லவா? தருமபுரம் மடத்தில் மட்டுமல்லாமல் பிற மடங்களிலும்

வேண்டிய உருத்திராக்கங்களுக்கு (காசிக் குமாரசாமி மடம்) ஏற்பட்ட பிறகு சுவாமிகளுக்குத் தெரிவித்துப் பெற்றுக் கொள்ளுவார்கள். தமிழ்நாடெங்குமுள்ள சைவசீலர்கள் காசிக்கு எழுதி உருத்திராக்கம் பெற்றுக் கொள்ளுவார்கள். இப்படிக் கேட்போருக்கு உதவி செய்ய எண்ணிச் சுவாமிகள் அக்காடுகளை நிர்வகிக்க வேண்டி இமயமலைச் சாரலில் ஒரு கிளைமடமே அமைத்தார்கள். அது நேபாளத்தில் மோரங்கி (முகரங்கி) என்னுமிடத்தில் இருந்தது.[1] சுவாமிகள் தம்மிடம் காசியில் இருந்த வாகீசத்தம்பிரானை

---

1. இம்மடம் முகரங்கி என்று மீனாட்சிசுந்தரம்பிள்ளை எழுதிய சரித்திரத்திலும் மோரங்கி என்று ஜட்ஜ் முத்துசாமிஅய்யர் தீர்ப்பிலும் சொல்லப் படுகிறது. மோரங்கி காசிக் குமாரசாமி மடத்தின் கிளை மடங்களில் ஒன்றாக 1880க்கும் பிறகும் இருந்தது என்று தெரிகிறது. இராமலிங்கத் தம்பிரான் தாம் திருப்பனந்தாளில் காசி மடத்தின் தலைவராக இருந்து பரிபாலனம் செய்து கொண்டிருந்த வரையில் மோரங்கி மடத்தின் மேல் விசாரணையும் நிர்வாகமும் அவரிடம் நன்முறையில் இருந்தன. ஆனால் அவர் இறக்கும் சமயம் (16-9-1880) திருவாவடுதுறைக் குமாரசாமித் தம்பிரானுக்குக் காசிமட உரிமையை எழுதிக் கொடுத்து இறந்த போது, எல்லாவற்றுக்குமே அழிவு காலம், தருமபுரத்தாருக்குக் காசிமடத்தின் நிர்வாகங்கள் எல்லாமே நன்கு தெரியும்; ஏனெனில் அவர்களே காசி, திருப்பனந்தாள், மோரங்கி, ராமேசுவரம், சிதம்பரம், ஆச்சிராமம் முதலான இடங்களுக்குத் தங்கள் அடியார் கூட்டத்திலிருந்து அனேகத் தம்பிரான்களை அனுப்பிக் கொண்டே இருக்கின்ற நிலைமை. இந்த இராமலிங்கத் தம்பிரான் மகா கெட்டிக்காரராயிருந்தார். ஆனால் தருமபுரத்தினிடம் விரோத உணர்ச்சி கொண்டு என்றைக்குத் திருவாவடுதுறைத் தம்பிரானை உயில் மூலம் நியமித்தாரோ அன்றே காசிமடத்தின் தாழ்வு. இந்த தாழ்வில் மோரங்கி என்ன ஆயிற்று என்று தெரியாமலே போயிற்று. காசிமடத்தை எடுக்க

அனுப்பி, அந்த மடத்தைப் பரிபாலித்துக் கொண்டு வேண்டும்போதெல்லாம் உருத்திராக்கமணிகள் சேகரித்து அனுப்பும்படி நியமித்திருந்தார்கள்.

முத்திப்பேறு

இவ்வாறு விவகாரங்களையெல்லாம் ஓரளவுக்கு முடித்துக் கொண்டு அமைதியாகக் குமரகுருபர சுவாமிகள் குமாரசுவாமி மடத்தின் காரியங்களை நிர்வகிக்கும்படி சொக்கநாதத் தம்பிரானிடம் விட்டுவிட்டுத் தாம் காசி விசுவநாதரையும் கேதாரநாதரையும் வழிபட்டுக் கொண்டு

---

வேண்டுமென்று திட்டமிட்ட திருவாவடுதுறை யாருக்கு நேபாளத்து மோரங்கியைக் கண்காணிக்கத் தெரியாது. கண்காணிக்கத் தெரியாமல் அது கைவிட்டுப் போயவிட்டது. இது பற்றி யாரும் எதுவும் செய்ய இயலவில்லை. விவகாரம் தொடங்கிய 1880 முதல் முடிந்த 1894 வரையில் காசி மடத்தின் பெருமைச் சின்னங்கள் யாவும் பூரணமாய் அழிந்தன அல்லது திட்டமிட்டு அழிவு ஏற்பட்டது.

உருத்திராக்கம் விளையும் காடு சொந்தமாயிருப்பது எவ்வளவு பெருமை! குமரகுருபருடைய காசிமடம் ஆசாரிய ஸ்தானமல்ல. ஆனால் காசி தலைமையிடமாக இருந்த காரணத்தால் எத்தனை ராஜாக்கள் - புதுக்கோட்டை, தஞ்சை, ராமநாதபுரம், வேங்கடகிரி, கார்வேட்நகர், திருவாங்கூர் - எத்தனை சமீன்தார்கள் தொடர்பு! எத்தனையோ உண்டியல் மாற்றம்! அவற்றோடு எத்தனை பேருக்கு உருத்திராக்கம் கொடுத்தல்! இது எவ்வளவு பெரிய சைவப் பணி! இவர்கள் ஆசாரியர்களாக உபதேசம் செய்யும் தகுதி பெற்றிராமல் இருக்கலாம். தமிழ் நாட்டில் திருநீறு யாரும் தயாரித்துக் கொடுத்து விடலாம். ஆனால் உருத்திராக்கம் கொடுக்கும் அந்தஸ்துப் பெற்றிருந்தவர்கள் இவர்கள் ஒரிடம்தானே! இத்தனையும் திருவாவடுதுறையார் தலையிட்டு ஒன்றுமில்லாமலாக்கிவிட்டார். இனி வருமா, நடக்குமா? என்ன பரிதாபம்!

சுகமாக இருந்து வந்தார்.[1] இவர் கவிஞர் ஆனமையால் கவிதை பாரிபொழியாது இருக்க முடியாது அல்லவா? இக் காலத்தில் காசித்தலம் சம்பந்தமாகத் தமது இறுதி நூலாகிய காசிக் கலம்பகம் என்பதைப் பாடினார். உரிய காலத்தில் இவருக்கு இருவினை ஒப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் விளைந்து இவருடைய ஆன்மா இந்த உடற் கூட்டை விட்டுப் பிரிந்து விசுவநாதன் திருவடி நீழலில் இரண்டறக் கலந்தது.

காசியில் சந்நியாசிகள் உடலைச் சமாதி செய்வது (புதைப்பது) வழக்கமில்லை. சந்நியாசியின் உடலை எரிக்கக் கூடாது என்பது ஆகமவிதி. சமாதிதான் ஆகமத்தில் சொல்லப் பட்டது. இந்த உடலை அங்குக் கங்கையில் சேர்ப்பதுதான் அங்குள்ளோர் வழக்கம். கங்கையில் கி.பி. 1688 விபவ வருஷம் வைகாசி மாதம் கிருஷ்ணபட்சம் திருதியை நாளில் இவர் முத்தி பெற்றார். உரிய கிரியைகள் செய்து இவருடைய பூதஉடல் கங்கை நீரில் சேர்ப்பித்தல் என்ற ஜலசமாதி செய்யப் பெற்றது. (மண்ணில் புதைப்பது பூசமாதி, கங்கையில் விடுவது ஜலசமாதி)

---

1. குமரகுருபரர் நான்காம் முறையும் தருமபுரம் சென்றார் என்றும் அங்கேயே இருந்து விடத் தம் எண்ணம் என்று குருவினிடம் தெரிவித்தார் என்றும் சொல்வர். ஆனால் குருவானவர்

காட்டிருந்தாலும் மலையிருந் தாலும் கருதரிய
நாட்டிருந் தாலும் நமக்கென்ன காண்நல்ல தோர் கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே

என்ற பாடலைச் சொல்லித் தருமபுரம் குருமார் வழிபடுகின்ற ஆன்மார்த்த பூசாமூர்த்தியாகிய சொக்கலிங்க மூர்த்தியையும் எழுந்தருளப் பண்ணிக் கொடுத்துக் காசியில் செய்து வந்த சைவப் பணி களைத் தொடர்ந்து செய்து வரும்படிக் கட்டளை யிட்டார். அதை மறுக்க இயலாது குமரகுருபரர் காசிக்கே வந்து தம பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தார் என்பது ஒரு வரலாறு.

காசியில் சுவாமி முத்தி பெற்ற நிலையில் சொக்கநாதத் தம்பிரானும் வெள்ளியம்பலவாணத் தம்பிரானும் மடத்தில் இருந்தார்கள். இருவரில் வெள்ளியம்பலவாணர் சாஸ்திரப் படிப்பில் மிகவும் உயர்ந்தவர். ஆயினும் சொக்கநாதர் தம்பிரான்களில் மூத்தவராதலாலும் குருநாதரிடம் சொல்லி யிருந்தமையாலும் அவரையே சுவாமிகள் தமக்குப் பின் காசியில் மடத்தின் அதிபராக்கினார். குமரகுருபரர் முத்தி பெற்ற சில நாளில் வெள்ளியம்பலவாணர் தருமபுரம் திரும்பி விட்டார் என்று தெரிகிறது.

காசியில் ஔரங்கசீப் காலத்தில் காசி விசுவநாதர் கோயிலும் கேதாரநாதர் கோயிலும் இடித்துத் தரைமட்ட மாகத் தகர்க்கப்பட்டன. இருந்த இடம் தெரியாமல் போயின என்று குறிப்பிட்டோம். எல்லாக் கோயில்களுமே இவ்வாறு தகர்க்கப்பட்டன, உதாரணத்துக்கு ஒன்று சொல்வோம். பாண்டுரங்கர் கோயில் என்பது ஒரு பிரசித்தமான திருமால் ஆலயம். அதை அடியோடு தகர்த்து அவன் அதன் கற்களைக் கொண்டு கங்கைக் கரை யில் இரண்டு மெலிவான உயர்ந்த கோபுரங்களைக் கட்டினான் அவன் புகழை எடுத்துக் கூற. இவை காசிக்குச் செல்பவர் அனைவருக்கும் 10-15 ஆண்டுகளுக்கு முன் வரை யில் அவுரங்கசீப் மினாரெட் என்ற பெயரில் ஒரு காட்சிப் பொருளாக இருந்தன. (யாமும் அதில் ஏறிப் பார்த்திருக் கிறோம்) ஒரு கங்கை வெள்ளத்தில் கங்காதேவி இவற்றுள் ஒன்றை அடித்துக் கொண்டு போய்விட்டாள். இப்பொழுது ஒன்றுதான் உள்ளது. இத்தகையதொரு சூழ்நிலையில் குமரகுருபரசுவாமிகள் அங்கு வாழ்ந்திருந்து இன்று வரையும் நீடித்து நின்று பெருந்தருமங்களைப் பரிபாலித்து வருகின்ற ஒரு சைவ மடத்தை நிறுவியிருக்கிறார் என்பது சைவத் துக்கும் தமிழுக்கும் தென்னாட்டுக்கும் பெரும் புகழ் தருகின்ற அற்புதச் சாதனை.

**காசி ஸ்ரீ குமார சுவாமி மடம்**

குமரகுருபர சுவாமிகள் தமக்குப்பின் சொக்கநாதத் தம்பிரான் என்பவரைத் தலைமைப் பதவிக்காகத் தரும புரத்திலிருந்து அழைத்து வந்து அவரிடம் மடத்தை ஒப்பு வித்தார் என்று குறிப்பிட்டோம். அக்காலம் குமரகுருபர சுவாமி என்றாலும் காசிக் குமாரசுவாமி மடம் என்றாலும் வடஇந்தியா முழுவதிலும் பெரும்புகழ் வாய்ந்த பெயர் களாக இருந்தன.[1] தென்னாட்டிலிருந்து காசியில் சென்று தருமம் செய்ய விரும்பிய அரசர்களும் பிறரும் குமாரசுவாமி மடத்தில் தங்கியிருப்பது தங்களுக்குப் பெரிய கவுரவம் என்று எண்ணினார்கள் தஞ்சைச் சரபோஜி மன்னன் இங்கு தான் தங்கிப் பல காரியங்கள் செய்தான் என்று வரலாறு கூறு கிறது. குமரகுருபர சுவாமிகளுக்குப் பின் வந்த தலைவர் களும் இவ்வகைச் சமயப் பணிகளையும் தருமங்களையும் கேதாரநாதர் கோயில் பரிபாலனங்களையும் எந்தக் குறை வும் இல்லாமல் செவ்வனே செய்து வந்திருக்கிறார்கள். காசியிலிருந்த குமாரசுவாமி மடம் சிலகாலம் கழித்துத் தஞ்சை ஜில்லாவில் உள்ள திருப்பனந்தாள் என்ற நகரத் துக்கு ஒரு கிளை மாற்றப்பட்ட வரலாற்றை மட்டும் சொல்லி இந்தக் குமரகுருபர சுவாமிகள் வரலாற்றை முடித்துக் கொள்வோம்.

குமாரசுவாமி மடத்தில் அவருக்குப் பின் இன்று வரை 21 பட்டம் நைட்டிக சைவ வேளாள பிரம்மசாரிகளாய் மடத்து அதிபர்களாயிருந்து நிர்வாகம் செய்து வந்திருக் கிறார்கள். அவருக்குப் பின் சொக்கநாத சுவாமி தலைவ ராய் இருந்தமை முன்னமே குறிப்பிட்டோம். அவருக்குப் பின் அருணாசல சுவாமி, அம்பலவாண சுவாமி இருவரும் ஒருவர் பின் ஒருவர் தலைவராய் இருந்தார்கள். இவ்விருவர்

1. ஜஸ்டிஸ் முத்துசாமி ஐயர் தம் தீர்ப்பில் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

வரலாற்றில் முக்கிய நிகழ்ச்சிகள் எவையும் நமக்கு எட்டவில்லை. இவர்களை அடுத்து 5, 6ஆம் தலைவர்களா யிருந்த கடையப்ப சுவாமி, தில்லை நாயக சுவாமி என்ற இவருடைய வரலாற்றைச் சுட்டிக்காட்டி இந்த வரலாற்றை முடிப்போம். அக்காலத்தில் ஒருவருக்குப் பின் ஒருவர் தலைவராய் வருகின்ற நிலையில் பெரியவர் குருவாகவும் அடுத்தவர் சீடராகவும் பழகுவார்கள். இப்பழக்கம் ஆண்டில் முதியவர் ஆண்டில் இளையவர், அல்லது துறவில் முதியவர் துறவில் இளையவர் என்ற நிலையை மட்டும் உணர்த்துமே, ஆசாரியன் மாணாக்கன் என்று பொருளாகாது.

எனினும், இந்த மூத்தவர் இளையவருக்கு எதுவும் உபதேசம் செய்வதில்லை. இங்கு வருவோருக்கு நிருவாண தீட்சை வரையில் தருமபுரம் பண்டாரசந்நிதி செய்து கொடுக்கிறார். அவரைக் கேட்டுத்தான், அவர் நியமனம் செய்து கொடுக்கிற தம்பிரானை, காசியில் இருக்கிற சுவாமி இங்குத் தமக்கு அடுத்த தம்பிரானாகவோ அல்லது பணிகளுக்கு வேண்டிய உதவிக்காகவோ எடுத்துக் கொள்வது சம்பிரதாயம். சிலசமயம் காசிச் சுவாமி தமக்கு இன்னார் வேண்டும் என்று கேட்டுப் பெற்றுக் கொள்வதும் உண்டு. பிற்காலத்தில் இந்தவிதமாக வேண்டியவரையே அழைத்துக் கொள்வதுதான் வழக்கமாகி வந்திருக்கிறது. உதாரணமாக,

சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிநாத சுவாமியையும், அவர் அருணந்தி சுவாமியையும், இவர் இன்றுள்ள முத்துக் குமார சுவாமித் தம்பிரானையும் அழைத்துக் கொண்டது இந்த முறையில்தான். முன்னமே காசிக்குமாரசாமி மடத் துக்கு எத்தனைக் கிளை மடங்கள் இருந்தன என்று காட்டிய தைக் கொண்டு, அத்தனைக்கும் கேட்டவுடனே தம்பிரான் களை அனுப்பவல்ல நிலையில் தருமபுரம் இருக்குமானால், அங்கு குறைந்தபட்சம் தகுதிவாய்ந்த ஐம்பது அல்லது நூறு அடியவர்களாவது இருந்து கொண்டே இருந்தார்கள் என்று நாம் யூகிக்கலாம்.

இனி, தில்லைநாயக சுவாமி காலத்து நிலையைச் சிறிது சொல்வோம். சடையப்பர் சீனியராக இருக்கத் தாம் ஜூனியராக இருந்து வந்தார். அப்போது காசித் தருமங்களும் வேறு பண சம்பந்தமான விவகாரங்களும் பலமடங்கு பெருகி விட்டன. தமிழ் நாட்டிலிருந்த ராஜாக்களும் சமீன்தார்களும் காசியில் தருமம் செய்வது தங்களுக்கும் தங்கள் பிதிரர்களுக்கும் மறுவுலகில் நல்லநிலை தரும் என்று நம்பினார்கள். அதன் பொருட்டு அவர்கள் தென்னாட்டில் பல இடங்களில் நிலச் சொத்துக்களை இத்தருமங்களுக் கென்று ஒதுக்கி வைத்தார்கள். இவ்வாறு இவர்கள் நிலச் சொத்து ஒதுக்கி வைத்த காலமும், காசிக் குமாரசாமிமடம் தோன்றி விரிவடைந்து வந்த காலமும் பொருத்தமா யிருந்தன. குமரகுருபரசுவாமியின் பெருமையால் அவருடைய காசிக் குமாரசாமி மடம் மிக்க பிரசித்தி பெற்றிருந்தது. அக் காலத்தில் திருப்பனந்தாளில் எந்த மடமும் இல்லை என்பது நினைவில் இருக்கவேண்டும். தமிழர் எல்லாருமே காசியில் இருந்த மடத்தைத் தங்கள் மடம் என்று நினைத்தார்கள். காரணம் அதனுடைய வியாபகம், பெருமை தங்கள் அனைவருக்கும் செய்த ஆன்மார்த்த உதவி. அது தமிழர் மடம். தஞ்சாவூர் மகாராஷ்டிரமன்னன் திருவாங்கூர் மன்னன் இராமநாதபுரம் சேதுபதி, புதுக்கோட்டைத் தொண்டைமான், சிவகங்கை சமீன்தார், துறையூர் சமீன்தார், கார்வேட்நகர் ராஜா, வேங்கடகிரிராஜா முதலியவர்கள் இவ்வாறு எண்ணித் தாங்கள் செய்ய நினைத்த தருமத்தைக் காசியில் செய்வதற்காக ஏராளமான நிலச்சொத்துக்களைக் குமாரசாமி மடத்தில் தலைவரா யிருந்த தம்பிரான் பெயரில் எழுதி வைத்துத் தருமங்களைச் செய்யும்படி கேட்டுக் கொண்டார்கள். சென்னை முதலான இடங்களில் வாழ்ந்த தனிமனிதர்களும் ரொக்கமாகவே

நிபந்தங்களை ஏற்படுத்தித் தருமங்களை நடத்தித் தரும்படி கேட்டுக் கொண்டார்கள். இவற்றால் குமாரசாமி மடத்தின் பணப்பெருக்கம் ஒருவகை.

மற்றொரு வகை, அக்காலம் வங்கிகள் ஏற்படாத காலம் குறைந்த தொகைகளைத் தபாலாபீஸ் மணியார்டர் முறை மூலம் அனுப்பலாம். ஆனால் பெருந்தொகைகளை அனுப்புவதற்கு இது வசதியாயில்லை. பர்மா, மலாயா முதலான அயல்நாடுகளில் பல வங்கித் தொழில் புரிந்து வந்த செட்டி நாட்டு நகரத்தார் என்ற இனமக்கள் உண்டியல் என்று சொல்லுகின்ற வங்கித் தொழிலை அக்காலத்தில் சுருங்கிய அளவில் செய்து வந்தார்கள். காசி நகரில், விசுவநாதர் கோயில் தருமம், உறவினருடைய ஈமக்கிரியைகளில் விளைந்த தருமம் ஆகிய இருவகைகளிலும் தமிழ்நாட்டில் பலருக்குக் காசிக்குப் பணம் அனுப்ப வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இதற்காக உண்டியல் மேற்கொண்டு பணியாற்றத்தக்க இடங்கள் தங்களுக்கும் இருந்தால் பயனுண்டு என்று காசித்தம்பிரான்கள் எண்ணினார்கள்.

பின்னும், சொல்கிற தில்லைநாயகத் தம்பிரான், காசித் தருமங்கள் நன்முறையில் நடப்பதற்கு உதவியாகத் தென்னாட்டிலும் ஒரு கிளைமடம் இருந்தால் சௌகரியம் என்றும் உண்டியல் முறை பெரிதும் விரிவடையும் என்றும், இதனால் கிடைக்கிற கமிஷன் தொகை கணிசமான ஒரு வருவாயாகவும் இருக்கும். இது குமாரசாமி மடத்தின் சிவப் பணியைப் பின்னும் பெருக்கவும் இடமாயிருக்கும் என்றும் நினைத்தார். இது ஒருவகைப் பண லேவாதேவித் தொழில் என்றே கொண்டாலும், இதற்கு முடிவான நோக்கம் குமாரசாமி மடத்தின் சமயத்தொண்டைப் பெருக்குதலே என்பது தெளிவு.

ஓரிடத்தில் பணத்தை உரிய கட்டணத்தோடு செலுத்தி, மற்றோரிடத்தில் பெற்றுக் கொள்ளும் முறைக்கு உண்டியல்

என்று பெயர். காசியில் உயிர்விடும் எண்ணத்தோடு அங்குப் போய் இருப்பவர்களுக்கு நினைத்த உடனே உயிர் போய் விடுவதில்லை. சிலர் பல மாதம் வருஷம் கூடத் தங்கியிருந் திருக்கிறார்கள். அவர்கள் தங்கியிருப்பதற்குப் பணம் தேவை. முழுமையுமே அவர்கள் கையோடு கொண்டு போவதில்லை. அவர்கள் தமிழ்நாட்டில் தங்கள் உற்றாருக்கு எழுத இவர்கள் தேவைப்பட்ட தொகை கூடக் கொஞ்சம் சேர்த்து மடத்தில் கொடுத்துவிட, மடமானது காசியில் குறிப்பிட்டவர்களுக்குத் தொகையைக் கொடுத்து விடும். இவ்வகையான பணப் போக்குவரத்து நெடுங்காலமாக நடந்து கொண்டிருந்தது.

காசியில் மடத்துக்கு ஏராளமான பணக்கொடைகள் கிடைத்தன. தமிழ்நாட்டில் உள்ளார் மடத்தில் செலுத்திய பணத்தை வரவு வைத்துக் கொண்டு காசியில் அக்கொடை களிலிருந்து உரிய பணத்தை விநியோகம் செய்து விடுவது வழக்கம். இது. இன்று நடைபெறுகின்ற பேங்கின் தொழில் போல 18ஆம் நூற்றாண்டிலேயே நடந்தது. இதைப் பின்னும் விரிவுபடுத்துவதற்காகத் தில்லைநாயக சுவாமிகள் தமிழ் நாட்டில் ஒரு கிளை மடத்தை ஏற்படுத்தி அதன் மூலமாக அதற்கும் காசிக்கும் இடையே ஓர் உண்டியல் முறையை நடத்திக் கொள்ளலாம் என்று எண்ணினார். இந்த எண்ணத்தின் விளைவே, அப்போது குமாரசாமி மடத்துக்கு ஒரு கிளையாகத் திருப்பனந்தாள் மடம் ஏற்பட்ட வரலாறு.

மற்றொரு வழக்கத்தையும் இங்குக் குறிப்பிடலாம். தமிழ்நாட்டில் கன்னியாகுமரி வரையில் பல தரத்திலும் வாழ்ந்திருந்த மக்கள் தங்களுக்கும் தங்கள் மூதாதையர் களுக்கும் காசி க்ஷேத்திரமே மேலான கதியைத் தருவது என்று எண்ணம் கொண்டிருந்தார்கள். காசியில் மணி கர்ணிகை கட்டத்தில், இறந்து போன முன்னோருடைய அஸ்திகளை அதற்கு அங்கமான கிரியைகளோடு சேர்ப்பித் தால் அந்த மூதாதையர் மீண்டும் பிறவாநெறி அடைவார்

கள் என்ற நம்பிக்கை. இந்தப் பணியை காசிக் குமாரசாமி மடமானது அன்று முதல் இன்றளவும் செய்து வருகிறது.

தவிர கயையில் பால்குன தீர்த்தம், விஷ்ணுபாதம், வடவால விருட்சம் என்ற மூன்றிடங்களிலும் பிதிர்க்களுக்குச் சிராத்தம் கொடுத்தால் அவர்கள் நற்கதி அடைவார்கள் என்பதும் ஒரு நம்பிக்கை. அக்காலத்தில் பெரும் வசதி படைத்தவர்கள் பிரயாகை, காசி, கயை என்ற மூன்றிடங்களுக்கும் சென்று இந்தச் சிராத்தம் கொடுத்து வந்தார்கள். ஆனால் குமரகுருபர சுவாமிகள் காலத்திற்குப் பிறகு சாமானிய மக்கள் கூட இந்த மூன்றிடங்களுக்கும் சென்று இந்தக் கிரியைகளையெல்லாம் செய்வதற்குக் குமாரசாமி மடம் உதவி செய்து வருகிறது. இது குமரகுருபர சுவாமி காசிக்குச் சென்று மடம் அமைத்தமையினால் தமிழ் மக்களுக்குக் கிடைத்த ஒரு பேர் உபகாரம்.

### குமரகுருபரரைப் போற்றினோர்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தமிழைப் பிற்காலம் முழுமையிலும் எளிமையாகவும் இனிமையாகவும், சொல் நயமும் தொடை நயமும் விளங்குமாறு, பாடும்படி புலவர்களைத் தமது கவிதை மூலம் மாற்றியிருக்கிறார் என்று குறிப்பிட்டோம். எனினும் அவரைத் தனியே எடுத்து அதிகமான பண்டைப் புலவர்கள் புகழ்ந்ததாகத் தெரியவில்லை. இலக்கிய வரலாற்றில் சில செய்திகள் கிடைக்கின்றன. அவற்றைக் கால முறைப்படி கீழே குறிப்பிடுகிறோம்.

### 1. தருமபுரம் ஸ்ரீ சிவஞான தேசிகச் சுவாமிகள்

இவர் தருமபுரம் ஆதீனத்தில் 10ஆம் பட்டத்தில் ஆதீன கர்த்தராக விளங்கினார். காலத்தால் இவர் குமரகுருபர சுவாமிகளுக்கு மிகவும் நெருங்கின காலத்தில் வாழ்ந்தவர். குமரகுருபர சுவாமிகள் முத்திப்பேறு 1688. அவருக்கு அருள்

செய்தவர் தருமபுரம் 4ஆம் பட்டம் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர். குமரகுருபரர் காலத்திலேயே இவர் முத்தி அடைந்து விட்டார் (1660இல்) என்று தெரிகிறது. அதன்பின் ஞானசம்பந்தர் (1660-1665) திருஞானசம்பந்தர். (1665-1676) திருஅம்பலவர் (1670-1680) அழகிய திருச்சிற்றம்பலவர் (1680-1700) திருநாவுக்கரசு (1700-1715) என்ற ஐந்து தேசிகர் பட்டத்திலிருந்த பிறகு, சிவஞான தேசிகர் என்பவர் 10ஆம் பட்டமாக (1715) பதவி வகித்திருக்கிறார். இவர் காசிக்கு 1720இல் சென்றார். இதை ஊன்றி நோக்கினால் சுமார் 1660-1715 ஆகிய கால எல்லைக்குள்தான் மேற் குறிப்பிட்ட ஐந்து சந்நிதானங்களும் பதவியிலிருந்து முத்தி பெற்றிருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். அதாவது 50 ஆண்டுக் கால எல்லைக்குள் ஐந்து பேர் பதவி வகித்து மறைந்திருந்கிறார்கள். இந்தக் கால எல்லை மிகவும் குறைவு. ஆறாவதாக வருகிறவர். 1715ஆம் ஆண்டில் பட்டம் ஏற்று விரைவிலேயே, 1720இல் காசிக்குப் புறப்பட்டுச் சென்றார் என்று நாம் கருத வேண்டி உள்ளது. இவரைப் பற்றிய செய்திகள் குமரகுருபரர் காசிமட வரலாற்றின்[1] தொடக்கத் தில் 'சிவஞான தேசிகர் காசி வருகை' என்ற தலைப்பில் விவரமாகச் சொல்லியிருக்கிறோம். இவர் காசியில் உள்ள மூர்த்திகளைத் தரிசித்து ஒவ்வொரு சந்நிதியிலும் ஒரு திருவருட்பா என்ற தேவாரப் பதிகம் போன்ற பத்துப் பாடல்கள் கொண்ட பத்துப் பதிகம் பாடியிருக்கிறார். அவற்றுள் கேதார நாதர் கோயிலில் பாடிய திருவருட்பா 10ஆம் பாடலில் குமரகுருபரரைக் குறிப்பிட்டுப் பாடுகிறார் என்பதும் முன்னமே காட்டப்பட்டது. பாடல் முழுமையும் கீழே தருகிறோம்.

பாசுபதன் அருள்பெறும் வசிட்டமுனி என்கின்ற
பரமசிவ யோகிபணியப்
பரவு கேதாரமென வொரு வாரணாசியிற்
பரிவுடன் வந்திருந்தாய்,

---

1. இது வேறு தனிநூல்.

தேசுபெறு கமலைவரு ஞானசம் பந்தனருள்
சேர் குமர குருபரனெனுஞ்
சிவானந்த மாமுனிக் கடையாள மருளியுன்
திருக்கோயில் கட்டுவித்தாய்,
ஆசுகவி நின்புகழ்கள் பாட அடியேனையும்
அழைத்துவந் தன்பருடனே
ஆனந்த கானம் அகலாமல் வைத்தனைஉன்
அருட்கருணை கூறவெளிதோ,
கேசக மணித்திரள்கள் வீசுதிரை மோதிவரு
கெங்கைநதியின் கரையில்வாழ்
கெங்காதரா. கௌரி பங்காள, காசிவரு
கேதார நாத குருவே.

இப்பாடலில் 'தருமபுரத்தில் வந்த கமலை ஞானப்பிரகாசர் வழியில் தோன்றிய ஆசாரியருடைய அருளைப் பெற்ற குமரகுருபரன் என்னும் சிவானந்த மாமுனிக்கு அடையாளம் அருளி, இடிந்து போய் மண்மூடி, இருந்த இடம் தெரியாமல் மூடப்பட்டு இருந்த உன்னுடைய திருக்கோயிலை மீண்டும் கட்டுவித்துக் கொண்டாய்' என்று கேதார நாதரைத் தேசிகர் பாடுகிறார். இது முன்னமே காட்டப்பட்டது. இதனோடு இப்பாடலில் பின்னுமொரு சிறப்பு. இந்த வாரணாசியில் பாசுபதனாகிய பரமேசுவர னுடைய அருளைப் பெற்ற வசிட்டமுனி என்ற பரமசிவ யோகி இமயமலையிலுள்ள கேதாரர் கலைகளை இங்குக் கொண்டு வந்து பிரதிட்டை செய்து வழிபட்டு வந்தார் என்ற கேதாரநாதர் மாகாத்மிய வரலாற்றையும் பாடுவது காணத்தக்கது. இந்தச் சிவஞான தேசிகர் நூல் பாடிய காலம் கி.பி. 1720ஐயொட்டி இவர் சுவாமிகளைப் பெயர் சுட்டியே சொல்கிறார்.

## 2. சிதம்பரமுனிவர் பாடிய க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ்

சிதம்பர முனிவர் என்பவர் முருகன் மீது ஒரு புது முறை யான சிறப்புடைய பிள்ளைத் தமிழ் பாடியிருக்கிறார். இதில் இவர் "ஒரு நூறு தலம் மேவு குமரகுருவின் தண்டை கிண்கிணி சரணங்கள் புகழும் நம் தமிழ் மாலை" என்று காப்புச் செய்யுளில் குறிப்பிடுகிறார். அதாவது முருக க்ஷேத்திரங்களின் கோவையாக நூறு தலங்களைக் கொண்டு பிள்ளைத் தமிழின் பத்துப் பருவங்களிலும் வரும் பத்துப் பாடல்களாகிய நூறு பாடல்களையும் நூறு தலங்களுக்கும் பொருத்திப் பாடுகிறார் என்பது. இந்த நூறு பாடல்களில் முத்தப் பருவத்து இறுதிப்பாடலில் முருகனைப் பாடிய கீரன், அவ்வை, பொய்யாமொழி, அருணகிரிநாதர், கருவூரர், 'குவியும் மனமறாச் சிறு புலவர்', பகழிக்கூத்தர், காசி வாழும் சிவானந்த குமரகுருபரமுனி ஆகிய இத்தனை பேருக்கும் கவி சொல் என்று அடி எடுத்துக் கொடுத்தான் புள்ளூரில் வந்த முத்துக்குமரன் என்று சொல்கிறார். புள்ளூர் என்பது புள்ளிருக்கு வேளூர் என்னும் வைத்தீசுவரன் கோயில். இங்குக் குமரகுருபரர் வந்தபோது அவர் பாடும் பொருட்டுப் 'பொன் பூத்த குடுமி' என்று முருகன் அடி எடுத்துக் கொடுத்தான் என்பது இவருடைய வரலாற்றில் சொல்லப்பட்டது. இது இந்தத் தலத்துக்குரிய சிறப்புச் செய்தி.

இரண்டாவது தருமபுரத்துக்குரிய பாடலில் இவர் கூறு கின்ற செய்திகள் இங்குக் கவனிக்கத்தக்கன. வாரானைப் பருவம் 10ஆம் பாடல்.

உம்பர்பணி ஆரூரன் அருளினால் ஆனந்த
ஒளிவடிவ மானகுரவன்
ஒருசெந்தி லம்பதியி லுன்னருளி னாற்பாடும்
உயர்குமர குருபரமுனிக்கு

அம்புயத்தாள் சென்னி சூடினோன், எலிபூனை
 அரபோத் துக்குயில்கிளி
அத்துவித மாகவே சத்திநிரு வாணமெனும்
 அருள்ஞான தீட்சைசெய்தோன்,
எம்பவ மகற்றினோன், எண்ணிலா அடியவரை
 இன்பவா ரிதியில் வைத்தோன்,
எழில்வேள்வி மலையிலோர் அம்மையெங் கேஎன்று
 இயம்பியே திருமுன்நிற்கும்
சம்பந்த னுக்கருள்செ யென்றுவள் ளிக்கருள்செய்
 சைவநா யகன், வருகவே
தருமையம் பதிமுருக ஒருநாலு பாதமுந்
 தருகுமர குருவருகவே.

இப்பாடலில் தருமபுர ஆசாரியர் ஆரூரனாகிய கமலை ஞானப்பிரகாசருடைய அருளினால் ஆனந்த ஒளி வடிவமான குரவன் என்று குரு ஞானசம்பந்தரைக் குறிப்பிட்டு, அவர் பின் வந்த ஓர் ஆசாரியர் ஒரு செந்திலம்பதியில் உன் அருளினால் பாடும் உயர் குமரகுருபர முனிக்கு அம்புயத்தாள் சென்னி சூடினோன் என்று குறிப்பிடுகிறார். தருமபுரத்து முருகனைப் போற்றுகின்ற இப்பாடல் இங்கிருந்த சிறப்புடைய செயல்கள் செய்த ஆசாரியரைப் பட்டியலிட்டுச் சொல்கிறது. குமரகுருபர முனிக்கு அருள் செய்தவர் 4ஆம் பட்டம் மாசிலாமணி தேசிகர். பின் எலி, பூனை, அரவு, போத்து, குயில், கிளி ஆகிய விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் சத்தியோநிருவாண தீட்சை செய்தவர் என்பது 9ஆம் பட்டம் திருநாவுக்கரசு தேசிகர் என்பது தருமபுர வரலாறு. எம்பவம் அகற்றினோன் என்பது இந்த நூல் பாடிய ஆசிரியர் தம்மை ஆட்கொண்டு தீட்சைகள் செய்வித்துத் தம்முடைய பிறவி நோயைப் போக்கினவர் என்று சொல்வதால் இந்த நூல் செய்த ஆசிரியர் இதேத் திருநாவுக்கரசு தேசிகருடைய மாணாக்கர் என்று தெரிகிறது. அப்பால் வேள்வி மலையைக்

குறிப்பிட்டிருப்பது 6ஆம் பட்டத்திலிருந்த திருஞானசம்பந்த தேசிக சுவாமிகளைக் குறித்தது. இவர் ஒரு சமயம் குற்றாலத்தை அடுத்த வேள்வி மலைக்கு வழிபாட்டுக்குச் சென்றார். அந்த வேள்வி மலை முருகனை அருகில் நின்று இவர் தரிசித்த காலை, கருவறைக்குள் ஒளி சரியாக விழாமை யால் முருகன் வலப்புறம் இருந்த வள்ளிநாயகியாருடைய திருவுரு இவர் கண்ணுக்குப் புலனாகவில்லை. அச்சமயம் இந்தக் குருநாதர் இயல்பாகவே தம் அருகில் இருந்தவர் களை நோக்கி 'இங்கு வள்ளிநாயகி இல்லையோ?' என்று வினாவினாராம். அப்போது வள்ளி தேவியார், திருமுன் நிற்கும் (திருஞான) சம்பந்தனுக்கு அருள் செய் என்று முருகப் பெருமானால் உரைக்கப்பட்டு, வள்ளிநாயகி தம் தலையைச் சற்றுச் சாய்த்து 'இதோ இருக்கிறேன்' என்று இந்தக் குருவுக்குக் காட்சி கொடுத்தாராம். அத்தகைய தருமையம்பதி என்று பாடுகிறார். இப்பாடலில் தருமபுரத்துக் குரிய பல வரலாறுகள் ஆசாரிய பரம்பரைக்குரிய நான்கு வரலாறுகள் சிறப்பாகச் சொல்லப்படுகின்றன.

இந்த இரண்டு பாடல்களிலும் சொல்லப்பெற்ற பொருளமைதியால் இந்த நூலைப் பாடியவர் என்று வழங்கப்படுகின்ற சிதம்பர முனிவர் தருமபுர ஆதீனத்தில் 9ஆம் பட்டத்திலிருந்த திருநாவுக்கரசு தேசிகருடைய மாணாக்கர் என்று திட்டமாய்த் தெரிகிறது. எப்படியோ இந்தச் செய்தி வரலாறு எழுதினோர் கண்ணில் படவில்லை.

திருநாவுக்கரசு தேசிகர் காலம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகள் (1700-1715).

### 3. மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய குமரகுருபரர் சரித்திரம் :

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை திருவாவடுதுறை ஆதீனத்தில் மேலகரம் சுப்பிரமணிய தேசிகரால் மகாவித்துவான் என்ற நிலைக்கு உயர்த்தப்

பட்டவர். அவர் குமரகுருபர சுவாமிகள் பாடலில் அளவற்ற ஈடுபாடு உடையவர். அது காரணமாக அவருடைய சரித்திரத்தை 338 பாடல் கொண்ட ஒரு புராணம் போல எழுதியிருக்கிறார். இவ்வாறு எழுதச் செய்தவர் திருப்பனந்தாள் காசி மடத்தின் தலைவராயிருந்த 14ஆம் பட்டம் இராமலிங்கத் தம்பிரான். இந்தச் சரித்திரம் இவர் எழுத நேர்ந்த நிலைமையையும் அதன் தன்மையையும் டாக்டர் சாமிநாதையர் அவர்கள் பிள்ளையவர்கள் சரித்திர முதல் பாகத்தில்(பக்கம் 333)பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

''திருப்பனந்தாளிலுள்ள ஸ்ரீகாசிமடத்துத் தலைவராக யிருந்த ஸ்ரீகாசிவாசி இராமலிங்கத் தம்பிரானவர்களுக்கும் இவருக்கும் மிக்க பழக்கம் உண்டு. இவரைக் கொண்டு ஸ்ரீஆதிகுமர குருபர சுவாமிகள் சரித்திரத்தைக் காப்பியச் சுவைபடச் செய்விக்க வேண்டுமென்னும் எண்ணம் இவருக்கு இருந்தது. ஒரு தினம் இவருடன் சம்பாஷணை செய்து கொண்டிருந்த பொழுது அந்தச் சரித்திரத்தைச் செய்ய வேண்டுமென்றும் அதில் இன்ன இன்ன பாகங்களை இன்ன இன்ன விதமாகப் பாடவேண்டுமென்றும் அவர் வற்புறுத்திச் சொன்னார். அவர் சொல்லியவற்றிற் சில இவருக்கு உடன் பாடாக இராவிட்டாலும் மறுத்தற் கஞ்சி அவர் விரும்பிய வாறே அந்நூலைச் செய்து நிறைவேற்றினார். அதில் ஸ்ரீகுமரகுருமர சுவாமிகளுடைய இளமைப் பருவ வருணனை யும் ஸ்தலயாத்திரையும், திருச்செந்தூராண்டவன் அருளிச் செயலும், பிறவும் மிக நன்றாக அமைக்கப் பெற்றுள்ளன.

அந்நூலிலுள்ள பாடல்கள் 338. அவற்றுள் சில வருமாறு:-

சாலெலாம் வெண்தரளம்
தளையெலாஞ் செஞ்சாலி
காலெலாங் கருங்குவளை
'காவெலாங் கனிச்சாறு'

பாலெல்லாங் கழைக்கரும்பு
    பாங்கெலா மிகத்திருந்தி
நூலெலா நனிவிதந்து
    நுவல்வளத்த தந்நாடு:

ஆய்ந்தபுகழ்ப் போர்வையுடை
    யத்திரு நாட் டினுக்கழகு
தோய்ந்ததிரு முகமென்னத்
    துலங்குநக ரொன்றதுதான்
ஏய்ந்தபெருஞ் சைவர்குழாந்
    திருக்கயிலை என்றிசைப்ப
வாய்ந்த வயி ணவர்கள் தந்திரு
    வைகுண்ட மெனுநகரம்.

இலையமில் குமர வேள்முன்
    வணங்குவார்க் கென்றுந் துன்பம்
இலையடு பகைசற்றேனும்
    இலைபடு பிணிநி ரப்பும்
இலையளற் றுழன்று வீழ்தல்
    இலைபல பவத்துச் சார்பும்
இலையென விலைவி பூதி
    எகுத்தெடுத்துதவல் கண்டார்.

இந்தக் குமரகுருபரர் சரித்திரம் பற்றி அனுபந்தம் இரண்டில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. இது அழகாக எழுதப்பட்ட பாடலாயினும் உண்மை வரலாறு அன்று.

4. புலவர் புராணம் :

திருப்புகழ்ச் சுவாமி என்று வழங்கிய தண்டபாணி சுவாமிகள் தம்முடைய புலவர் புராணத்தில் எல்லாப் புலவர்,

களுக்கும் புராணம் பாடியது போலக் குமரகுருபரசுவாமி களுக்கும் ஒரு புராணம் பாடியிருக்கிறார். அது 42 பாடல் கள் உடையது இந்தச் சரித்திரம் பற்றி ஒரு விரிவான குறிப்பு அனுபந்தம் மூன்றில் சொல்லப்பட்டுள்ளது.

### ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் புராணம்

இது சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயரால் பாடப் பெற்று, சாலியமங்கலம் மு. சாம்பசிவ நாயனரால் 1918இல் பதிப்பிக்கப் பெற்றது. 1001 பாடல்களைக் கொண்டது. திருப்பனந்தாளில் 17 ஆம் பட்டத்திலிருந்த சொக்கலிங்கத் தம்பிரானின் வேண்டுகோளின்படி பாடப்பெற்றது. இதில் பாயிரப் பகுதியில் 24 பாடல். அப்பகுதியில் குமர குருபரர் தோத்திரமாக வருவது பின் வருவது.

குலவுபுலவோர் நீதியே குமர குரு
 பரமுனி யெங்கோவே நுந்தம்
இலகு தெய்வத் தன்மைநிறை புகழ்ச்சரிதந்
 தமிழ்க் கவியால்இசைத்தாலிந்த
உலகர் பாராயணஞ்செய் துய்குவர் யான்
 உய்குவனென்றுளத்திற் காதல்
வருவதனாற் புகலலுற்றுங் கருணை துணை
 செய வேண்டி வணங்கினேனே.

பாயிரத்தின்பின் பின் வரும் படலங்கள் உள்ளன. திரு நாட்டுப் படலம், திருநகரப் படலம், திரு அவதாரப் படலம், திருச் செந்தில்சேர் படலம், மதுரைவரு படலம், பிள்ளைத் தமிழ் அரங்கேற்று படலம், தருமபுரம் சார்ந்த படலம், சிதம்பரம் சேர் படலம் , உபதேசம் பெறு படலம், காஞ்சி சீர் படலம், காசி சேர் படலம், காசி அரசனைக் காண் படலம், அன்னதானப் படலம், நித்திய ஞான நெட்டை உருபடலம், தருமை மும்முறை சார்ந்து காசிசார் படலம் மரபு விளக்கப் படலம் என்பன. இவை யாவும் புராணச் செய்திகளே அன்றி

வரலாற்றுக்குப் பயன்படுவன அல்ல. சரித்திரத்தில் குழந்தையை முருகன் எழுப்பி நாவை நீட்டச் செய்து நாவில் ஆறெழுத்தை எழுதுகிறான். குழந்தைப் பருவத்திலிருந்தே இவர் உலகப் பற்றைத் துறந்திருக்கிறார். மதுரையில் பிள்ளைத் தமிழ் அரங்கேற்றம். அரசன் இவருக்கு விலை உயர்ந்த அணிகளால் அலங்காரம் செய்கிறான். பிறர்வேண்டு கோளின்படி இவர் மீனாட்சிபுரம் அங்கயற்கண்ணி இரட்டை மணி மாலை என்பன சொக்கலிங்கர் கலம்பகம் பாடுகிறார்.

குமர குருபரர் பொதிகையில் பரிவாரங்களோடு புறப் படுகிறார். திருவாரூரில் நான்மணிமாலை பாடி அரங் கேற்றுகிறார். தருமபுரம் அடைகிறார். தேசிகர் சாத்திர முரல அடியார் புடை சூழ வீற்றிருக்கிறார். குமர குருபரர் சென்று வணங்க தேசிகர் திருநீறு அளிக்கிறார். ஐந்து பேரறிவும் என்ற பாடலின் அனுபவப் பொருள் அவர் கேட்க இவர் விடை தடைப்பட, அவரே குருநாதர் என்று துணி கிறார். அவர் கட்டளைப்படி சிதம்பரம் செல்கிறார். வழி யில் புள்ளிருக்கு வேளூரில் முருகன் தடுத்து நூல் பாடச் செய் கிறான். பின்னர் இவர் சிதம்பரம் செல்கிறார். அங்கு ஒரு புராணிகர் இவரை வணங்கவில்லை என்ற கதை. பின்னர் இவர் சிதம்பர மும்மணிக் கோவை, செய்யுட் கோவை, அம்பிகை இரட்டை மணி மாலை பாடித் தருமபுரம் திரும்பு கிறார். பின் குரு உபதேசம் செய்ய அவர் கட்டளைப்படி இவர் காசிக்குப் பயணமாகிறார். அதற்குமுன் தம்மிடமிருந்த நாயக்க அரசன் கொடுத்த செல்வமனைத்தையும் குருநாதர் திருவடியில் சமர்ப்பித்துப் பணிய அவர் இவற்றை நீ எடுத்துச் சென்று காசியில் தருமம் செய்க எனவும், இவர் அவ்வாறே ஒட்டகத்தின் மேலேற்றிச் செல்கிறார். பின்னர் சீகாழி சிதம்பரம் பணிந்து காஞ்சிபுரம் அடைந்தார். அங்கு

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் வந்து வாதிட அவரை வென்று மேற் செல்லலானார்.

காசி அடைந்து கேதார நாதரைப் பணிந்து அங்குக் காசிக் கலம்பகம் செய்து விசுவேசர் சந்நிதியில் அரங் கேற்றினார். பின் வாணியைத் தியானித்து சகலகலாவல்லி மாலை பாடி ஒன்பது கவியளவும் அவள் கிருபை செய்யா திருந்து பத்தாவது கவியிலே மகிழ்ந்து பாஷைகளில் வல்ல மையை அனுக்கிரகம் செய்தாள். பின்னர் இவர்காசியிலிருந்த் டில்லி பாதுஷாவின் அரண்மனை அடைந்து அவனால் வரவேற்கப் பெற்று அவன் சபையில் அவன் சிங்காசனத்தில் இருந்தபடியே இவரை வரவேற்றான். இவர் காளியை தியானம்செய்து அவள் சிங்கவாகனம் கொடுக்க இவர் அதில் ஏறி அரசவையை அடைந்தார். இவர் 'நீயிருப்பது உயிரற்ற சிங்காசனம் நாமிருப்பது உயிருள்ள சிங்கம்' என்று தம் பெருமையை அவனுக்குணர்த்திப் பிரசங்கம் செய்தார். காமரசம் தோன்றப் பிரசங்கம் செய்தபோது அவருடைய ஆட்சேபமெல்லாம் கேட்டு மறுநாள் கதைகளில் சொல்லுகிற மாதிரி சமாதானம் செய்தார். பாதுஷா மிகவும் மகிழ்ந்து தம்முடன் விருந்துண்ணக் கேட்டான். அந்தக் கதைகள் தொடர்கின்றன. அதிசயித்த மன்னன் யான் செய்யும் பணி என்ன என்று வேண்டினான். முனிவர் தமக்கு இடம் வேண்டும் என்று கேட்டார். கேதார நாதர் கனவில் வந்து உபய கருடன் வட்டமிடும் இடம் காட்டும்படி சொல்லவும் அவர் அப்படியே கேட்டுப் பெற்றார். பாதுஷா ஒரு மடம் கட்டிக் கொடுத்தான். பின் முனிவர் அந்த மடத்தில் எழுந் தருளி அன்னதானங்கள் செய்து வந்தார். கேதார நாதர் கோயிலையும் புதுப்பித்துப் பூசை செய்வித்தார். தொடர்ந்து குமாரசாமி மடத்தில் விரிவான அன்ன தானங்கள் செய்து வந்தார். திருமலை நாயக்கன் பெயரால் திருமலை சத்திரம் என்ற ஒன்று அமைத்து அதன்மூலம் அன்னதானங்களைப்

பெருக்கி வந்தார். இவ்வாறு நடந்து கொண்டிருந்த போது தினமும் இவர் ஞானநிஷ்டையில் அமர்ந்திருப்பது வழக்கம். இப்படி இருக்குங் காலையில், மூன்று முறை தருமபுரத்துக்குத் திரும்பி வந்தார். கடைசி முறையில் தருமபுரத்திலேயே தங்கிவிட வேண்டுமென்ற விருப்பத்தைச் சொல்ல தேசிகர் 'காட்டிருந்தாலும் மலையிருந்தாலும்' என்ற பாட்டைச் சொல்லி எங்கே இருந்தாலும் அங்கே சொக்கலிங்க மூர்த்தியின் அருள்கிடைக்கும் என்று காசிக்கு அவரை அனுப்பினார். பின்னர் குமர குருபரர் காசிக்குத் திரும்பி வந்து அங்கு தருமங்களையும் வழிபாட்டையும் நடத்திக் கொண்டு வந்து விபவ ஆண்டு வைகாசி மாதம் அமர பட்சத் திருதியையில் சிவபெருமான் திருவடியை அடைந்தார்.

இதன் பிறகு மரபு விளக்கம் என்று சொல்லி குமர குருபரர் தொடங்கி, இராமலிங்கத்தம்பிரான்(14),அவருக்குப் பின் திருவாவடுதுறைக் குமாரசாமித் தம்பிரான், பின் பொன்னம்பல சுவாமி பதவியில் இருந்தனர். சோம சுந்தர சுவாமிக்குப் பின் வந்த சொக்கலிங்க சுவாமி விருப்பப்படி ஆசிரியர் இந்தப் புராணத்தைச் செய்து கொடுத்திருக்கிறார்.

அப்போது இத்திருப்பனந்தாள் காசி மடத்துக்குக் கிளை மடங்கள் காசிஇராமேசுவரம் சிதம்பரம், மாயூரம், திருவாப் பாடி, கருப்பூர், திருலோக்கி, கும்பகோணம், திருவானைக்காஸ்ரீரங்கம் சுசீந்திரத்துக்கு அருகிலுள்ள ஆசிராமம் ஆகிய இடங்களில் இருந்தன. மடத்தின் கட்டளைகள் காசி இராமேசுவரம், திருப்பதி, திருக்காளத்தி சிதம்பரம், வைத்தீசுவரன் கோயில், தருமபுரம், திருநள்ளாறு, மாயூரம், திருலோக்கிம், சிவபுராணி, சேய்ஞ்ஞலூர், திருவாப்பாடி கருப்பூர், கும்பகோணம், சுவாமிமலை, திருவானைக்கா மதுரை, திருச்செந்தூர் ஆசிராமம் ஆகிய இடங்களில் நடை பெற்றன.இங்கெல்லாம் கோயில் வழிபாடும் அன்னதானமும் சிறப்பாக நடந்தன. இவ்வாறு ஆசிரியர் புராணத்தை முடிக்கிறார்.

### 6. மகாலிங்க ஐயர் பாட்டு :

ஒரு சமயம் சபாபதி முதலியார் தம் காலத்துப் பெரிய தமிழ் வித்துவானாயிருந்த மழவை மகாலிங்க ஐயரிடத்து மீனாட்சி சுந்தரம் பிள்ளையை அழைத்துக் கொண்டுபோய் அறிமுகப்படுத்தி வைத்தார். பிள்ளை தம்முடைய அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழில் ஒருபாட்டைச் சொல்லவும் மகாலிங்க ஐயர் மிகவும் அனுபவித்து மூன்று முறை சொல்வித்துக் கேட்டார். கேட்டபின் தாமே பிள்ளை யவர்களுடைய கவிதையின் தன்மையைப் பாராட்டிப் 'பிள்ளைத் தமிழ்பாட வல்லவர்கள் குமரகுருபர சுவாமிக பகழிக் கூத்தர் (திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் பாடியவர்) என்ற கருத்து இப்போது பொய்யாகி விட்டது, என்று பின்வரும் பாடலைச் சொல்லிப் பாராட்டினாராம்.

தருமைவளர் குமரகுரு முனிவன் கல்வி
சார்பகழிக் கூத்தனெனத் தரணி யோர்சொல்
இருவருமே நன்குபிள்ளைத் தமிழைச் செய்தற்
கேற்றவரென் றிடுமுரைவெங்கிட்ட தம்மா
அருமைபெறு காவையகி லாண்ட வல்லி
யம்மைமேன் மேற்படிநற் றமிழை ஆய்ந்து
சுருதி தவறாத குணன்மீ னாட்சி
சுந்தரமா லன்பினொடு சொல்லும் போதே.

### 7. பாரதிதாசன் :

வாழ்க்கையில் விசித்திரங்கள் நடைபெறுவது போல இலக்கியத் துறையிலும் நடைபெறுகின்றன. பாரதிதாசன் எதிர்பாராத முத்தம் என்றவொரு சிறு செய்யுள்நூல் எழுதியிருக்கிறார். அதன் முதல் பாகத்தில் வள்ளியூர் என்ற ஊரில் பிறந்து வளர்ந்த ஓர் இளைஞன் ஒரு பெண் ஆகியோர் வாழ்க்கையைக் கதையாக எழுதியிருக்கிறார். அவ் வூரிலிருந்த முத்து வணிகர் இருவர் மறைநாயகன், மான

நாயகன். மறை நாயகன் புதல்வி பூங்கோதையும் மானநாயகன் புதல்வன் பொன்முடியும் ஆழ்ந்த காதல் கொண்டிருந்தனர். உறவினர்களான பெற்றோர் இருவரும் பின்னால் பகைமை பூண்டு தம் மக்களுடைய காதலை அறிந்து அப்பகைமை காரணமாக மக்கள் இருவரையும் அளவற்ற துன்பத்துக்கு உள்ளாக்குகின்றனர். பொன்முடி முத்து வியாபார நிமித்தம் தெற்கிருந்து வடக்கே செல்பவரோடு அனுப்பப்படுகின்றான். டில்லி வரையில் சென்று முத்து வியாபாரம் செய்து எல்லாரோடும் திரும்புகின்றான். அவன் வடநாட்டில் துறவிகள் யாகத்துக்குப் பொன் கேட்டபோது "நீங்கள் உயிர்க் கொலை செய்கிறவர்கள், உங்களுக்குப் பொன் கொடுக்க முடியாது" என்று கொடுக்க மறுத்து உயிர்க் கொலை செய்யும் யாகத்தைப் பழித்துப் பிரசாரம் செய்கிறான். துறவிகள் திரண்டு வணிகரை மாய்க்கச் சூழ்ச்சி செய்கிறார்கள். இதற்கிடையில் பூங்கோதை முத்து வாணிகம் செய்ய வடக்கு நோக்கிவரும் மற்றொரு வணிகர் குழாத்துடன் சேர்ந்து தன் காதலனைக் காணும் நோக்கத்தோடு வருகிறாள். திரும்பும் பொன் முடியை இவள் சந்திக்கும் நேரம் வடநாட்டு ஆரியத் துறவிகள் இவர்கள் மேல் பாய்ந்து பலரைக் கொல்கிறார்கள். பொன்முடி பூங்கோதைக்கு எதிர்பாராத முத்தம் அளிக்கின்ற நிலையில் எதிர்பாராது கொல்லப்படுகிறார்கள். இதுவே முதல் பகுதியின் கதை.

இரண்டாம் பகுதி குமரகுருபர சுவாமிகளின் கதையைச் சொல்லுகிறது. தருமபுரத்தில் வீற்றிருக்கும் சாந்த குருமூர்த்தி மாசிலாமணி தேசிகனார் திருவடி வணங்கி, கதையில் கண்ட நாயகன்மார் இருவரும் தம் மக்கள் சுயசரிதம் சொன்னார். அப்போது அந்தத் தேசிகர் "உயிர்க் கொலை வடநாட்டில் இல்லாது ஒழிக்க இவ்விருவரும் வகை செய்தார், கடவுள் கருணை இதுவாம். பழிக்குப்பழி

வாங்குதல் சைவப்பாங்குக்கு இழிவு. வடநாட்டில் சைவம் வளர்ப்போம். இந்த நாளில் குமரகுருபரன் ஞானகுருவாய் நமையடைந்தான். அவன் சரிதம் சொல்லுகின்றோம் கேளீர்'' என்று தொடங்கிக் குமரகுருபரர் வரலாற்றைச் சொல்லுகிறார்.

கயிலாசபுரத்தில் சண்முகக் கவிராயருக்கும் சிவகாமிக்கும் வாயில்லாப் பிள்ளையாகக் குருபரன் அவதரித்தான். பெற்றோர் துயரினால் செந்தூர் எய்திக் கந்தனைத் துதித்தார். 40 நாளில் வாக்கு நல்காயேல் எங்கள் ஆவி தோற்பது திண்ணம் என்று இருந்தார். முருகன் குருபரன் தூங்கும் வேளை நாவில் சடாட்சரம் அருளிச் சென்றான். ''அம்மையே! அப்பா!'' என்று பெற்றோரை எழுப்பி நடந்த தெல்லாம் தெரிவித்தான் குருபரன். விசுவரூப் தரிசனம் செய்வானாகி கந்தர்கலி வெண்பா மொழிந்தான். ஞான சற்குருவை நாடி விடைபெற்றுக் குமாரகவி எனும் தம்பியோடு மதுரை சென்றார். போகும்போது திருமலை நாய்க்க மன்னன் ஆனைமேல் எதிர்கொண்டு தனக்கு மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழை அரங்கேற்றுமாறு அம்பிகை கனவில் சொல்லியபடி யானைமேல் ஏற்றிச்சென்று அரங்கேற்ற நிகழ்ச்சி நடத்தினான். (இங்கு தேவர் துய்யன தமிழ்ச் சாராயம் துய்த்திடக் காத்திருந்தார் என்று சொல்லப் படுகின்றது). அந்நேரம் அர்ச்சகர் பெண் போல அம்பிகை ஓடிவர மன்னன் மடியில் வைத்துக் கொண்டான். குமர குருபரன் பாடல் கூறிப்பின் பொருளும் கூறி மற்றோர் அமுதப்பாட்டு ஆரம்பித்தான். அப்பாட்டுக்கு இப்பால் எங்கும் சமானம் ஒன்று இருந்ததில்லை என்று சொல்லிவிட்டு 'தொடுக்கும் கடவுட் பழம் பாடல்' என்ற பாடல் முழுமை யும் நூலின் பாட்டாகவே அமைத்துச் சொல்லுகிறார். சிறுமி கேட்டுத் தலை அசைத்து இன்னொரு முறையும் கூற இரந்து பாட்டுக்குப் பொருளாய் நின்ற அம்பிகை அப்போது

கூட்டத்தில் இல்லாது மறைந்து விட்டாள். மன்னன் காணிக்கை பலவும் வைத்துத் தொழுதனன். குருபரன் பின் துதிநூலும் நீதிநூலும் தந்து பிறகு தம்பியை இல்லம் போக்கி சிராப்பள்ளியோடு ஆனைக்காகவும் சென்று திருவாரூரில் நான்மணிமாலை பாடி நம்மை வந்து அடைந் தான். (என்று மாசிலாமணி தேசிகர் சொல்லிக் கொண்டு வருகிறார்).

'நம்மை வந்தடைந்த காலம் நாம் ஒரு கேள்வி கேட்டோம்' என்று 'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள' என்ற பாடல் நூலின் பகுதியாகவே சொல்லப்படுகின்றனது. 'இதன் அனுபவப் பயனை நாம் கேட்கக் குருபரன் தவித்துத் திருவடி சரணம் என்று வணங்கினான். சிதம்பரம் ஏகி உள்ளான். அவன் திரும்பி வரும்நாள் இன்றுதான். அவன் வரவை நீங்கள் இருந்து காணுங்கள் என்றார்.

இரு நாயகன்மாரும் காத்திருந்தார்.

புள்ளிருக்குவேளூர் முத்துக்குமரன் மீது பிள்ளை நூல் பாடி மன்றில் பெம்மானை மும்மணிச்சொல் தெள்ளுநீர் சூட்டி சிதம்பரச் செய்யுட்கோவை அம்மை இரட்டை மணி மாலை அருளினான். பின் பண்டார மும்மணிக் கோவை பாடி ஞானாசானின் அடிமலர் தொழுது பரிசாய்ப் பெற்ற நெடுநிதி அனைத்தும் வைத்தான். அப்போது தேசிகர் குருபரனுக்கு இது சொல்லுகிறார்.

''அப்பனே! இவ் அரும்பொருள்கொண்டு வடநாடு எய்தி; அங்குள்ளார் அசைவர், உயிர்வதைப் போர் அங்கு சைவ மடாலயம் ஸ்தாபிக்க, கோயில் காண்க. சிவபிரானின் அருளினால் உணவு நல்க, சைவசத்திரங்கள் காண்க. தடாகம், பூந்தோட்டங்கள் செய்து மீள்க'' என்று ஆசி கூறிப் பிறகு காவியும் நல்கினார். வடநாடு எம்பிரான் இருக்கை

யாகி தென்தமிழ் நாட்டினைப்போல் சிறப்பெலாம் எய்துக என்று சொல்லி அனுப்பினார். குருபரர் பிறைசூடி தன்னைப் பாடிப் பெருஞ்சிறப்போடு சென்றார்.

தேசிகர் சொன்ன சரிதத்தைக் கேட்ட நாய்கன்மார் இருவரும் அப்போது குருபரன் அங்கு வந்ததும் விடைபெற்று வடநாடு சென்றதும் கேட்டார்கள் கண்டார்கள், எங்களுடைய குடும்பப் பரம்பரையாகிய ஆல் இன்றோடு சாய்ந்ததென்று உளம் பதைத்தார்.

இது ஒரு மிகவும் சிறப்பான இலக்கியச் செய்தி. இந்தக் கவிஞர் குமரகுருபரர் வரலாற்றை அவர் காசி செல்கிற வரையில் தருமபுர ஆதீன குருவே சொல்லும்படி செய்கிறார். இவர் முழுமையாக வழங்கும் குருபரர் வரலாற்றை அப்படியே எடுத்துச்சொல்லுகிறார் என்பது நன்கு விளங்கும். இதன் பொருட்டே இந்த விசித்திரமான நூலின் சுருக்கம் இவ்வளவு விரிவாக இங்குத் தரப்பட்டது. சொல்லுகிறவர் புரட்சிக் கவிஞர் என்று பெயர் பெற்றிருந்த தற்காலக் கவிஞர். அவர் குமரகுருபரரிடம் மிக்க ஈடுபாடு கொண்டவர் என்பது மட்டுமல்லாமல் குருபரர், புலால் நீக்குதல் சைவம் பரப்புதல் என்ற இரண்டு காரணங்களுக்காக வடநாடு சென்றார் என்று கருதுவதை நாம் காணலாம்.

**ஐயரவர்கள்**

ஐயரவர்கள் எழுதியுள்ளவற்றிலிருந்து எடுக்கப்பட்ட சில பகுதிகள் பின்வருவன.

“இவர் குமாரசாமி மடம் கட்டுவதற்கு மூகம்மதியர் தலைவன் வேண்டிய வசதிகள் செய்து கொடுத்தான். அதில் அரசர்கள் மட்டும் கட்டிக் கொள்ளும் சர்ஜா என்று வழங்கப் படும் முன் கட்டிடத்தையும் அத்தலைவன் வேண்டுகோளின் மேல் கட்டிக் கொண்டார். இதனால் அத்தலைவனுக்கு அவரிடமிருந்த பெருமதிப்பு விளங்கும்.

''தம்முடைய மடத்தில், புராணசாலை யென்னும் பெயருடன் ஒரு மண்டபம் அமைத்து அங்கே நாள்தோறும் தமிழ்ப் புராணங்களையும் பிற தமிழ் நூல்களையும் வாசித்து இந்துஸ்தானி பாஷையில் அந்நூல்களின் பொருளை விரிவாக எடுத்து இவர் பிரசங்கித்து வந்தார். அக்காலத்திற் பல பக்தர்களும் வந்து கேட்டு மகிழ்ந்து போவது வழக்கம். அங்ஙனம் வருவோர்களுள் இராமபக்தர்கள் பெரும்பான்மை யோராவர். கம்பராமாயணம் முதலியவற்றையும் வாசித்து இவர் பொருள் சொல்லி வருவதுண்டு.

''இன்னும் இவரால் இயற்றப்பட்ட நூல்கள் பல இருக்கலாம். அவை இப்போது அகப்படாமையால் அவற்றின் பெயர் தெரியவில்லை.

''விநாயகர், முருகக்கடவுள் சிவபெருமான், அம்பிகை, சரசுவதி, ஆசிரியர் முதலியவர்களைப்பற்றி இவர் பாடியிருக்கிறார். மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் திருமாலைப் பாராட்டுகையில், ''பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப்பசுங் கொண்டலே'' என்று திருமால் தமிழில் விருப்பமுடையவர் என்பதை விளக்கியிருக்கிறார்.

இவருடைய செய்யுட்களில் சங்கநூற் கருத்துக்களும், சொற்றொடர்களும், சைவசித்தாந்த சாஸ்திரத்திலுள்ள நுட்பமான பிரயோகங்களும் பலவிடங்களில் எடுத்தாளப் பட்டு விளங்குகின்றன. பிறபாஷைச் சொற்களை அமைத்துப் பாடியிருக்கிறார். அதற்கு உதாரணமாக மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் முருகக் கடவுளைப் பற்றிக் கூறும் ''கலாமயிற் கூத்தயர், குளிர்புன மொய்த்திட்ட சாரலிற் போய்ச் சிறு குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு குமரனை முத்துக் குமாரனைப் போற்றுதும்'' என்ற செய்யுளில் இந்துஸ்தானி பாஷையிலுள்ள 'சலாம்' என்ற வார்த்தையை எடுத்தாண்டிருப்பதைச் சொல்லலாம். அவ்விடத்தில் அச்

சொல்லை அமைக்காவிட்டால் சுவை குன்றிவிடும். அது வேறு பாஷைச் சொல்லேயாயினும் அந்த இடத்தில் தமிழுடன் கலந்து அழகு பெறுகின்றது. இவ்வாறே வட மொழிச் சொற்களையும் தக்க இடங்களில் எடுத்தாண்டு தம்முடைய செய்யுட்களை இவர் அலங்கரித்திருப்பதைப் பல விடங்களிலும் காணலாம். ''பால லோசன பானு விலோசன பரமலோசன பக்த சகாயமா, காலகால த்ரிசூல கபால வேகம்பசாம்ப கடம்பவனேசனே'' என்பதில் மிகவும் அழகாக வடமொழிச் சொற்களை அமைத்திருக்கின்றார். இவ்வாறு ஒரு முறையைக் கைக்கொண்டு தாமே பிரயோகித் தலை உடம்படு புணர்த்தல் என்பர். அதன் பொருள் உடம் பட்டு உணர்த்தல் என்பது. அதாவது ஒரு விதிக்கு உடம் பட்டு அதனைத் தம்முடைய நூல்களில் எடுத்தாளல் என்பதாம்.

''குமரகுருபரர் தாம் பிறந்த நாட்டு வழக்கச் சொல்லை ஓர் இடத்தில் அமைத்திருக்கின்றார். பாண்டி நாட்டில் ஒருவன் பிறர் நிலத்தையோ ஊரையோ ஸ்வாதீனம் செய்து கொள்ளும் செயலைத் தோரணம் வைத்தலெனக் குறிப்பார் கள். இதனைக் காசிக்கலம்பகத்தில், ''ஆர்க்கும் படைவே ளரசிருப்பென் றஞ்சா தடிக ளருட்காசி, யூர்க்கும் புதுத் தோரணம் வைத்தால்'' என்ற பகுதியில் அமைத்திருப்பதைக் காணலாம். ''வைணவர்கள் பெரும்பாலும் வழங்கிவரும் 'ததியர்' (அடியார்கள்) என்னும் சொல்லைப் பண்டாரமும் மணிக் கோவையில், ''தவமார், ததியருளத் தானே நின் சந்நிதிப்பட் டேற்குக் கதியருளத் தானே கடன்'' என்ற விடத்து எடுத்தாண்டிருக்கிறார்.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பாடிய நூல்கள்

## சிறப்புப்பாயிரம்—I

"பின்வரும் சிறப்புப் பாயிரச் செய்யுள், சென்ற நூற்றாண்டில் நீதிநெறி விளக்கத்தைப் பாளையங் கோட்டையிலிருந்த ஒரு பாதிரியார் பதிப்பித்த காலத்தில், அவர் விருப்பத்தின்படி அவருக்குத் தமிழ்ப் பாடஞ் சொல்லி வந்த தேவர்பிரான் கவிராயரென்பவரால் இயற்றப்பெற்று அப் பதிப்பில் சேர்க்கப்பட்டதென்று குமரகுருபரசுவாமிகள் மரபிற் பிறந்த ஒருவரால் அறிந்தேன்." இது டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் தமது குமரகுருபரர் நூற்பதிப்பின் முகப்பில் எழுதியுள்ள வரிகள் இதைத் தொடர்ந்து அவர் மேற்படி சிறப்புப் பாயிரத்தையும் கீழே தருகிறார்.

திருமக ளகலாப் பரமவை குந்த
நன்னகர் உதித்த செந்நெறிக் குரிசில்
ஐந்தெனும் பருவம் வந்துறு மளவும்
மழக்குண மொருவி மிழற்றிடாச் செம்மல்
செந்திலம் பதிவாழ் கந்தன தருளால்
ஓதா துணர்ந்த போதனாய் முன்னர்க்
கலிவெண் பாவெனும் ஒலிபெறும் அலங்கலக்
குகன்திரு முடிதனக் குகந்திடச் சூட்டிப்

பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி
மாலையீ றாகச் சால்பமை பிரபந்தம்
முந்நான் கியற்றித் தன்னாஞ் சமய
நிலையையுங் காட்டி உலைவிலா தியாரும்
தீதெலாம் ஒருவி நீதியே புரிய
நீதிநெறி விளக்கமென் றேதமில் பனுவலும்
இயற்றினன், இல்லறந் தியக்குறு நிலையென
இளமையில் துறந்து வளமைசேர் தருமை
மாசிலா மணியெனுந் தேசுறு குரவன்
பதமலர் பழிச்சும்அற் புதகுண குமர
குருபரன் எனும்பெயர் மருவிய முனியே.

வைகுந்தம் என்பது ஸ்ரீவைகுண்டம்; பிள்ளைக் கவி, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்; வெள்ளைக் கிழத்தி மாலை—சகலகலாவல்லிமாலை; முந்நான்கு இவர் பாடிய நூல்கள் 12 என்பது இவர் இயற்றிய 12 பிரபந்தங்கள்; கால முறைப்படி கந்தர் கலிவெண்பா, கயிலைக்கலம்பகம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மதுரைக்கலம்பகம், நீதி நெறிவிளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, பண்டார மும்மணிக்கோவை, சகலகலாவல்லிமாலை, காசிக்கலம்பகம் என்பன. இவற்றுள் கயிலைக் கலம்பகம் கிடைக்கவில்லை. சில செய்யுட்களே கிடைக்கின்றன என்பது ஐயரவர்கள் குறிப்பு. அன்றி அவர்கள் நூல்பட்டியலில் காசித்துண்டி விநாயகர் பதிகம் என்ற ஒரு நூல் பெயரையும் சேர்த்து 13 நூல்கள் என்று பட்டியலிட்டிருக்கிறார்கள். கடைசியில் சொன்னது ஐயம். அது கொள்வதற்கு இல்லை. மற்று கயிலைக் கலம்பகம் என்பது சுவாமிகள் பிறந்த பகுதியாகிய கயிலாசபுரத்துப் பெரும் கோயிலில் எழுந்தருளியிருக்கும் கயிலாசநாதர் மீது பாடப்பெற்றது. கழகத்தார் தங்கள் பதிப்பில் இதன் பாடல்கள் எட்டு கிடைத்திருக்கின்றன என்று பதிப்பித்

திருக்கிறார்கள். இந்த எட்டில் வண்டு கடற்கரைப் புலம்பல். அம்மானை ஆகிய கலம்பக உறுப்புக்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களைப் பார்க்கும்போது, இவை குமரகுருபரர் வாக்காய் இருக்குமென்று தோன்றவில்லை. துண்டி விநாயகர் பதிகமும் கிடைக்கவில்லை; இப்படியொரு பதிகம் பாடினார் என்பது சந்தேகமே.

கழகத்தார் 'திருமகள் அகலா' என்ற சிறப்புப் பாயிரத்தைச் சேர்த்து அச்சிட்டபோது தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பில் இங்கே,

''முந்நான்கறியு மொழிதரு கயிலைக்
கலம்பகந் துண்டிக் களிற்றுப் பதிகம்
அவ்விரண்டியற்றிச் சைவநற் சமய''

என்னும் பகுதியும் சேர்த்து அச்சிட்டிருக்கிறார்கள். இது முதல் நீதி நெறி விளக்கப் பதிப்பில் இல்லை. அன்றியும் முந்நான்கு என்ற சொல்லைச் சொல்லியது, கயிலைக் கலம்பகம் சேர்த்துத்தான் முந்நான்கே தவிர, கயிலைக் கலம்பகம் இல்லாமல் முந்நான்கு இல்லை.

சுவாமிகள் 12 பிரபந்தங்கள் பாடினார் என்பது வரலாறு. இந்தப் பன்னிரண்டில் கயிலைக் கலம்பகம் கிடைக்கவில்லை என்று குறிப்பிட்டு ஏனைய 11 பிரபந்தங்களையும் அழகான குறிப்புரையோடு ஐயரவர்கள் செம்மையாகப் பதிப்பித்திருக் கிறார்கள். அவற்றைப் பற்றிய தனி விரிவான ஆய்வுரை பின்னே உள்ளது. கயிலைக் கலம்பகம் பற்றிய ஒரு குறிப்பும் உரிய இடத்தில் உள்ளது.

இனி இந்தப் பன்னிரண்டு நூல்கள் போக வேறு நான்கு நூல்கள் அவர் பாடியதாக வழங்குவது உண்டு. பலர் இவை சுவாமிகள் பாடியனவே என்று அபிமானம் கொண்டிருக் கிறார்கள். ஆதலால் இந்த நான்கு நூல்கள் பற்றியும் தனியே குறிப்புத் தரப்பட்டுள்ளது.

## சிறப்புப் பாயிரம்

பின்னே வரும் ஆசிரியப்பா மகாதேவச் செட்டியார் உரைப் பதிப்பின் முகப்பில் காணப்படும் சிறப்புப்பாயிரம், இது பின்னும் பிற்காலத்துப் பாடல் போலும். இதிலும் சிறப் பாக எப்பொருளும் சொல்லப்படாவிடினும், வரலாற்றுக்கு உதவக் கூடுமென்ற நினைப்பினால் இதையும் இங்குக் குறிப்பிட்டிருக்கிறோம். இது அத்துணைச் சிறப்புடைய செய்யுள்நடையன்று. சுவாமிகள் பாடிய பாடல் பிரபந்தம் கலிவெண்பா முதல் பதின்மூன்று என்று இது சொல்லுகிறது. பதின்மூன்றுக்கு மேலாக நீதிநெறி விளக்கத்தைக் குறிப்பிடு கிறது. ஆகவே இதன்படி 14. இந்தப் பதினான்கு என்பதற்குத் தெளிவில்லை.

''சீர்மலி நெடுங்கடற் செகமெலாம் பழிச்சும்
ஓர்தனி நகரி னொளிர்வைகுந் தையாந்
தாம்பிர வன்னிநீள் தகைப்புனல் வளமுடைத்
தேம்பொழி னகர்தனிற் சின்மய வடிவுகொண்டு
அலைக்கடன் முகட்டிரு ளறவரியெழுந்தெனக்

கலைக்கடன் முகட்டினிற் சாய்ந்திட மடமொரு
ஞானசூ ரியனா நலம்பெறத் தோன்றிப்
பேர்நிறீஇ நிணம்பயில் பெருந்தகை வைவேல்
நரபதி திருமலை நாயக் கன்புகழ்ப்
பெருமையு முதல்வன் பேரரு ளுங்கொடு

நூற்குவை நுதலிய நுண்பொருள் தருமனைத்து
ஆற்றலு மோதா தறிந்துமால் பொதியத்
தடவரை மாமுனி தருந்தமி ழேசிறப்பு
உடையதா மாதலின் உவந்துசெந் தமிழிற்
கலிவெண் பாமுதற் கருதிய பன்மூன்று

ஒலிபெறு பிரபந் தமுமுரைத் ததன் பின்னர்
வேதமா கமமுயர் மிருதிநூ லனையபா
லோதவெண் கடலிடை யுணர்விமன்மந் தரமா
மூழியான் ஞெலிந்தக மூயமன் பதையுய
வேழநற் சொற்சுவை விளாவிய வெழில்நயச்

சிறுவரும் வேட்புறச் செய்குவான் நீதி
நெறிவிளக் கப்பெயர் நெடுமமிழ் தளித்தனன்;
ஐந்தெனு மளவும் மழக்குன மகன்றிடா
மைந்தனற் செழுங்கெள மாரநீங் கியமுன்
சொல்லரும் வாலியத் துகளில்சந் நியாசியாய்

வல்முநி மாசிலா மணிபால் வளர்ந்தோன்;
தயங்கிய மாண்புடைத் தம்பிரா னெனும்பெயர்
வயங்கிடத் தரும மடமெலாம் புரந்தோன்;
காசினி துதித்திடுங் கங்கைமா நதியான
காசியின் மடத்தினற் காந்தனா வுரவோன்;

குவளைமா மலருரங் குலவிய குலத்தினன்;
சிவசம யத்தினன், செழும்பொருட் கவிஞர்தம்
தமரென ஞான்றுந் தயங்கிய
குமர குருபரக் கோதில் செம் முனியே.''

## நூல்களின் அட்டவணை

குமரகுருபர சுவாமிகள் பாடிய நூல்கள் 12 என்பது எல்லாரும் ஒரு முகமாகச் சொல்லும், செய்தி. இதுவே முதல் சிறப்புப்பாயிரத்தில் சொல்லப்பட்டது. அவை பின் வரும் பன்னிரண்டாவன;

1. திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா
2. கயிலைக் கலம்பகம்
3. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

4. மதுரைக் கலம்பகம்
5. நீதிநெறி விளக்கம்
6. திருவாரூர் நான்மணிமாலை
7. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்
8. சிதம்பரமும்மணிக் கோவை
9. சிதம்பரச் செய்யுட்கோவை
10. பண்டார மும்மணிக்கோவை
11. காசிக் கலம்பகம்
12. சகலகலாவல்லி மாலை.

இவற்றுள் 2. கயிலைக்கலம்பகம் கிடைக்கவில்லை இதுபற்றிய குறிப்பும் உரிய இடத்தில் பார்க்க. மற்றவை யாவும் முழுமையாய்க் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. பின்னும் நான்கு நூல்கள் அவர் செய்தனவாகச் சிலர் சொல்வதுண்டு.

1. காசித் துண்டிவிநாயகர் பதிகம்
2. மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை
3. மீனாட்சியம்மை குறம்
4. தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை.

இந்த நான்கினுள் முதல் பதிகம் இன்று இல்லை. சுவாமிகள் பாடினார் என்று அனேகர் சொல்லவில்லை. மற்ற மூன்றும் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. ஆனால் இவை சுவாமி பாடியன அல்ல என்பதே பெரும்பாலோர் கருத்து.

இந்நூல்களைப் பற்றிய விரிவான குறிப்புக்களைக் கீழே காணலாம்.

**1. திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா**

இது சுவாமிகள் ஐந்து வயதில் முருகனுடைய அருளால் ஊமைத்தன்மை நீங்கிப் பேசும் தன்மை பெற்றவுடனே

பாடிய ஒரு நீண்ட கலிவெண்பாப் பாட்டு. ஊமைநிலை நீங்கியவுடனே தெய்வக்காட்சியைக் கண்டு ஐந்து வயதுப் பிள்ளைக்குப் புறவாயும் திறந்து, அகவாயும் திறந்து அப் பெருமானுடைய புகழைச் சொல்லால் பல விதங்களில் விரிக்கிறார். கலிவெண்பா என்று நீண்ட பாடல்களாகப் பாடும் மரபு தமிழ் மொழியில் சிலப்பதிகாரம் தொடங்கியே காணப்படுகிறது. இப்பாடல் 122 கண்ணிகளை உடையது. இதனுள் மூன்று தனித்தன்மைகளைத் தொடர்ந்து காண்கிறோம்.

முதலாவது இறைவன் பக்குவான்மாவிடத்து இருவினை ஒப்பு நேர்ந்தபோது குருவடிவாகக் காட்சிருகிறான் என்பது.

முதல் 11 கண்ணிகள் பரம்பொருளின் சொருப லக்ஷணம் இங்கு, குமர குருபரர் முருகனையே சிவபரம்பொருளாய்ப் பேசுகிறார். கண்ணிகள் 12லிருந்து 17 வரையில் உயிருக்கு மல பரிபாகம் நிகழ வேண்டுமென்ற பெருநோக்கோடு ஆன்மாவைப் பக்குவப் படுத்தும் தொடக்கநிலை. பின்னர் 23 வரையில் மலபரிபாகம் வந்து அஞ்ஞானத்தைப் போக்கி இருவினையும் ஒத்துவரச் செய்து சத்திநிபாதத்துக்குத் தகுதி அளிக்கிறார். 24 முதல் மூன்று மலத்தாருக்கும் மூன்று வெவ்வேறு நிலையில் உள்நின்று உணர்த்தியும், மூர்த்தி வடிவாக வந்து காட்சி கொடுத்தும், குருபரனாகி மானிட வடிவோடு வந்தும் அருள் செய்கின்ற தன்மைகளைக் கூறு கின்றனர். பின்னர் இதைத் தொடர்ந்த நிலையே முருகனு டைய திருவுருவ வருணனையும் திருமுகங்களின் செயல்களும் திருக்கரங்களின் செயல்களும். 65 ஆம் கண்ணி வரையில் இவ்வாறு இவர் கூறுவதற்கு வழிகாட்டியாக அமைந்தது திருமுருகாற்றுப்படையுள் திருச்சீரலைவாய்ப் பகுதியில் முருகனுடைய மூவிருமுகனும் முறை நவின்று ஒழுகுவதையும் பன்னிருகையும் பாற்பட இயற்றியதையும் கூறிய பகுதிகள்.

தொடர்ந்து வருவது முருகனுடைய தசாங்கம். தசாங்கம் கூறும் இலக்கிய மரபு திருவாசகத்தோடு தொடங்குகிறது. இவை அவனால் அளிக்கப்பட்ட பேரன்பு அடைந்தோர் அகத்துள் புகலாகும் இன்பப் பொருப்பு (ஆனந்த மலை); இன்ப வெள்ளப் பெருக்கு ஆறு; இன்பம் நல்கும் திருநாடு; போக்கு வரவு அல்லாது உயர்ந்த பரானந்த முத்தியாகிய அணிநகர்; ஐந்தெழுத்தைக் கூறி நடாத்தும் குரகதம்; பஞ்சமலம் காய்ந்த சிவஞானக் கடாக்களிறு; போதம் புது மலராக்கட்டும் அருந்தொடை; ஐந்தொழிலும் ஓவாது அளித்து உயர்த்த வான்கொடி, நவநாத மணிமுரசு; புவனம் ஆக்கி அசைத்து அருளும் ஆணை—ஆகத் தசாங்கங்கள்.

அரசனுக்கு ஆட்சிபுரியும் அதிகாரத்தை ஒட்டிப் பத்து அரச உறுப்புக்கள் சொல்லப்படுவதுண்டு, அவை—மலை, நதி, நாடு, ஊர், பரி, களிறு, தார், கொடி, முரசம், ஆணை என்று வழங்குவது மரபு. இதில் சில வேறுபாடுகளும் இருத்தல் உண்டு. சிவஞானத்திலேயே திளைத்திருந்த மாணிக்கவாசக சுவாமிகள் தம்முடைய திருவாசகத்துள் திருத்தசாங்கம் என்றவொரு பதிகம் பாடியிருத்தலோடு கூட கீர்த்தித்திருவகவலில் மீண்டும் தசாங்கம் பாடியிருக்கிறார் இரண்டு இடத்துத் தசாங்கங்களுக்கும் வேறுபாடு உண்டு. பின்னர் தமிழ் மொழியில் தோன்றிய உலா, தூதுப் பிரபந்தங்களில் தவறாமல் தலைவனுடைய தசாங்கம் சொல்வது புலவர்கள் மரபாயிற்று. அரசன் போன்ற தலைவனுக்குத் தசாங்கம் சொல்லுதலைப் புலவர்கள் தெய்வத்தைப் பாடும்போது தெய்வமே அரசுக்கெல்லாம் பேரரசு ஆதலினால் தெய்வத்துக்கு ஏற்றிக்கொண்டார்கள். ஆனால் மாணிக்க வாசகர் பாடிய தெய்வத்தசாங்கமே முதலில் தோன்றியிருக்கிறது. தெய்வத்துக்குத் தசாங்கம் பாடுதலைப் பல இடங்களில் காணலாம். அந்தத் தன்மையில் எல்லா மரபுகளையும் சிறப்பாகப் பாதுகாக்கின்ற நினைவு

கொண்ட குமரகுருபரரும் தாம் பாடிய முதல் நூலாகிய கந்தர் கலி வெண்பாவில் திருவருள் உணர்த்திய வழித் தசாங்கம் பாடுகிறார். அதை மேலே கண்டோம்.

பின்னர் இரண்டாவதாக, முருகனுடைய திருஅவதாரம். திருஅவதாரமானது கந்தபுராணத்துள் சொல்லப்பட்ட அவதார விவரங்களை அப்படியே சுருக்கிச் சில சொற்களால் முழுமையாய்த் தருவது. பிரமனைக் குட்டி அவனுக்கு மீண்டும் பிரமம் மொழிந்த செய்தி, தாரகனும் தடங்கிரியும் தூளாக வீரவடிவேல் விடுத்தது, செந்தூரில் வீற்றிருந்தது. சூரனிடம் வீரபாகுவைத் தூதாக அனுப்பியது, வேலால் சூர் உடலம் கீண்டது, மயிலை வாகனமாயும், சேவலைப் பதாகையாயும் கொண்டது ஆகிய புராணச் செய்திகள் விரிவாகச் சொல்லப்படுகின்றன. அடுத்துத் தெய்வயானை அம்மையை மணம் செய்தல், பின் தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த வள்ளிக் கொடியை மணம் செய்தல்.

மூன்றாவது இவற்றின்பின் தனக்கு முன் எந்த நேரமும் தன்னைக் காத்தருள வேண்டுமென்ற வேண்டுகோள்.

இவ்வாறு இந்தப் பாடல் தத்துவப்பொருள், முருகன் வரலாறு ஆகிய புராணப் பொருள், அவன் அருள் வேட்டல் ஆகிய தோத்திரம் ஆகியவை குறைவிலா நிறைவாக ஆசிரியர் பாடியிருப்பது மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது. முருகன் அருள்பெற்ற குழந்தை ஆதலால் அக்குழந்தை பெரிய பொருளையும் குழந்தைக்குள்ள பொருளையும் மேல் நிலையில் நின்றேபாடுவது நிகழக்கூடியதே. இந்தப் பிரபந்தம் தமிழ்நாட்டில் முருகபக்தர் அனைவரும் மனப்பாடம் செய்து வைத்திருப்பது ஆதலால் இதைக் குறித்துச் சிறப்பாக எடுத்துச் சொல்வது மிகை. எனினும் இதிலுள்ள சில சிறப்புக்களை இங்கே கூறுவோம்,

சுவாமிகள் ஊமையாக இருந்து ஐந்து வயதில் ஊமை நீங்கிப் பேசும் ஆற்றல் பெற்றார் என்பது சம்பிரதாயமாக வழங்கும் வரலாறு. பேசும் ஆற்றல் மட்டுமல்ல, மேலான தமிழ்ப்புலமையும் சிவஞானமும் முழுமையாக அந்த நிலையில் கைவந்தன. முருகனை நேரில் கண்டாரா என்பது சொல்லவில்லை. ஆயினும் அகக்கண்ணால் கண்டார் என்பது உறுதி. முருகன் ஊமைக் குழந்தையை எழுப்பிய போது காணவில்லையா? அக்காட்சியில் எல்லாமே காணுகிறார். இவ்வாறு கண்ட அனுபவம் மேலே மூன்றாகப் பிரித்துச் சொன்னோம். கடைசியாக இவர் குழந்தைப் பருவம் ஆதலினாலே தமக்கென்று ஒரு தனி வேண்டுகோளை வைத்துக் கொண்டு அதைப் பெருமான் இடத்துச் சொல்கிறார். இந்த வேண்டுகோள் சொல்வதில் ஒரு பொருள் அமைந்துள்ளது. அதைப் பிறகு சொல்வோம்.

முதலாவது முருகனைக் கண்ட மாத்திரத்தில் சைவ சித்தாந்த ஞானம் அவருக்கு அருளப் பெறுகிறது. இது சாஸ்திர ஞானம் மட்டுமே. இந்தப் பகுதி 36 கண்ணிகள் வரை இங்குச் சொல்லப்பட்ட பொருள் முருகன் ஆகிய சிவபெருமான் வேறு எந்த மேலான அறிவினாலும் காண்டற்கு இயலாத மெய்யறிவு. அது நித்தியானந்த போதம். பரஞ்சுடர் பரமசிவம். தான் செய்யும் ஐந்தொழிலுக்கும் அப்பால் நிற்பது சிவப்பிரகாசத்தில் சொல்லியவிதமாக அது செலவரியது. ஆனால் அதுவே செல்கதி. எங்கும் நீக்கமற நிறைந்தது. அருவும் உருவும் அருவுருவமாய் உள்ளது. உயிர்களிடத்து உள்ள கருணையால் அவை மலபரிபாகம் பெறவேண்டி உயிர்களைப் பாசத்தோடு கூட்டுகிறது. எத்தனையோ பிறவிகள் பிறந்தும் செத்தும் ஊசலாடுவது ஒரு நிலையில் நல்வினையால் சிறிது ஒளி பெறுகிறது. அந்த நிலையில் சமய ஆராய்ச்சி விரதம். சரியையிலும், கிரியையிலும், யோகத்திலும் இந்த ஆன்மா

செலுத்தப்பெறுகிறது. இருவினை ஒப்பு நிகழும் காலம் நெருங்குகிறது. சத்திநிபாதத்திற்குரிய பக்குவம் வருகிறது. அப்போது பெருமான் குருபரன் என்று ஓர் மானிட வடிவம் கொண்டு வருகிறான். நயன தீக்கையால் பல நிலைகளை உயிருக்கு ஊட்டுகிறான். அவன் மூவகை உயிர்களுக்கும் மூன்று வெவ்வேறு நிலைகளில் அருள் புரிகிறான். அப்போது அவனுடைய திருவுருவம் அருள் உருவமாகிறது. அவனுடைய திருவடியும் முடியும் பொருள் பொதிந்தனவாக உயிருக்கு விளங்குகின்றன. இத்தனையும் குமரகுருபரர் ஐந்து வயதுக் குழந்தையாய்க் கண்ட அருங்காட்சிநிலை,

இந்தப் பிரபந்தம் குமரகுருபரரால் குழந்தையாக இருந்து பாடப் பெற்றது. ஆதலால் என்னதான் தெய்வ அனுக்கிரகம் பெற்றிருந்தாலும் இங்கு நாம் காண்பது குழந்தையின் வேண்டுகோள். உலகத் துன்பங்கள் தம்மை வந்து பாதிக்கக்கூடாது. பாதிக்குமிடத்தில் முருகன் தனது திருவுருவக் காட்சி தந்து இடுக்கணைப் போக்கி ஆனந்தமாக உள்ளத்தில் குடிபுகுந்து தமிழ்ப்புலமை நிரம்பத் தந்து தன்னை மறந்த அடியார் கூட்டத்தைக் கூட்டித் திருவுருவத்தைக் காட்டி அருளவேண்டும் என்று பாடு கிறார். இத்தனைத் தொடர்பாக அமைந்துள்ள முறையில் இந்தக் கந்தர் கலிவெண்பா என்ற 122 கண்ணிகள் கொண்ட நூல் முந்நூறு ஆண்டுக் காலமாக உலகத்தில் எந்தப் பாகத்திலும் வாழும் தமிழ்மக்களுக்கு இன்றுவரை ஒரு பாராயண நூலாக விளங்கி வருகிறது. கல்வியில் விருப்பம் உள்ளவர் இதை நாள்தோறும் பாராயணம் செய்யவேண்டு மென்பது ஒரு நியமமாக விதிக்கப்பட்டு வருகிறது.

இவ்விதமாகச் சைவமக்களுக்கு வழிகாட்டி இந்த இடத் தில் முருகனுடைய ஆத்மார்த்த நெறியில் இவ்வளவு கவனம் செலுத்தியிருக்கின்ற இந்தப் பாடலின் இறுதிவரிகளைஅனை வரும் நினைவு கூர்வது நல்லது. (வேண்டுகோளின் பகுதி)

பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடமும் வந்தெம்மை யெதிர்ந்தாலும்—அவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்ச மகற்றும் அயில்வேலும்—கச்சைத்
திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையும் ஈராறு
அருள் விழியும் மாமுகங்க ளாறும் - விரிகிரணம்
சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற—வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமுந் தந்து புகுந்து
உல்லாசமாக உளத்திருந்து—பலவிதமாம்
ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல் காப் பியத்தொகையும்—ஓசை
எழுத்து முத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுடன்
இம்மை பிறப்பில் இருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மை விடுத்து
ஆயும் பழைய அடியா ருடன் கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன்னின் றருள்.

கந்தர் கலிவெண்பா எழுதிய ஏடுகளின் இறுதியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது.

வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே—செந்தில் நகர்ச்
சேவகா வென்று திருநீ றணிவார்க்கு
மேவவா ராதே வினை.

தமிழ் மொழியில் இந்த நூல் ஒரு சிறந்த நீண்ட துதி நூல். இதற்கு ஓரளவு இணையான வியாபகமுடைய மற்றொரு தோத்திர நூல் இந்த நூலுக்கு 50 ஆண்டுகளுக்குப் பிறகு திருப்போரூர் சிதம்பர சுவாமிகளால் செய்யப்பட்ட 91 கண்ணிகளை உடைய மீனாட்சியம்மை கலிவெண்பா என்ற நூலாகும். கந்தர் கலிவெண்பாவானது சமயதத்துவம், முருகனுடைய அவதாரச் சிறப்பு, முருகனுடைய திருவுருவச் சிறப்பு, வேண்டுகோள் இத்தனையும் ஒருங்கே திரட்டி அமைக்கப்பட்ட சிறப்புக்கள் பலவும் ஒருங்கமைந்த துதிநூல். ஆனால் மீனாட்சியம்மை கலிவெண்பா என்பது பாமர ரஞ்சகமாக அமைக்கப்பட்ட மீனாட்சியம்மை துதியாகும்.

**2. கயிலைக் கலம்பகம் :-**

இது குமரகுருபரர் பிறந்த கயிலாசபுரத்தில் எழுந்தருளி யுள்ள கயிலாசநாதர் மீது குமரகுருபரர் மிக்க இளமையிலேயே பாடிய நூல்நூல். கிடைக்கவில்லை. ஆனால் எட்டுப்பாடல்கள் மட்டும் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றைப் பார்க்கும்போது இதுகுமரகுருபரர் வாக்காகத் தோன்ற வில்லை என்றும் முன்னமே சொல்லப்பட்டது.

சீவைகுண்டத்தின் பகுதியாகிய கயிலாசபுரத்தில் ஒரு பெரிய கற்சிவாலயம் உள்ளது. இங்குச் சிவபெருமான் கயிலாயநாதர். அம்பிகை சிவகாமசுந்தரி. இந்தக் கயிலாச புரம், நம்மாழ்வார் பாடலால் பிரசித்தி பெற்ற நவதிருப்பதி கள் என்ற திருமால்பதிகள் ஒன்பதை ஒப்ப அவ்வளவு பிரசித்தி இல்லாவிட்டாலும் குறைந்த பிரசித்தி உடைய ஒன்பது கயிலாசபுரங்களில் ஒன்று என்று சொல்லப்படுகிறது.

**3. மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் :**

பிள்ளைத் தமிழ் என்பது தெய்வத்தைக் குழந்தையாகப் பாவித்து அதன் குணநலன்களை வளர்ச்சிக்கேற்பப் பத்துப்

பருவங்களாக இயல்பாகவும் கற்பனையாகவும் அமைத்துப் பாடி வருகின்ற ஒரு பிற்காலத்துப் பிரபந்தமாகும். இங்குப் பிள்ளை என்பது ஆண் பெண் என்ற வேற்றுமையின்றிக் குழந்தை என்று மட்டுமே குறிப்பிடும். பிள்ளைத்தமிழ் என்பது இலக்கண நூல்களில் பிள்ளைக்கவி, பிள்ளைப் பாட்டு என்றெல்லாம் சொல்லப்பெறும். ஆயினும் தமிழ் என்று பிரபந்தப் பெயரில் அமைத்த சிறப்புடையது இந்தப் பிரபந்தம் ஒன்றே. பெரியாழ்வார் தமது திருமொழியில் தாம் யசோதையாக நின்று குழந்தைக் கண்ணனைப் பல கோணங்களில் அநுபவித்து ஒவ்வொன்றாக அழகிய பத்துப் பாடல்கள் மூலம் பாடிக் கொண்டாடியிருக்கிறார். அப் பாடல்களே பிள்ளைத தமிழ் என்ற பிரபந்த வகைக்குத் தோற்றுவாய் என்று கருதுவதில் தவறில்லை. ஆனால் அன்று பிள்ளைத் தமிழ் என்று பெயரில்லை. அவைகளைப் பிள்ளைத்தமிழ் என்று அன்று கருதப்பெற்றதும் இல்லை. இதை முதன் முதலாக நன்கு ஆராய்ந்து அறிந்து, மூன்று சோழமன்னரது அவையில் புலவராக விளங்கிய ஒட்டக் கூத்தர் அம்மூவரில் இரண்டாவது மன்னனாக விளங்கிய இரண்டாம் குலோத்துங்கன் மீது பிள்ளைத்தமிழ் என்று பெயர் கொடுத்து ஒரு புதிய பிரபந்தமாகப் பாடினார். பெரியாழ்வார் பாசுரங்களில் பத்துப் பருவங்களாக அமைத்தார். எல்லாவற்றையும் எடுக்கவில்லை. அவை இன்று குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ் என்ற பெயரில் சிதிலமாக உள்ள ஒரு நூலாக அச்சிடப்பட்டுள்ளன. இதுவே தமிழ் மொழியில் முதல்முதல் தோன்றிய தனிப் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தமாகும். இதன் பின்னர் இந்த நெறியில் பல பிரபந்தங்கள் தோன்றி இருந்தன. திருச்செந்தூர் முருகன் மீது பகழிக் கூத்தர் பாடியது. (13ஆம் நூற்றாண்டு). மிக்க சிறப்புடைய பிள்ளைத் தமிழாகும். முருகன் மீதும் அம்பிகை மீதும் பாடப்பெற்ற

பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தங்களே அதிகம். இந்த நெறியில் குமரகுருபரர் மிகச்சிறந்த பிள்ளைத்தமிழ் நூல் என்று எல்லோராலும் போற்றப்படுகிற மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழையும் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழையும் பாடியிருக்கிறார். திருமால் மீது பாடிய பிள்ளைத்தமிழ் நூல்கள் மிகச் சில. சிவபிரான் பரம்பொருளே ஆதலால் அவரைப் பிள்ளையாகப் பாவித்துப் பிள்ளைத்தமிழ் பாடுவது மரபன்று.

இவற்றுள் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழானது மதுரையில் இவர் மீனாட்சியம்மையைத் தரிசித்தபோது பாடிய பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தமாகும். இவர் பல்காப்பியத் தொகையும், தமிழ்ப் புலமையும் பாலிக்க வேண்டுமென்று திருச்செந்தூர் முருகனை வேண்டிக்கொண்ட நிலையில் எல்லாப் பிரபந்தங்களும் பாடும் ஆற்றல் இவருக்கு எளிதாகக் கைவந்தது. ஆகவே பிள்ளைத்தமிழ் பாடியது ஒரு பெரிதன்று. இவர் பெரும் காப்பியமே பாடும் ஆற்றல் பெற்ற பெரும்புலவர். பெரும் காப்பியம் பாடுவதற்கான சமுதாயச் சூழ்நிலையும், அரசியல் சூழ்நிலையும், அன்று அமையவில்லை; ஆதலால் இவர் காப்பியம் பாடவில்லை. மேலும் திருச்செந்தூர் முருகன் அருள் தொடங்கித் தருமபுரத்துக் குருமூர்த்திகளின் ஞான உபதேசம் வழியாகக் காசியில் சகலகலாவல்லியின் அருள் நோக்கு பெற்ற வரையில், இவருடைய வாழ்க்கை அருள் வழியிலே நின்றதே அன்றி இவர் நோக்கம் ஏனைய இயற்புலவர்கள் போல வேறு காப்பியங்கள் செய்யும் நிலைமையில் இல்லை. இருப்பினும் உலகத்தாருக்கு உபகாரம் செய்ய வேண்டுமென்பதற்காக நீதிநெறி விளக்கமும் சிதம்பரச் செய்யுட் கோவையும் பாடிக் கொடுத்தார், என்பதை நினைவுகூர வேண்டும். இந்தக் கண்ணோட்டத்தோடு மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழை நாம் நோக்க வேண்டும்.

முன்னே கூறியவாறு இந்த நூல் பழைய மரபை யொட்டிப் பத்துப் பருவங்களாக உள்ளது. இவற்றுள் முதல் பருவமான காப்புப் பருவம் 11 பாடல்களும் ஒரு தனி விநாயகர் காப்புச் செய்யுளும் கொண்டது.

சுவாமிகளுடைய பாடல்கள் அழகு ஒழுகும் பாடல்கள். இனிய சுவை ஊற்றெடுத்துப் பில்கும் பாடல்கள் பாடிய நாவில் தேன் ஊற்றெடுக்கச் செய்யும் பாடல்கள். தமிழ் என்றால் இனிமை என்று பொருள் சொல்லப்படும். அதனோடு அழகும் சேர்ந்து இவர் தொடர்களில் அமைந்து இருக்கக் காணலாம். சொல்லோவியங்களாகக் கண்முன்னே நிற்கும் பாடல்கள். சொற்கள் ஒன்றையொன்று தொடர்ந்து தழுவி வரும். அலங்காரமானது தமிழுக்கே அலங்காரம் உடைய பாடல் வடிவமாகும். இவருடைய வாக்கு வெறும் இயற்புலவருடைய வாக்கன்று. காப்புப் பருவத்தில் முதல் பாட்டு பாட்டியல் மரபுப்படி திருமால் வணக்கம். பெரும் புலவர்கள் அனைவருமே முழுமையாக மரபைக் கடை பிடிப்பார்கள். பின்னால் வந்த புலவர்கள் தாங்கள் பாடும் பொருளின் தன்மைக்கேற்றவாறு மரபைத் தழுவி மரபை மாற்றிக் கொள்வார்கள். அவ்வவ்விடத்தில் பொருத்தமா யிருக்கத்தக்க விதத்தில் சுவாமிகள் முதன் முதலாக அம்பிகை மீது பாடுகிறார். இவருக்கு முன் அம்பிகை மீது பிள்ளைத் தமிழ் யாரும் பாடவில்லை; அதாவது பெண்பாற் பிள்ளைத் தமிழ் இல்லை. தெய்வ அருளே இவருக்கு ஊற்றுக் காலாக இருந்து வழி காட்டுகிறது. இதை இறுதி மூன்று பருவங்களில் குறிப்பிடுவோம். இருப்பினும் புதிதாக இவர் பாடுகின்ற நிலையில் பழமை தழுவிய புதுமரபு இவரால் உருவாக்கப் படுகிறது.

காப்புப் பருவத்தில் ஒவ்வொரு பாடலிலும் இத்தகைய சிறப்புடைய இன்ன தெய்வத்தை நாம் துதிப்போம். இத்தகைய சிறப்புடைய இப்பாட்டுடைத் தலைவன் அல்லது

தலைவியின் மீது பாடுகின்ற இந்த நூலுக்கு அத்தெய்வத்தின் பாதுகாப்பு இருப்பதாக என்று பாடுதல் சம்பிரதாயம். இந்த விநாயகர் வணக்கத்தில் அயிராவனம் என்னும் யானை போல் உலவுகின்ற விநாயகப் பெருமான், மீனாட்சி அம்மை மீது பாடுகின்ற இப்பிள்ளைத் தமிழைக் காக்க என்று சொல்லுகிறது. அம்மையை மலைவல்லி, கற்பூரவல்லி, அபிராம வல்லி, மாணிக்க வல்லி, மரகத வல்லி, அபிடேக வல்லி என்று அடுக்கிச் சொல்லுகிறார். இவ்வாறு எங்கும் அடுக்கிச் சொல்வது இவருடைய பாணி

இவர் சைவர். முருகன் அருள் பெற்றவர். முருகன் தாயை இப்போது பாடுகிறார். அம்பிகை திருமாலின் தங்கையென்பது, சைவம், வைணவம் இரண்டிலும் உள்ள பொதுமரபு இந்த மரபைத் தழுவிக் கொள்ளுகிறார். அது மட்டுமல்ல, முழுமையாக வைணவ சம்பிரதாயம் அனைத்தையும் நன்கு அமைத்துத் தம் பாடலைச் சொல்லுகிறார். திருமழிசை யாழ்வார் வரலாற்றில் அவர் மாணாக்கனாகிய கணிகண்ணனுடைய வரலாறு வருகிறது. தம்மைப் பாட வேண்டும் என்று விரும்பிய பல்லவ மன்னனுக்கு ஆழ்வார் மானிடம் பாட மாட்டார் என்று சொல்லிக் கணிகண்ணன் பின்வரும் பாடலால் தம் குருவாகிய ஆழ்வாரையும் அவர் பின்னால் ஆழ்வார் வழிபடுகின்ற சொன்ன வண்ணம் செய்த பெருமாள் என்ற திருவெஃகாப்பெருமாளையும் (யதோக்த காரி) காஞ்சி நகரை விட்டுப் போகுமாறு செய்தான் என்பது வரலாறு.

**கணிகண்ணன் செல்கின்றான் காமருபூங்கச்சி**
**மணிவண்ணா நீ கிடக்க வேண்டா—துணிவுனுடைய**
**செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்**
**பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.**

இப்பாட்டு, தமிழ் இலக்கிய உலகத்தில் நன்கு அறியப் பட்ட பாட்டு. இதனுள் நாம் கூர்ந்து நோக்கத்தக்க தன்மை

ஒன்று உள்ளது. திருமழிசை யாழ்வார் கொடிய வைணவர். சைவத்தை அளவு கடந்து நிந்திப்பவர். அந்த நினைப்பு இளைஞரான குமரகுருபர சுவாமிகளைப் பாதிக்கவில்லை. ஆழ்வார் தமிழில் இறைவன் புகழைப் பாடுபவர். ஆகவே பச்சைப் பசுங்கொண்டலான திருமால் அவருடைய தமிழுக் காக அவர் பின் போகுமாறு செய்தது என்ற செயல் சுவாமி களின் உள்ளத்தைப் பெரிதும் நெகிழும்படி செய்திருக்கிறது. அந்நெகிழ்ச்சியின் மேல் அவர் சிவன், திருமால் என்ற வேறு பாடு பாராட்டாது இங்குப் பாடுகிறார். பாடலின் கடைசி அடியை மட்டும் இங்குக் காட்டுகிறோம்.

பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்
பணைத்தோள் எருத்தலைப்பப்
பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே.

இந்த ஓர் அடி ஒன்றுமே போதும் சுவாமிகளுடைய பெரும் புலமையையும், அவருடைய திருவுள்ளத்தையும் உணருவதற்கு. திருமால் ஆதிசேடசயனத்தில் பள்ளி கொண் டிருக்கிறார். ஆழ்வார் கணிகண்ணன் பின்னாலே காஞ்சி நகரைவிட்டு வெளிப்போக அவன் பின்னால் ஆழ்வாரும் போகிறார் என்று அறிந்த மாத்திரத்திலே தமிழில் ஈடுபா டுடைய பெருமாளும் இவர்கள் பின்னே ஓடுகிறார். தாம் பள்ளி கொண்டிருந்த பாயலை விட்டுவிட்டு ஓடவில்லை ஆதிசேடன் அவருக்குக் குடையும், சிம்மாசனமும் பாயலும் ஆகின்றவன் அல்லவா? ஆகவே அவனைச் சுருட்டித் தோள் மீது வைத்துக் கொண்டு ஓடுகிறாராம். போய்த் தங்குகிற இடத்தில் ஒரு புதுப்பாயலைத் தேட வேண்டமல்லவா? மறைகளெல்லாம் அவனைக் காண முடியாமல் முறையிடு கின்றன. அத்தகைய திருமால் இப்போது பைந்தமிழ்ப் பின் ஓடுகிறான். இதிலே எவ்வளவு பொருள்தான் அமைந்

துள்ளது! வேதங்களால் அறியமுடியாதவன் தமிழைத் தேடி ஓடுகிறான். இந்தக் கருத்து, சுவாமிகளுடைய இளைய உள்ளத்தில் புகுந்து அது முழுமையும் நிறைந்து நிற்கின்றது. அதனால் பாட்டு இப்படி வருகின்றது.

பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே!

தமிழும், பைந்தமிழ், அவனும் பச்சைப் பசுங் கொண்டல் : இந்த முறையில் ஒவ்வொரு பாடலையும் நாம் எடுத்து இடமின்மை பற்றி முழு விளக்கம் செய்யாமல் சிலசில இடங்களை மட்டும் சுட்டிக்கொண்டு போகிறோம்.

இதன்பின் முறையே சிவபெருமான், சித்தி விநாயகர். முருகக் கடவுள், பிரமன், இந்திரன், திருமகள், கலைமகள், துர்க்கை, சத்தமாதர், முப்பத்துமூவர் இவர்களை அம்பிகை நூலைக் காக்குமாறு வேண்டுகிறார். கலைமகள் துதியின் பின் மதுரைப் பெருமான் அகனைந்திணைப் பொருள் நூல், செய்து கொடுத்த வரலாற்றைச் சொல்கிறார். துர்க்கை துதியில் எந்தை பிட்டுண்டு, கட்டுண்டு நின்று அடிபட்ட திருமேனி குழைய என்று வாதவூர் அடிகளுக்காக மதுரை வைகைக் கரையில் பிட்டுண்டு அடிபட்ட வரலாற்றைச் சொல்லுகிறார்.

இரண்டாவது செங்கீரைப் பருவம். இங்கெல்லாம் சந்தங்கள் நயமாக இவருக்கு வேலை செய்கின்றன. இவற்றை விரித்துக்காட்ட இடமில்லை.

மூன்றாவது தாலப்பருவம். தென்றலைத்

''தென்னந் தமிழின் உடன்பிறந்த சிறுகால்''

என்று நயமாகச் சொல்லுகிறார். தென்றலும் தமிழும் பொதியமலையிற் பிறந்தன என்று சொல்வது இலக்கிய மரபு. அம்பிகையைக் குறிப்பிடும் தோறும் மதுரையையும்

தமிழையும் குழைத்தே பாடுகிறார். ''ஆறுமடுக்கும் தமிழ் மதுரைக்கு அரசே தாலோதாலேலோ, ''மதுரைத் துரை மகள் சங்கம் வளர்ந்திட நின்ற பொலன் கொடி'', ''மதுரைப் பதி தழையும் கொடி'' என்பன சில தொடர்கள்,

பின் சப்பாணிப் பருவம். இங்கும் அதே தன்மை. ''தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி''. தமிழுக்குச் சிறப்பு ஒலி ழகரம் என்று சொல்வார்கள். இவர் அவ்வொலியை இப்பருவத்தின் கடைசி இரு பாடல்களில் அதிகமாக அமைத்திருக்கிறார். சம்பந்தர் திருமுலைப்பால் அருந்திய வரலாற்றை இவர் சம்பந்தர் முருகன். அவதாரம் என்பதை உடன்பட்டுப் பின்வருமாறு பாடுகிறார்.

செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே
திருவரு ளமுதுகு ழைத்துவி டுத்தமு லைப்பாலாற்
கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யிற்சேயைக்
களிறொடும் தளரவ ளர்த்தவ ருட்செவி லித்தாயே.

பின்முத்தப் பருவம். இதில் முதல் பாடல் அதனுடைய பொருள் அமைப்பினால் மிக்க பிரசித்தியுடைய பாடல். இதனுள் அம்பிகை ஆகிய பராசக்தி துவாத சாந்தப் பெரு வெளியில் செல்லுகின்ற பக்குவம் பெற்ற உயிர்களுக்கு அருள் செய்கிறாள் என்பதைச் சிறப்பாகச் சொல்லி அழைப்பது காட்டத்தக்கது.

காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுண் மணியே உயிரால
வாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தளிபழுத்த
மலர்க்கற் பகமே எழுதரச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே முத்தந் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தந் தருகவே.

இது பற்றிய வரலாற்றுச் செய்தி சரித்திரப் பகுதியில் சொல்லப்பட்டது.

பின்னர் ஆறாவது வருகைப் பருவம். இந்தப் பருவத் துக்குரிய பாடல்கள் யாவுமே சிறப்பாகக் கருதப்படும் பாடல் கள். 'நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்' என்பது தமிழ்மறை. அக்கருத்தை யெல்லாம் இவர் மனத்தில் வாங்கிப் பாடுவது நன்கு சுவைக்கத்தக்கது.

சிற்றிடைக் கொல்கிமணி மேகலை யிரங்கத்
திழிக்கோயி லெனவெனெஞ்சக்
கஞ்சமுஞ் செஞ்சொற் றமிழ்க்கூட லுங்கொண்ட
காமர்பூங் கொடிவருகவே.

இனி இப்பருவத்தின் இறுதி இரண்டு பாடல்களை மட்டும்) சொல்லி மேற்செல்வோம், இப்பாடல்களின் தொடர்கள் கற்றோர் நாவில் களி நடம் புரிவன,

தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கைஅகழ்ந்

தெடுக்குந் தொழும்பர் உளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்ச்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்தில்அழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலையத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.




பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைந்த பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக அருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலையத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

அடுத்ததாகிய அம்புலிப்பருவம் சம்பிரதாயப்படி அமைந்தது. இதன்பின் வருகின்ற மூன்று பருவங்கள் அம்மானை, நீராடல், ஊசல் என்பன. இவருக்கு முந்திய பிள்ளைத்தமிழ் நூல்கள் யாவும் ஆண்பாற் பிள்ளைத் தமிழ் களாகி சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பனவாக அமைந் திருக்கும். பாட்டியல் இலக்கணங்கள் அம்மானை, நீராடல், ஊசல் என்று விதித்த போதிலும் கூட அவற்றுக்கு இலக்கியம் முன்பு இல்லை. நம் சுவாமிகளே முதன்முதல் இலக்கியம் அமைக்கிறார் என்று கருத வேண்டியிருக்கிறது. ஊசல் பருவத்தில் இவர் 'பொன்னூசல் ஆடி அருளே' என்று சொல்லுகிறார். இவருக்கு மூலம் திருவாசகத்தில் இறைவன் புகழைப்பாடிய போதிலும்கூட மாணிக்கவாசகர் இங்கு பாடுவது இறைவனுடைய திருவடிகளைப் பாடி, "வேற்கண் மடவீர் திருவூசல் ஆடாமோ" என்று பெண்கள் சொல்லித் தாங்கள் ஆடுவதாக அமைந்துள்ளது. இங்கு இவர் அம்பிகையை விளித்து 'நீ பொன்னூசல் ஆடி அருளே' என்கிறார். இப்பருவத்தின் மகுடம் பின்வருவது

புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே.

பொதுவாக ஒவ்வொரு பருவத்தின் பத்துப் பாடல் களிலும் யாப்பையும், சந்தத்தையும் இரண்டு அல்லது மூன்று முறை மாற்றிப்பாடுவது மரபு. ஆனால் சுவாமிகள் முந்தைய பருவங்களில் இவ்வாறு மாற்றிப் பாடியிருந்த போதிலும்கூட. இப்பொழுது அவ்வாறு மாற்றவில்லை.

அம்மானை, ஊசல், இரண்டும் சிலப்பதிகார வஞ்சிக் காண்டத்தில் காணப்பெறும் மகளிர் விளையாட்டுக்குரிய உறுப்புக்கள். இரண்டுமே திருவாசகத்தில் தனித்தனிப் பதிகங்களாகக் காணப்படுகின்றன. சுவாமிகள் இரண்டுவித மகுடங்கள் அமைத்திருந்த போதிலும் அம்பிகையை "அழகு

தழைந்தகல்யாண சவுந்தரி ஆடுக அம்மனையே'' என்று பாடுவது அழகாக உள்ளது.

ஊசல் பருவத்தைப் பாடும்போது பொன்னூசல் என்றே பாடுவது சம்பிரதாயம். இவர் இந்த ஊசல் பருவத்தின் இறுதிப் பாடலில் அம்மையைப் பாதாதி கேசமாக வருணிக்கிறார். பாதாதிகேச வருணனை என்பது இலக்கியங்களில் காணுகின்ற ஒரு மரபு. தெய்வத்தை வருணிக்கும்போது கேசாதி பாதமாகவும் பாடுவது கவிமரபு. ஏனெனில் தெய்வத்தினுடைய திருவடியிலேயே மக்கள் சரண்புகுகிறார்கள். ஆதலால் வணக்கம் திருவடியிலேயே தொடங்கும் இந்நூற்பாடல் பின்வருவது,

இருபதமு மென்குரற் கிண்கிணியு முறையிட்
டிரைத்திடு மரிச்சிலம்பும்
இறுமிறு மருங்கென் றிரங்குமே கலையும்பொன்
எழுதுசெம் பட்டுவீக்கும்
திருவிடையு முடைதார மும்மொட் டியாணமும்
செங்கைப் பசுங்கிள்ளையும்
திருமுலைத் தரளவுத் தரியமும் மங்கலத்
திருநாணும் அழகொழுக நின்று
அருள்பொழியும் மதிமுகமும் முகமதியி னெடுநில
வரும்புகுறு நகையும்ஞான
ஆனந்த மாக்கடல் குடைந்துகுழை மகரத்தொ
டமராடு மோடரிக்கட்
பொருயலும் வடிவழகு பூத்தசுந் தரவல்லி
பொன்னூச லாடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே.

இப்பிள்ளைத்தமிழ் தமிழ் மொழியில் தனக்கு இணையற்ற சிறப்புடையது என்று பல்லோராலும் கொண்டாடப்

பெற்று வருகின்றது. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ் என்ற நூலுக்குச் சிறப்புச் சிறப்புப்பாயிரம் தருமிடத்தில், பிள்ளைத் தமிழ் நூல்கள் பகழிக் கூத்தர் பாடிய திருச் செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழும் குமரகுருபர சுவாமிகள் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும் இணையற்ற சிறப்புடையவை. ஆனால் அவையும் அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழுக்குப், பின்னிட்டுவிட்டன என்று மகா லிங்கையர் ஒரு பாடல் பாடிக் கொடுத்தார். அதனால் புலவர் உலகத்தில் இந்த நூலுக்கு இருந்த பெருஞ்சிறப்பு நன்கு புலனாகும்.

மற்றொரு செய்தியை இங்குச் சுட்ட விரும்புகிறோம். இப்பிள்ளைத் தமிழ் காப்புப் பருவத்தில் அம்மையைக் காக்க வேண்டும் என்று முத்துக்குமாரக் கடவுளைக் கவிஞர் போற்றுகிறார். (காப்பு 4) முருகன் வள்ளிக்குப் பணிந்த தாகச் சொல்வது புலவர் மரபு.

பணியாஎன வள்ளிபதம் பணியும்
தணியா அதிமோக தயாபரனே

என்று கந்தர் அனுபூதியில் அருணகிரிநாதர் பாடுகிறார். குமரகுருபரர் இப்போது குறவர் மகளாகிய வள்ளியைப் பணிகின்ற முத்துக்குமரனைப் போற்றுதும் என்று சொல்ல வந்ததும் முருகன் வள்ளிக்குச் சலாமிடுகிறார் என்று சொல்லு கிறார். இந்த இடத்திம் சலாம் என்ற சொல்லாட்சியைச் சிறிது சிந்திக்க வேண்டும். 14ஆம் நூற்றாண்டின் தொடக் கத்தில் முகம்மதியர் படையெடுப்பால் பல இந்துஸ்தானிச் சொற்கள் தமிழ் மொழியில் புகுந்துவிட்டன. அவற்றுள் சலாம் என்பதும் ஒன்று. இச்சொல்லை அருணகிரிநாதர் முன்னமேயே பயன்படுத்தியிருக்கிறார். அவ்வாறு தமிழ் மொழியில் ஆட்சிக்கு வந்துவிட்ட சொல்லை இவர் பயன் படுத்துகிறார்.

காசிக்கு இவர் சென்று முகம்மதியத் தலைவன் கூட்டிய சமய மகாநாட்டில் இந்துஸ்தானி மொழி கற்று இவர் பேசியமையால் இச்சொல் இவருடைய ஆட்சிக்கு வந்தது என்று சிலர் கருதுவது பொருந்தாது. ஏனெனில் இவர் மதுரையில் இந்த மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடிய பிறகுதான் திருவாரூர், புள்ளிருக்கு வேளூர், சிதம்பரம், தருமபுரம் இவையெல்லாம் பாடிப் பின்புதான் காசிக்குச் செல்லுகிறார். ஆதலால் காசியில் இச்சொல்லை இவர் கற்றார் என்று சொல்வது பெரிதும் காலப்பிழையாகும்.

4. மதுரைக் கலம்பகம் :

சுவாமிகள் பாடியருளிய நான்காவது பிரபந்தம் இதுவாகும். கலம்பகம் என்பது பல்வேறு யாப்புக்களையும் கொண்டு அகப்பொருள், புறப்பொருள் முதலான எல்லாப் பொருள்களையும் அமைத்துப் புதிய நூலாகப் பாடுகின்ற நூறு பாடல்கள் கொண்ட பிரபந்தம். நூல் முழுமையும் மண்டலித்து வரும் அந்தாதியாக அமையும். இதன் தொடக்கப்பாடல் கலிப்பாவாக இருத்தல் வேண்டும். இதனுள் பின்வரும் பாடல் கூறுகின்ற பதினெட்டு உறுப்புக்களும் அமையவேண்டுமென்பது இலக்கணம்.

வைக்கும் தவம்புயம் வண்டம்மனை பாண்மதங்கு
கைக்கிளைசித் தூசல் களிமடக்கூர்—மிக்கமறம்
தானம் தழைமிரங்கல் சம்பிரதம் கார்தூது
கோலும் கலம்பகத்தின் கூறு.

பிற்காலத்துப் புலவர்கள் இந்த உறுப்புக்களோடு உலககால இயல்பைத் தழுவி வலைச்சியார், இடைச்சியார், கொற்றியர், பிச்சியார் என்றெல்லாம் காமக் குறிப்புத் தோன்றப் பாடுதலும் உண்டு. இந்த உறுப்புக்களின் விளக்கமெல்லாம் பாட்டியல் நூல்களிலிருந்து நாம் தெரிந்து கொள்பவை, உறுப்புக்களில் அகப்பொருளும், புறப்

பொருளும் வரும் இப்பாடல்கள் பாடுவோருடைய கற்ப னைக்கும், படிப்போருடைய விருப்பத்திற்கும் தாராளமாக இடம் கொடுப்பவை. ஆதலினால் இவற்றை எல்லோரும் விரும்பிப் பாடுவதும், கற்பதும் இயல்பு.

நூல் மதுரைக்குரிய சித்தி விநாயகர் வணக்கத்தோடு தொடங்குகிறது. இங்குச் 'சித்தி விநாயகர் சேவடி வந்திப் பதும் தனி வாழ்த்துவதும், முடி தாழ்த்தி நின்று சிந்திப்பது மன்றி யேறு விநாயகனைத் தந்தை தமிழுக்கு உதவு என்று கேட்பது என்?' என்கிறார். இந்த நூலிலுள்ள ஒவ்வொரு வரியிலும் சிறந்த தமிழ்ச் சுவையும் சமக்காரமும் காணக் கிடக்கின்றன. முதல் கலிப்பாவின் அராகப் பகுதியில் சிறந்த சைவ சித்தாந்தக் கருத்துக்களை அமைத்திருக்கிறார்.

செவிலி இரங்கல் என்ற தலைப்பில் வரும் பாடல், இவளைத் துன்புறுத்தும் பொருள்கள் எத்தனையோ உள்ளன. உடம்பு மாத்திரம் உள்ளது, உயிர் இல்லை என்ற செவிலிக் கூற்றுச் சுவையாக உள்ளது.

மாற்றொன் றிலை,யென் மருந்துக்கந்
    தோ,சொக்கர் மாலைகொடார்,
கூற்றொன் றலஒரு கோடி,கெட்
    டேன்,கொழுந் தொன்று, தென்றற்
காற்றொன்று, இளம்பிறைக் கீற்றொன்று,
    கார்க்கடலொன்று, கண்ணீர்,
ஊற்றொன் றிவளுக் குயிரொன்
    றிலை, யுடம்பொன்றுமே.

அம்மானைப் பாடல், எங்கும்போல இங்கும் சிறப்பாயுள்ளது.

இருவருக்குங் காண்பரிய ரசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே யாமாகில்
அருமையுடம் பொன்றிருகூ றாவதே னம்மானை
ஆனாலுங் காயமிலை யையரவர்க் கம்மானை

அம்மானையில் சிலேடைப் பொருளே சிறப்பானது. மதங்கியார் என்ற உறுப்பு வாள் சுழற்றி ஆடும் ஒரு பெண்ணின் கூற்றாகச் சொல்லப்படும் (16) தழை என்ற உறுப்பு தலைவன் தலைவியை அணிவதற்காகப், புராதன அகப் பொருள் இலக்கண மரபை யொட்டித் தழை கொண்டு வந்து தருவதாக அமையும். இங்குப் பாங்கி திருவிளையாடல் புராணத்தை மனத்தில் கொண்டு இத்தழையை நீ பெற்றுக் கொள்ளலாம் என்று தலைவிக்குக் கூறுகிறர்ன். ஊசல் இங்குப் பொன்னூசலாக உள்ளது. (24) ஐந்தடிக் கலித் தாழிசை. களி என்பது (22) கட்குடியன் கள்ளின் சிறப்பைக் கூறுவதாக அமையும். இங்கு இவன் அப்பா என்ற சொல்லை ஒரு விளியாக அமைக்கிறான். இவனுக்கு "எழுதாததோர் திருமந்திரம் இளம்பாளையுள் உண்டு" அதாவது இவனுடைய திருமந்திரங்கள் இறக்கும் இளம் பாளையுள் இருந்து பிறக்கிறது.

பிச்சியார் என்ற உறுப்பு, சிவவேடம் புனைந்து பிச்சைக்கு வரும் பிச்சியாரைக் கண்டு காமமுற்றவன் கூற்று மடல் என்ற பாடல் காணத்தக்கது. இங்குத் தலைவி மடலேறத் துணிகிறாள். 'கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப் பெண்ணிற் பெருந் தக்கதில்' என்பது குறள். எனினும் திருமங்கையாழ்வார் இரு நீண்ட மடற் பிரபந்தங்கள் பாடியிருக்கிறார். மடலேறுவார் ஒரு மன்றிற் சலெ்லுதல் வழக்கம். இது மதுரையாதலால் தலைவ "வெள்ளிமன்று ஏறுதும் இன்று நாளையிலே" என்கிறார்.

இடங்கொண்ட மானும் வலங்கொண்ட
ஒண்மழு வும்மெழுதும்
படங்கொண்டு வந்தனை யால்நெஞ்ச
மேஇனிப் பங்கயப்பூங்

நடங்கொண்ட கூடற் சவுந்தர
மாறர்பொற் றாள்பெயர்த்து
நடங்கொண்ட தோர்வெள்ளி மன்றே
றதும்இன்று நாளையிலே.

கொற்றியார் என்ற பாடல் காமுகன் வைணவவேடம் தரித்து வந்த பெண்ணைப் பார்த்துச் சொல்லியது. காலம் என்பது தலைவனைப் பிரிந்திருக்கிற தலைவி கார்கால வரவைக்கண்டு வருந்திக் கூறுவது. மரபையொட்டி இது மடக்கில் அமைந்துள்ளது. இவ்வுறுப்பில் நந்திக்கலம்பகப் பாடல் மிக்க சிறப்புடையது. சித்து என்ற உறுப்பு இரச வாதம் சொல்வது. இந்தச் சித்தன் கோபுரத்தில் கொடி கட்டுகின்ற சித்தனாம். கல்லாணைக்குக் கரும்பருத்திய திருவிளையாடல், சுந்தரருக்குச் செங்கல்லைப் பொன்னாகச் செய்த செய்தி போன்றன சொல்லப்படுகின்றன. இந்தச் சுந்தரரும் அப்பா என்ற விளியை அல்லது அசையை அமைக்கிறார். இடைச்சியார், வலைச்சியார் ஆகியோர் தங்கள் தங்கள் பெயருக்கு ஏற்பச் சிறப்பிக்கப் படுகிறார்கள். சுந்தரர் ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுகின்ற கதையைச் சொல்லுகிறார்.

மறம் என்ற பகுதியில் உள்ள பாடலில் இறுதியடி கூறும் கருத்துச் சிறப்பாயுள்ளது.

மணம்பேசி வரவிடுத்த வார்த்தையது சொன்னாய்
திருமுகத்தி லெழுத்திதுவேற் றிருமுடியி லெழுத்தும்
தேர்ந்தறியக் கொண்டுவா சிகையினொடுஞ் சென்றே.

என்னும், திருவரங்கக் கலம்பகம் போன்ற பிற நூல்கள் கூறும் மறம், அதிகமான பொருட்சிறப்புடையது.

இந்தப் பிரபந்தத்தில் இந்த ஆசிரியர் ஊர், தூது, மடல், மடக்கு போன்ற சில உறுப்புகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்களை அமைக்கிறார்.

நூல் இறுதியில் ஏட்டுப் பிரதிகளில் பின்வரும் இரு பாடல்களும் எழுதப்பட்டுள்ளன என்று ஐயரவர்கள் கொடுத் திருக்கிறார்கள்.

ஆட லறுபத்து நாலுடையார் அம்புயப்பொன்
மேடையின்மே லேறி விளையாடும் – கூடல்
உறைகளிறே உன்பாத முன்னினேன் கண்டாய்
இறைகளிறேன் கூற்றுக்கினி.

கற்றறிவ தென்றுங் கனவினுமுன் நாமமே
மற்றறியேன் வள்ளி மணவாளா—வெற்றிச்
செழுந்திருக்கை வேலைச் சிறுகாலை வாழ்த்தி
எழுந்திருக்கை வேலை யெனக்கு.

சுவாமிக்குத் தமிழ் மொழியும் வடமொழியும் நினைத்த படி ஏவல் செய்வன என்பதை எந்த இடத்திலும் காணலாம். இக்கலம்பகத்தின் 69ஆம் பாடல் :

வாலவிருத்த குமார னெனக்கிழ
வடிவுகொண்டு நின்ருயென்று வம்பிலே
ஞாலம்நின்னை வியக்கும் நயக்குமென்.
நடனம் கண்டும் வியவாமை என்சொல்கேன்
பாலலோசன பானிவி லோசன
பத்மலோசன பந்த சகாயமா
கால காலத்ரி சூல கபாலவே
தும்ப கம்ப கூம்பவனேசனே.

இப்பாடல் நமக்கு அருணகிரிநாதருடைய கந்தரலங் காலத்தில் 'மரணப்ரமாதம் நமக்கில்லையாம்' என்ற பாடலை நினைவூட்டாதிருக்க முடியாது.

மரணப்ர மாதம் நமக்கில்லை யாம்என்றும்
வாய்த்த துணை
இரணக் கலாபியும் வேலு முண்டேகிண்
கிணிமுகுளச்

சரணப்ரமாத சசிதேவி மாங்கல்ய
 தந்துரட்சா
பரண க்ருபாகர ஞானாகாசுர
 பாஸ்கரனே.

## 5. நீதிநெறி விளக்கம்

நீதிநெறி விளக்கம் என்பது வெண்பா யாப்பினால் சுவாமிகள் திருக்குறளின் கண் உள்ள பாடல்களின் பொருளை வடித்தெடுத்து 102 வெண்பாக்களால் விளங்க வைத்து நீதிநெறிவிளக்கம் எனப் பெயர் சூட்டி அளித்த நூலாகும். நூற்பெயரின் பொருளாவது நல்லொழுக்க வழியை மக்களுக்கு எளிமையாகப் பல உவமைகளால் விளக்கி உரைக்கும் நூல் என்று நாம் பொருள் கொள்ளலாம். இந்த நூலின்கண் திருக்குறளில் வரும் கருத்துக்கள் மட்டு மின்றிச் சொற்களும் சொற்றொடர்களும் எளிமையாகவே பயன்படுத்தப் பட்டுள்ளன. இந்த நூலானது திருக் குறளைப் போலவே எல்லா மதத்தினரும் கொள்ளுதற்குரிய காரியங்களும் பிறவும் அனுபவ நிலையில் உதாரணம் காட்டிச் சுருங்கச் சொல்லுதல் முதலிய அழகுகள் பொருந்த விளக்கப்பட்டுள்ளன.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும் இங்குச் சொல்லப்பட்டுள்ளன. சுவாமிகள் வாக்கு என்பதை நாம் நன்கு காணலாம். இந்த நூல் தோன்றிய நிலை சரித் திரத்தில் சொல்லப்பட்டது. எனினும் குமரகுருபரர் இதைப் பாடிய காலம் அவர் ஆண்டில் மிக்க இளைஞர். அரசன் வேண்டுகோள் மட்டுமல்லாமல் உயிர்களிடத்து வைத்த பெருங்கருணையால் அவர் இந்த நூலைச் செய்தார் என்று ஆன்றோர் சொல்வார்கள். இரண்டு தலைமுறைகளுக்கு முன்னே ஆரம்பப் பள்ளியில் தமிழ் பயின்ற மாணாக்கர்

அனைவரும் இதை நன்கு மனப்பாடம் செய்து இதில் சொல்லப்பட்ட கருத்துக்களைத் தங்கள் சொந்தக் கருத்துக் களாக ஆக்கி வைத்திருந்தார்கள். அதனால் அவர்கள் அடைந்தபலன் சொல்வளம் மொழிநயம், உயர்ந்த சிந்தனை ஆகியவையெல்லாம் இளமையில் கைகூடி விட்டன. அல்லாமலும் சுவாமியின் வாக்கு அருள்வாக்கு ஆதலால் பிள்ளைகளுக்குச் சிறந்த கவிதை உணர்வும் வந்திருந்தது.

இன்று நிலைமை அதுவல்ல, நீதிநெறி விளக்கத்தை யாரும் படிப்பதில்லை. அதிலுள்ள கவிதைக்காகவோ அது காட்டும் ஒழுக்க நெறிக்காகவோ இன்றும் யாரும் படிக்க வில்லை. ஆய்வுப் பட்டத்துக்காக ஸ்கேல் வைத்து அளக்கிற மாதிரி ஒரு கணிப்பொறியிலிட்டு வார்த்தைகளை அளந்து கணக்கிடுவதுதான் இன்றைய படிப்பு, ஆய்வு. இது இப்போது மறந்து விடுவோம்.

முற்காலத்தில் நீதிநெறிவிளக்கம் தவறாமல் பாடமாக இருந்து வந்திருக்கிறது. பள்ளிக்குச் சென்ற பிள்ளைகள் எல்லோரும் படித்தார்கள். ஆனால் இன்று அப்படிஅல்ல. இது யாருக்கும் பாடமல்ல. ஒழுக்கப் பயிற்சி வேண்டா மென்று பள்ளிகளை விட்டு ஒதுக்கப்பட்டு விட்டது. ''பழையன கழிதலும் புதியன புகுதலும்'' என்ற சூத்திரம் நல்லொழுக்கத்தைக் கழிப்பதற்கே பயன்பட்டுவந்திருக்கிறது. இத்தகைய துர்ப்பாக்கிய நிலையை மறந்துவிட்டு இனி நூலைப் பார்ப்போம்.

5 வயது ஊமைத் தன்மை நீங்கித் திருச்செந்தூர் முருகன் அருள் பெற்றுக் குமரகுருபரர் செய்த பன்னிரண்டு நூல்களில் நான்காவது நூலாக இன்று கருதப்படுவது நீதி நெறி விளக்கம். இது உலக நீதிகளை அறிவுறுத்துகின்ற 102 வெண்பாக்களையும் ஒரு காப்புச் செய்யுளையும் உடையது. இந்நூலின் பெயரும் சுவையானது. விளக்கம் என்பது பல

சமய நூல்களுக்கு அமைக்கப்பெற்ற ஒரு பெயர் விகுதி. உண்மை நெறி விளக்கம் என்ற சாஸ்திரப் பெயரைக் காணலாம். இது சைவ சித்தாந்த தச காரியங்களைக் கூறு கின்ற 6 பாடல்கள் கொண்ட ஒரு சிறுநூல். மெய்ந்நெறி விளக்கம் என்ற ஒரு பழைய சாஸ்திர நூல் உள்ளது. இந்த நெறியில் வந்த நூலே நீதி நெறி விளக்கம். அவை சாஸ்திர நூல்களாய் இருக்க இது நீதி நூலாக அமைந்துள்ளது. தமிழில் இதற்கு முன்பு பல நீதி நூல்கள் திருக்குறள் முதலாகச் செய்யப்பட்டிருந்தன. பதினெண் கீழ்க்கணக் கிலுள்ள பதினொரு நூல்கள் நீதிகளைப் புகட்டுவன. பின்னரும் ஔவையார் நூல்கள் அதிவீரராம பாண்டியனது நூல் (நறுந்தொகை) போன்றவை எழுதப்பட்டிருந்தன. சைன சமயத்தாரும் அருங்கலச் செப்பு. அறநெறிச்சாரம் என்ற நீதி நூல்கள் தங்கள் சமயச் சார்பாகச் செய்திருந்தார் கள். அற நெறிச் சாரத்திற்கும், நீதி நெறி விளக்கத்திற்கும் பெயரளவில் ஒற்றுமை உண்டு. இரண்டும் வெண்பா நூல்களே. மேலும் முது மொழிக் காஞ்சி, ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், நறுந்தொகை என்னும் வெற்றி வேற்கை ஆகிய நூல்கள் ஓரடியிலேயே நீதியை உரைக்கும் நூல்கள். இவை தவிர, இங்குக் கூறிய ஏனைய நூல்கள் யாவும் வெண்பா நூல்களே.

பழங்காலத்திலிருந்தே தமிழ் மொழியில் மட்டுமல்லாது வடமொழியிலும் நீதிகளைப் புகட்டும் நூல்கள் தகுதி வாய்ந்த புலவர்களால் பாடப்பட்டே வந்துள்ளன. இதற்குக் காரணமும் உண்டு. திருக்குறள் தோன்றியபிறகும் பல்வேறு அறம்புகட்டும் நூல்கள் ஏன் தோன்றவேண்டும் என்ற கேள்வி எழுவது இயல்பு. இதற்குத் தக்க விடையும் கூற முடியும்.

திருக்குறள் கி. பி. 2-3 நூற்றாண்டுகளில் தோன்றியது என்பதை நாம் ஒப்புக் கொண்டு பேசினால் இதற்கு எளிதில்

காரணம் சொல்ல முடியும். அன்று தமிழ் நாட்டுக்கே அல்லது தமிழுக்கே இராஜதானி என்று சொல்லத்தக்க மதுரை நகரமானது கி.பி. 250லிருந்து 575 வரையில் அன்னிய மொழியினரான சமண் கூட்டத்தாரால் கைப் பற்றப்பட்டு இருள் சூழ்ந்திருந்தது. இத்தக் காலத்தில் மதுரையில் சைவம் குன்றியது மட்டுமல்ல. தமிழும் தமிழ்ப் பண்பாடும் திட்டமிட்டு ஒடுக்கப்பட்டன. அக்காலத்தில் ஒழுக்கம் குறைந்து போயிற்று. சைவ ஒழுக்கம் மட்டுமல்ல சாதாரண மக்கள் ஒழுக்கமே கீழ் நிலைக்கு வந்துவிட்டதை அறிகிறோம்.[1] ஏனெனில் பரம்பரையாக வந்த எந்த அரசனும் ஆட்சி புரியாமல் ஒரு கூட்டத்தினருடைய நிர்வா கத்தில் பாண்டிநாடு இருந்து பெரும் இன்னலுக்கு உள்ளாகி யிருந்தது. ஆகவே ஒழுக்கங்கள் சீர்கெட்டமை வியப் பில்லை. ஒழுக்கத்தை மீண்டும் நிலைநாட்ட வேண்டும் என்ற கருத்தில்தான் ஒழுக்க சீலர்களான சைன முனிவர் களுங்கூட நாலடியார் என்ற சிறந்த நூல் செய்தார்கள். பின்னும் ஏலாதி, சிறுபஞ்சமூலம், பழமொழி நானூறு என்ற சைனநூல்கள் செய்யப்பெற்றன. இவ்வாறு தொடர்பாகப் பல நூற்றாண்டுகளில் நீதி புகட்டும் நூல்கள் தமிழ்மொழி யில் செய்யப் பெற்றமைக்குக் காரணம் அவ்வப்போது இருந்த அரசியல் சூழ்நிலைகளே, எடுத்துக்காட்டாக 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட முகம்மதியர் படையெடுப்பும் அழிவு வேலையும் தமிழ்நாட்டு மக்களின் வேரைக் கல்லிவிட்டன. ஆகவேதான் சிந்தனையாளர் களான பெருங் கவிஞர்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, நீதி வெண்பா, வெற்றி வேற்கை,

1. இதன் விளக்கத்தை சென்னை பல்கலைக்கழக வெளியீடான பாண்டி நாட்டில் களப்பிரரும் அவரால் பண்பாட்டுக்கு நேர்ந்த கேடும் என்ற தலைப்புடைய எமது ஆங்கிலச் சொற்பொழிவுக் கட்டுரைகளில் காணலாம்.

அறநெறிச்சாரம் நன்னெறி முதலான ஒழுக்க போதனைக் கான நூல்கள் செய்தார்கள். இந்த நெறியில் எழுந்த சிந்தனையினால் வந்ததுதான் சுவாமிகளுடைய நீதிநெறி விளக்கம். இதற்கு உடனடித் தூண்டுகோலாயிருந்தது மதுரைத் திருமலை நாயக்கனுடைய வேண்டுகோள்.

நீதிநெறி விளக்கத்துள் கல்வி பற்றித் தொடக்கத்தில் மிகவும் விரிவாகச் சொல்லப்படுகிறது. அதிகமான பாடல் கள் நற்கல்வியை வற்புறுத்திப் பேசுகின்றன. நீதிநூல் செய்த ஏனைய புலவர்கள் கல்வியை இவ்வளவு வற்புறுத்திப் பேசவில்லை. குறளில் கல்வி, கல்லாமை, கேள்வி என்று மூன்று அதிகாரங்கள் கல்வியைப் பேசுகின்றன. இவற்றை யும் விட அதிகமான கருத்துக்களை நீதிநெறி விளக்கம் பேசுகிறது. இதன் பாடல்கள் யாவுமே கல்வியைப் பெரிதும் வற்புறுத்துகின்றன. அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும், தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும், கல்வியே கற்புடைப் பெண்டிர் என்ற முதல் பாடல்களின் தொடக்க உரைகள் கருதத்தக்கன. தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும் கல்வி என்ற கருத்து எங்குமே சொல்லப்படாத கருத்து. இதனால் அக்காலத்து கல்வி பயிற்று முறைகள் கடினமாயிருந்தன. கல்வி கற்ற பிள்ளை கள் கற்றலில் துன்பப்பட்டார்கள் என்று தெரிகிறது. இதுவுமல்லாமல் மற்றோர் இடத்தில் (22) தம்முடைய கல்வியை விலைக்குப் பயன்படுத்துபவர் என்ன தண்டனைக்கு உள்ளாவார் என்கிறார். பழந்தமிழ் மரபு அந்தணனுக்கும் ஆசானுக்கும் உரிய கடமைகள் ஓதலும் ஓதுவித்தலும். வேதமரபில் பிராமணனுக்குரிய இரண்டு பெருங்கடமை சுவாத்தியாயம், பிரவசனம், கற்றல், கற்பித்தல், என்று உபநிடதங்களில் சொல்லப்பட்டிருக்கும். இவர், பிறர்க்குப் பயன்படத் தாம் கற்ற விற்பார். (விற்பார் என்றால் ஊதியம் பெற்றுக் கொண்டு சொல்லிக் கொடுப்பவர்)

எமனுக்கு வேலை கொடுக்கிறார்கள் என்று சொல்கிறார், இவ்வாறு, கற்பித்தலின் சிறப்பு மிகவும் உயர்வாகச் சொல்லப்பட்டுள்ளது. கல்வியைப் பற்றிச் சொல்லுகின்ற கருத்துக்களில் கல்வியை இடமறிந்து பயன்படுத்த வேண்டும், கல்வியினால் வருவது நன்னடை. கற்றோர்க்குக் கல்வி நலனே நலன். முற்றும் உணர்ந்தவர் இல்லை. இப்படி யெல்லாம் பலவகையான கருத்துக்களை ஆசிரியர் தொகுத்துச் சொல்லியிருக்கிறார்.

கல்வியை அடுத்து இல்வாழ்க்கை, அரசுநிலை, கீழ் மக்கள் இயல்பு, நட்பு, உபகாரம், இன்சொல், முயற்சி. கருமமே கண்ணாதல், தீயகுணங்கள், குலம் உடைமை; சொல்வன்மை, தெய்வ நம்பிக்கை ஆகிய பொருள்கள் நயம்படச் சொல்லப்படுகின்றன. பிறகு, இன்பம் என்ற பகுதியில் முக்கியமாகக் கற்பில் மகளிரை அணுகாமை, சிற்றின்பத்தின் தாழ்வு ஆகிய கருத்துக்கள் சுருக்கமாகச் சொல்லப்படுகின்றன. நூல் இறுதியிலுள்ள 18 பாடல்கள் துறவைப் பேசுகின்றன. உள்ளத்துறவே உயர்வு உடையது, சிவயோகிகள் பற்றற்று இருப்பர், ஐம்புலன் அடக்கம், சிவயோகிகள் காண்பதே காட்சி என்ற பொருள்கள் நன்கு சொல்லப்படுகின்றன.

இவருடைய பாடற்கருத்துக்கள் சில பழமொழி போல இன்று மக்கள் நாவில் வழங்குகின்றன. முற்றும் உணர்ந் தவர் இல்லை, முழுவதும் கற்றனமென்று களியற்க (14), குலமகளுக்குத் தெய்வம் கொழுநனே, கண்கூடாப்பட்டது கேடெனின் கீழ்மக்கட்கு உண்டோ உணர்ச்சி (34), வாங்கும் கவளத்து ஒரு சிறிது வாய்தப்பில் தூங்கும் களிறோ துயருறா (38), கைவரும் வேந்தன் நமக்கென்று காதலித்த செவ்வி அறியாது உரையற்க (46), காலம் இடம் பற்றியும் கருமமே கண்ணாவார் பற்றியும் உள்ள பாடல்கள் மிக்க சிறப்புடையன

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து — மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்து
ஆள் வினை யாளப் படும்.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் — செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

நீதிநெறி விளக்கம் பாடியதற்காக திருமலை நாயக்க மன்னன் இளம்பிள்ளையாக இருந்த குமரகுருபரருக்கு 20,000 பொன் வருவாய் உடைய அரியநாயகபுரம் என்ற சிற்றூரை முற்றூட்டாக அளித்தான் என்று சொல்லப் படுகிறது. குமரகுருபரர் அப்போது இளம்பிள்ளைதான். இந்த ஊரை அவருக்குக் கொடுத்தது அவருக்கு உபயோகப் பட்டிருக்காது. அவருடைய பெற்றோருக்குப் பயன் பட்டிருக்கும். இதில் ஒரு விசித்திரமான பொருத்தம் ஏற்பட்டிருக்கிறது. காசிமடத்தில் அதிபர்களாக சுவாமிக் குப் பிறகு அவருடைய ஞான பரம்பரையில் 20 பேர் வரை யில் நிர்வாகம் செய்திருக்கிறார்கள். ஆனால் அந்த இருபது பேரினுள்ளும் 20 ஆம் பட்டத்திலிருந்த ஸ்ரீ அருணந்தி சுவாமிகள் ஒருவரே குமரகுருபர சுவாமிகள் பெயரால் அவர் பிறந்த ஊரான ஸ்ரீவைகுண்டத்தில் கல்லூரி முதலான பல நினைவுச் சின்னங்களை ஏற்படுத்தி யிருக்கிறார். இந்த அருள் நந்தி சுவாமிகள் திருமலை நாயக்கனால் கொடுக்கப்பட்ட இந்த அரியநாயகபுரம் என்ற ஊரில் பிறந்தவர்கள் என்பது சிறப்பான பொருத்தம். இவருக்கு அடுத்த பட்டத்திலிருந்து வருகின்ற ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான், சுவாமிகள் பெயரால் ஸ்ரீ குமரகுருபரர் என்ற மாதப் பத்திரிகையைத் தங்கள் காசி மடத்திலிருந்து நடத்தி வருகிறார்கள்.

மதுரைச்குச் சுவாமிகள் வந்து முந்திய பிரபந்தங்கள் பாடி. இந்த நீதிநெறி விளக்கம் பாடிய காலத்தில் அவருடைய வயது மிகவும் குறைவு. ஆயினும் இந்த நூலில் பார்க்கும் போது அவருடைய அனுபவமும் உலகியல் அறிவும் அவர் கூறும் அதிகமான உவமைகளைப் பார்க்கும்போது அதிகம் என்றே தெரிகின்றது. பல்லோராலும் பாராட்டப் பெறுதல் விரும்புபவன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் சொல்லுகின்ற 'பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான்' என்ற பாடலால் நன்கு தெரிந்த கருத்து. குலமகட்குத் தெய்வம் கொழுநனே என்ற பாடல் சம்பிரதாயத்தை முழுமையும் தழுவிய பாடல். எனினும் அதனுள் அறவோருக்கு தம்முடைய குருவே தெய்வம் என்று கூறுவது ஒரு சிறந்த கருத்து. குமரகுருபரர் நூல்களால் விளங்குகின்ற ஒரு பெரும் கருத்து குருவின் சிறப்பு. திருச்செந்தூரிலிருந்து புறப்பட்டு அவர் ஞானாசிரியனைத் தேடி வருகின்றார். இந்த நிலையே இதை நன்கு விளக்கும். பின்னால் இதையே பெருக்கி 'பண்டார மும்மணிக் கோவை' என்ற நூலாகப் பாடப் போகிறார். இப்போது 'அறவோருக்கு அடிகளே தெய்வம்' என்று (27) இந்தப் பாடலில் சொல்லியிருப்பதும் இவர் குருவருளை உணர்த்த வந்தவர் என்ற கருத்தைப் புலப்படுத்துகிறது.

வள்ளல்களின் தன்மையை முற்றுருவகமாகப் பாடியிருக் கின்ற பாடல் சிறப்புடைய பாடல்களில் ஒன்று.

**கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா**
**இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை**
**பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே**
**சலியாத கற்ப தரு.**

மெய்வருத்தம் பாரார் என்ற 53வது பாடல் முன்னே சொல்லப்பட்டது. இது கருமமே கண்ணாகக் கொண்டு

காரியத்தில் தலைப்படுவாருக்கு இலக்கணம் சொல்லியவாறு. இதனுள் இரண்டு கருத்துகள் போற்றத்தக்கன. 1. எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் என்பது. தாம் துணைநாடு கின்றோரிடத்து நலத்தை மட்டுமே கருதி துணை கொள்ள வேண்டுமே தவிர அவரிடத்தில் இருக்கக் கூடிய குறை பாட்டை நினைத்தால் காரியம் கெட்டு விடும். ஆகவே குறைபாட்டை நினைக்க வேண்டாம் என்று சொல்லுகிறார். 2. அவமதிப்பும் கொள்ளார் என்பது. பொதுக் காரியத்தில் ஈடுபடுபவருக்குப் பிறரால் அவமதிப்பு வருவது எங்கும் நிகழ்ந்து வருவது. அதை நினைத்தால் கருமம் வெற்றி பெறாது. ஆதலால் அதை மறந்து கருமமே கண்ணாக ஈடுபட வேண்டும் என்று இப்பாடல் சொல்லுகிறது. 60ஆம் பாடலில் பொய் குறளை, வன்சொல், பயனில் சொல் என்ற நான்கும் சொல்லின் வழுக்குக்கள் என்று எண்ணிட்டுக் காட்டுகிறார். வறுமையைக் கூறும்போது இன்சொல் சொல்லுவதில்கூட வறுமை வேண்டுமா? அது கொடிது என்கிறார். மற்றொரு பாடலில் (78) பெண்டிர் நலம் துய்த்தலில் என்ன என்ன கெடாமல் காக்க வேண்டும் என்று சொல்லுகிறார்.

> **கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே**
> **தருமமுந் தாழ்வு படாமே—பெரிதுந்தம்**
> **இன்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்**
> **நன்னலந் துய்த்தல் நலம்.**

இவ்வாறு இந்த இளைஞரான சுவாமிகள் பெண்டிரும் இல்லறமும் பற்றி இவ்வளவு செம்மையாக எந்த அனுபவங் கொண்டு பாட முடிந்தது என்று சிந்திக்கும் போது இவை யாவும் அருள் அனுபவத்தால் விளைந்தவை என்றுதான் சொல்லத் தோன்றும். சாஸ்திரங்களில் மனைவி கணவன் பெயரைச் சொல்லக் கூடாது என்பது மட்டுமல்ல; கணவன் மனைவி பெயரைச் சொல்லி அழைக்கக்கூடாது என்றும் சாலப்பெப்பட்டிருக்கிறது. அவற்றை மனத்துள் வாங்கி

சுவாமிகள் துறவுக்கு இலக்கணம் சொல்லும்போது துறவி பெண்ணின் 'பேயருமெடுத்தோதார்' (88) என்று சொல்லு கிறார்.

நூலின் இறுதி 18 பாடல்களில் துறவுக்கு இலக்கணம் சொல்லுகின்ற இடத்து முக்கியமான ஒன்று துயிற்சுவையும் கொள்ளார் என்று சொல்லுகின்றார்.

இந்த நூலுக்குச் சுவாமிகள் பாடிய 'நீரிற் குமிழி இளமை' என்ற பாடலை இவரே பின்னால் தாம் பாடிய சிதம்பரச் செய்யுட் கோவையிலும் 9ஆம் பாடலாக எடுத்தமைத்துக் கொண்டிருக்கிறார். மகாத்மா காந்தி இப்பாடலின் கருத்தில் ஈடுபட்டு இதைத் தம் கையாலேயே தமிழில் எழுதிப் பழகினார்.

குமரகுருபரர் பின்னால் தருமை ஞானாசிரியரிடத்து உபதேசம் பெறுகிறார். அவருடைய வாழ்க்கையே குருவருளைச் சிறப்பிப்பது. வள்ளன்மையைக் கூறுகின்ற பாடல் மிக்க சிறப்புடையது (37)

> கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
> இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
> பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
> சலியாத கற்ப தரு.

இச்சிறு நூலில் இவர் அரசியல், இல்லறம், கற்பு, ஈகை, முயற்சி என்பன பற்றிக் கூறியுள்ள பாடல்களின் பொருளை யும் இவர் வார்த்தையையும் ஒப்புநோக்கிக் காணும்போது இவ்வறிவு முதிர்ந்த சொற்கள், கல்வியாலோ அனுபவத் தாலோ உபதேசத்தாலோ வந்தனவல்ல. முருகன் திருவருளால் உள்ளத்தெழுந்தன என்பது நன்கு புலப்படும். திருக்குறளையும் கடந்த உபதேசச் சொற்கள் இங்கு நிரம்ப உள்ளன.

குமரகுருபர முனிவருக்கு எப்போதுமே ஞானநாட்டம். இதற்குத் துணை புரியவல்லது பற்றின்மை, துறவு. ஆகவே, நீதி நூலாகிய நீதிநெறி விளக்கத்தில் துறவில் இன்பம் எது என்று காட்டும்போது, அந்த இல்லற இன்பத்தைச் சொல்லிக் காட்டுகிறார். இல்லற வாழ்க்கையில் பிள்ளைப் பேறுதான் மேலான இன்பம். அதுபோல. துறந்தமைக்கு, துறவே இன்பமல்ல, அதில் தோன்ற வேண்டியதாகிய மெய்யுணர்வே மேலான இன்பம் என்கிறார். நீதி பேசும் போதும், இவருடைய மனம் மெய்யுணர்வையே நாடுகிறது.

> கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினால்
> பெற்றுக்கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
> துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
> இறந்த வெலாம் துன்பமல்லது இல். (100)

பதிப்புக்கள் :

நீதிநெறி விளக்கமானது அது தோன்றிய நாள் தொடங்கிப் பெரியவர்களும் குழந்தைகளும் வாழ்க்கையில் எந்த நிலையில் உள்ளவர்களும் விரும்பிப் படித்து மனப் பாடம் செய்கின்ற மிகச் சிறந்த நூலாக இருந்து வருகிறது. அந்த நிலைமை காரணமாக இதைக் கணக்கற்ற முறைகள் மூலம் மட்டும் தனியாகவும் உரையோடும் ஆங்கில மொழி பெயர்ப்போடும் பலர் பலவிதமாகப் பதிப்பித்திருக்கிறார்கள். ஐயரவர்கள், 'ஒரு பாதிரியார் பாளையங்கோட்டையி லிருந்தவர் இதை விரும்பிப் பதிப்பித்தார்' என்று எழுதியிருக் கிறார். அச்சமயம் அந்தப் பாதிரியாருக்குத் தமிழ் கற்பித்து வந்த தேவர்பிரான் கவிராயர் என்ற சிறந்த பண்டிதர். அவர் விரும்பியபடி குமரகுருபரருடைய வரலாற்றையும் நூல்களையும் ஓரளவு குறிப்பிட்டு ஒரு சிறப்புப் பாயிரம் செய்து கொடுத்தார் என்று எழுதியிருக்கிறார். இச்சிறப்புப் பாயிரம் இந்த நூலில் முன்னே சுவாமிகள் பாடிய நூல்களை

முதன்முதல் குறிப்பிட்ட இடத்து முழுமையும் தரப்பட்டுள்ளது. அதுவுமல்லாமல் பிற்காலத்தில் மற்றொரு புலவர் பின்னும் நீண்டதொரு ஆசிரியப்பாவால் ஒரு சிறப்புப் பாயிரமாகப் பாடிச் சேர்த்திருக்கிறார். இந்த இரண்டு பாடல்களுமே கிடைத்தற்கு அருமை பற்றி இங்கு முழுமையாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

இனி, சுவாமிகளுடைய நூல்கள் முழுமையும் பதிப்பித்தோர் பலர். அவர்களுள் சிறப்பாகச் சொல்லக்கூடிய பதிப்புக்கள் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் மூலப்பதிப்பு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப்பதிப்பு, கடைசியாக டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்புரைப் பதிப்பு 1939. இவை மூன்றும் குறிப்பிடத்தக்கன.[1]

முதலாவதாக காஞ்சிபுரம் சபாபதி முதலியார் பதிப்புக்குப் பிறகு முத்தையாப் பிள்ளை என்பவர் நூல் முழுமையும் தாம் ஓர் ஆங்கில மொழி பெயர்ப்புச் செய்து அதனோடு 1864இல் வெளியிட்டிருக்கிறார். 1835லிருந்து 1939க்குள் நீதிநெறி விளக்கத்தை மூலமும் உரையுமாகப் பன்னிருவர் பதிப்பித்திருக்கிறார்கள் என்பது, மக்கள் மனத்தில் அது பெற்றிருந்த சிறப்பிடத்தைக் காட்டுகின்றது.

நீதிநெறி விளக்கத்துக்கு ஆங்கில மொழி பெயர்ப்புக்கள் நான்கு தோன்றியிருக்கின்றன. எச். ஸ்டோக்ஸ் என்ற பாதிரியார் மொழிபெயர்ப்பு 1830, முத்தையாப் பிள்ளை 1864. எஸ். வின்பிரட் என்ற பாதிரியார் மொழிபெயர்ப்பு 1914. அரசின் பெரிய கல்வி அலுவலராயிருந்த கிருஷ்ணசாமி முதலியார் ஆங்கிலம் 1917. பின்னர் 1943இல் தருமபுர ஆதீன

1. பதிப்புக்களைப் பற்றிய எல்லா விவரங்களையும் 1943ஆம் ஆண்டு நீதிநெறி விளக்கம் மூலமும் உரை வளமும் என்ற பெயரோடு தருமபுரம் 24ஆவது சந்நிதானத்தின் காலத்தில் வெளியிட்ட சிறப்புடைய பதிப்பில் காணலாம்.

வெளியீடாக ஓர் அழகிய உரைவளப் பதிப்பு காழி சிவ கண்ணுசாமிப் பிள்ளையால் வெளியிடப்பட்டது. (முன்னமே அடிக்குறிப்பில் சொல்லியது.) இவை யாவும் கல்வி யாளருக்குச் சுவாமிகளுடைய பாடலில் இருந்த பேரீடு பாட்டைப் புலப்படுத்தும்.

மேற்குறிபிட்டவற்றை அல்லாமல் கண்ணுசாமிப் பிள்ளையின் அட்டவணையில் விட்டுப்போன ஒரு பதிப்பு இங்கு எடுத்துச் சொல்லத்தக்கது. தரும மார்க்கத்தைப் பரப்புவதற்காகவே நல்ல நூல்களை வெளியிடுவதை நியம மாகக் கொண்ட சாது இரத்தின சற்குரு புத்தக சாலையார் 1920ஆம் ஆண்டில் நீதிநெறி விளக்க மூலமும் விளக்க உரை யும் என்று மிகவும் சிறப்புடைய ஒரு நூல் வெளியிட்டார்கள். இதை நன்முறையில் பரிசோதித்து அச்சிட்டவர் அ. மகாதேவச் செட்டியார். (முன்னமே வேறு பல நூல் களைப் பரிசோதித்துப் பதிப்பித்தவர்) இவர் இந்நூலில் பதிப்பாளர் என்று குறிப்பிடப்படுகிறார். இந்தப் பதிப்பு சிறப்பான அணிந்துரை கொண்டது. அணிந்துரை எழுதியவர் மகாதேவச் செட்டியாரே. அணிந்துரையின் இறுதியில் அவர் இப்படி ஒரு வாழ்த்து எழுதியிருக்கிறார்.

ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் சேவடி வாழ்க
மஹான் சாது ஸ்ரீசை இரத்தின சற்குரு திருவடி வாழ்க
தர்மமும் சத்தியமும் தழைத்தோங்குக.
பிரஜைகள் அனைவரும் அன்புற்று இனிது வாழ்க

இதைப் படிக்கும்போது இந்தப் பதிப்பாசிரியருடைய பக்தியையும் தெய்வச் சிந்தனையும் பாராட்டாமல் இருக்க முடியாது.

அணிந்துரைக்குப் பின் நீதிநெறி விளக்கத்தின் விஷய அட்டவணை 5 பக்கம். பின்னர் நீதிநெறி விளக்கம் ஒவ்வொரு செய்யுளுக்கும் மூலமாய்க் கருதத்தக்க திருக்குறள் பாடலின்

முதற்குறிப்பும் ஆகிய அட்டவணை 7 பக்கம். அதன் பிறகு குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் 18 பக்கம். பின் நூல் மூலமும் விருத்தியுரையும் பாடல், பதவுரை, தொகுத்துரை, விருத்தியுரை, திருக்குறள், மேற்கோள், அதற்குப் பரிமேலழகர் உரை, பிறகு முத்தையப் பிள்ளையின் ஆங்கில மொழி பெயர்ப்பு என்ற முறையில் எல்லாப் பாடல்களையும் அச்சிட்டிருக்கிறார். நூல் இறுதியில் வழக்கமாயுள்ள அங்கங்களோடு வினை உருபுகள். வெண்பா இலக்கணம் என்று 32 பக்கம் கொண்ட ஒரு தனி இலக்கணப் பகுதி. இவற்றைப் பார்க்கும்போது இவ்வளவு சிறப்பாக அச்சிடப்பட்ட வேறு நூல் இல்லையென்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

## 6 திருவாரூர் நான்மணிமாலை

சுவாமிகள் மதுரையிலிருந்து தருமபுரம் நோக்கி வந்த போது வழியில் தருமபுரத்துக்கு ஆதிகுருவான குருஞான சம்பந்தருக்கு ஞான குருவாய் இருந்து உபதேசம் செய்த கமலை ஞானப் பிரகாசர் வாழ்ந்த திருத்தலத்தைச் தரிசிக்கும் நோக்கத்தோடு திருவாரூர் வந்தார். அப்போது நான்மணி மாலை பாடினார் என்று முன்பு சொல்லப்பட்டது.

நான்மணிமாலை என்பது வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா ஆகிய நான்கு பாக்களை முறையாக மாறி மாறி அமைத்து அந்தாதியாக மண்டலித்து வரும்படி நாற்பது பாடல்கள் பாடுவது. சுவாமிகளுக்கு ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன் பட்டினத்தடிகள் மிகவும் சிறப்புப் பொருந்திய கோயில் நான்மணிமாலையைச் சிதம்பரத் தலத்துக்கு உரியதாகப் பாடினார். அப்பிரபந்தம் சைவத் திருமுறைகளுள் பதினோராந் திருமுறையில் அங்கமாக உள்ளது. சுவாமிகள் பாடிய திருவாரூர் நான்மணிமாலையும் மிகுந்த சிறப்புடையது என்பது சொல்ல வேண்டிய தில்லை, திருவாரூர் இறைவர் இவருடைய பாடல்களில்

கமலேசர் என்று சொல்லப்படுகிறார். திருவாரூரை ஆரூர் என்று மட்டுமல்லாமல் கமலை என்றும், கமலாலயம் என்றும் இவர் சொல்வார். ''திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்'' என்று இவ்வூரைச் சிறப்பித்துத் திருத்தொண்டத் தொகையில் சுந்தரமூர்த்தி பாடியிருக்கிறார். திருவாரூர்ப் பிறந்தார்கள் அனைவரும் சிவகணங்களாகத் தோற்றுவர். இதனைப் பெரியபுராணத்து நமிநந்தியடிகள் நாயனார் வரலாற்றில் காணலாம். இங்குப் பிறக்க முத்தி என்பது மரபு. திருவாரூர்த் தேர் ஆழித்தேர் எனப்பட்டது. சமீப காலம் வரையில் திருவாரூர்த் தேரழகு என்பது பொருளுடைய ஒரு பழமொழியாக இருந்தது. திருவாரூர் ஆலயம் பூங்கோயில் என்று தேவார காலம் முதல் பிரசித்தி பெற்றது. பெரியபுராணத்தில் விறன்மிண்ட நாயனார் வரலாற்றால் இதன் சிறப்பு நன்கு விளக்கமாகும். திருவாரூர்ப் பெருமானுக்குச் செங்கழுநீர் மலர் சிறப் புடையது. செங்கழுநீர் விளைகின்ற ஓடை பெருமானுக் குரியது ஐந்து வேலி நிலப்பரப்பு என்று இன்றும் பழமொழி யாக உள்ளது. இத்தகைய செய்திகளையெல்லாம் சுவாமிகள் தம்முடைய நூலில் விளக்கமாகக் கூறுகிறார்.

முசுகுந்தச் சக்கரவர்த்தி திருவாரூரில் அமர்ந்துள்ள சோமாஸ்கந்த மூர்த்தியாகிய தியாகராசரை இந்திரனிடத்துப் பெற்றுவந்த வரலாறு சிறப்பாகச் சொல்லப்படுகிறது. திருமால் மார்பில் அவர் மூச்சு விடுந்தோறும் அசைந்தாடும் காரணத்தால் அவர் பூவுலகுக்கு வந்தபோதும் கூட அசைந். தாடலே அவருடைய நடனம் இவர் வீதிவிடங்கர் என்பார் இதனால் இருந்தாடழகர் என்பதும் ஒரு பெயர். இருந் தாடழகர் என்பதற்கு இவர் நயமான பொருள் கற்பிக்கி றார். காலைத் தூக்கி நின்று ஆடினால் திருமால் சொல்லும் காலைக் கண்டேன் என்று நிலைமை ஏற்பட்டு விடும். அன்றி யயன் முன்னமே திருக்கடவூரில் உதை உண்டது,

போலப் பின்னும் உதை விழக் கூடும் என்று அஞ்சுவான். அதனால் காலைத் தூக்காது இருந்தாடுவர் என்கிறார். இவ்வாறு இவருடைய பாடல்களில் வரும் சமற்காரங்கள் மிகப்பல.

இந்த நான்மணி மாலையானது ஒரு காப்புச் செய்யுளும் நூற்பாடல்களாக 40 பாடல்களும் கொண்டது.

ஓர் ஆசிரியப்பாவில், இறைவன் எவ்வாறு அன்பர்கள் தமக்கு எளியரின் எளியராயினார் என்று வரிசைப்படுத்திச் சொல்லுகிறார். சாக்கியர் பெருமான் காதலுட் கிடப்பக் கல்லெறிந்தது, கானவர்குருசில் வண்டுமிழ் தீநீர் உவந்தனர் ஆடியது, விருப்படிக் கொண்ட மிச்சிலூன் மிசைந்தது, செருப்படிக்குச் செம்மாந்திருந்தது. விசயன் வில்லடி பொறுத்தது, வழுதிபிரம்படிக்கு வந்தது, நள்ளிருள்யாமத்து நாவலர் பெருமாள் தணிலைக் காதல் தணிப்பப் பரவைவாய் தவிற் பதமலர் சேப்ப ஒரு காலல்ல இருகால் நடந்தது என்று இவ்வாறு எளியரின் எளியராயினர் அளியர் போலும் அன்பர்கள் தமக்கே என்கிறார். (37)

## 7. முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் :

புள்ளிருக்கு வேளூர் என்ற பாடல் பெற்ற தலம் இன்று வைத்தீசுவரன் கோயில் என்று வழங்கப்பெறுகிறது. இங்கு, சுவாமி வைத்தியநாதன். அம்பிகை தையல் நாயகி. முருகப் பெருமான் முத்துக்குமாரசுவாமி என்ற பெயரில் மிக்க சிறப்புடையவராய் இன்றும் கொண்டாடப்பெறுகிறார். இங்குக் கார்த்திகை தோறும் முருகனுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் கூடுகிற ஆராதனை நடைபெறுகிறது. பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்கள் முருகன் மீதும், அம்பிகை மீதும் அதிகமாகப் பாடப்பட்டுள்ளன என்று முன்பு சொல்லப் பட்டது. அந்த இரண்டு வகையையும் சுவாமிகள் பாடியிருக் கிறார். அம்மைபிள்ளைத்தமிழ் முன்பு மதுரையில் பாடிய மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ். இப்போது முருகன்

பிள்ளைத் தமிழ். தலப்பெயராகிய புள்—இருக்கு—வேளூர் என்பதில் வேள் என்பது முருகனைக் குறிக்கும்; புள் இங்கு வழிபட்ட புள்ளாகிய கழுகு. இருக்கு—இருக்குவேதம்.

சம்பிரதாயத்தையொட்டி இந்த நூலில் தனியாக விநாயகர் காப்புச் செய்யுள் ஒன்றும், பத்துப் பருவங்களுக்கு நூறு பாடல்களும் பாடியிருக்கிறார். இங்கு, சுவாமிகள் இருந்த காலத்தின் சிறப்புக்கள் யாவும் இப்பிரபந்தத்தில் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். சுவாமியை இவர் தீராத வினைதீர்த்த தம்பிரான் என்கிறார். அப்பர் தேவாரத்தில் இது முன்னமே, ''மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீரா நோய் தீர்த்தருள வல்லான்'' என்று திருத்தாண்டகத்தில் சொல்லப்பட்டது. இங்குள்ள தீர்த்தம் சித்தாமிர்த தீர்த்தம், விபூதி குண்டத்திலெழுந்த வெண் சாந்து எடுத்து உண்ணல், சந்தான தீர்த்தத்திலிருந்து மண்ணெடுத்து உண்ணல் ஆகிய சிறப்புக்களைக் குறிப் பிடுகிறார். இந்த மண் இன்றும் மருந்தாகவே பயன் படுத்தப் பெறுகிறது. உண்ட அனேகர் பல்வகை உடற்பிணி கள் தீர்ந்த வரலாறுகள் பல. சுவாமிகள் திருச்செந்தூர் முருகப் பெருமான் அருள் பெற்றவர். ஆதலால் இங்கு இவருக்குள்ள ஈடுபாட்டை அதிகம் விவரிக்க வேண்டிய தில்லை. தவிர இங்கு வந்து தம்மீது பாடும்படி முருகன் கட்டளையிட்டதாக ஒரு வரலாறு சொல்லவும் காண் கிறோம். சொல் நயங்கள் சொல்லி எல்லை காண முடியாது. முத்துக்குமாரனைப் புரக்கும்படி திருமாலை அழைப்பவர் முன்போல் 'பச்சைப் பசுங்கொண்டல்' என்கிறார், பின்னர் வைத்தியநாதர், தையல்நாயகி, கற்பகவிநாயகர் ஒரிடத்துத் தலைச் சங்கம் வைத்து ஆர்த்திய கண்ணன் என்று சொல்லுவது சிறப்புடையது. செங்கீரைப் பருவத்தில் மகுட மாக வருகின்ற தொடர் மிகவும் சிறப்புடையது.

திருக்கோல முடனொரு மணக்கோல மானவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடியருளே.

செங்கீரைப் பருவத்தில் வரும் மற்றொரு தொடர் நயத்துக்குப் பிரசித்தி பெற்றது.

கூனேறு மதிநுதல் தெய்வக் குறப்பெண்
குறிப்பறிந்த தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவள்தொண்டை வாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை யாடியருளே.

சந்தத்தை மாற்றி வருகின்ற இதற்கு அடுத்த பாடல் குழந்தை செங்கீரை ஆடும்போது அதன் திருமேனியில் உறுப்புக்களும் அணிகளும் எவ்வாறு ஆடுகின்றன என்பதை நன்கு வரிசைப்படுத்திக் கூறுகிறது.

செம்பொ னடிச்சிறு கிண்கிணி யோடு
சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடுமொளி
திகழரை வடமாடப்
பைம்பொன் அசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காதும் அசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியு முச்சிக்
கதிர்முத் தொடுமாட

அம்பவ ழத்திரு மேனியு மாடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை.

பாடல்கள் அத்தனையும் பருவத்துக்குரிய வயதுக்குப் பொருத்தமானவை. இங்கு ஒரு பருவத்தில் மகுடமாகச் சங்கத்தமிழின் தலைமைப் புலவா என்கிறார். சுவாமிக்கு எந்த நேரத்திலும் தமிழைப் போற்றுவதே இயல்பாக உள்ளது. சப்பாணிப் பருவத்தில் கொழிதமிழ் வேதபுரிக் குமரேசர் என்பர், பின்னர் முத்தப் பருவத்தில் 'மும்மைத் தமிழ் தேர் கந்தபுரி முருகா' என்பார். தம்பெயரையே அமைத்துப் இப்பருவத்தில் 'குமரகுருபரன் வருகவே' என்கிறார். அம்புலிப் பருவத்தில் அம்புலிக்குள்ள நோய்க ளெல்லாம் இங்குள்ள வெண்சாந்து, மண், தீர்த்தம் இவற்றால் போகுமென்று இவர் அம்புலியை அழைக்கும் போது முருகனிடம் விளையாடுவதால் அவனுக்கு லாபம் என்று குறிப்பிடுவது சுவையாக உள்ளது.

கயரோக முடன்முயற் கறையுந் துடைத்திடக்
கருதிடுதி யேல்எம் பிரான்
திருமுன்னர் அள்ளியிடு வெண்சாந்து மற்றைத்
திருச்சாந்தும் நிற்க வற்றாச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குறுந்
திவலையொன் றேயமை யுமால்.

இசையரசு தண்டபாணிதேசிகர் இப்பிள்ளைத் தமிழில் ஒரு பாடலை இசைத்தட்டில் பதிவுசெய்து கொடுத்தமை யால் பின்வரும் பாடல் தமிழ்நாடெங்கும் பிரசித்தமாய் விளங்கிவருகிறது.

ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொரு தெய்வ முண்டெனவெடுத்து
உரையா லுணர்த்துவதை ஒழியவெவ ரெவர் கட் கும்
ஊன்கண் ணுளக்கண்ணதாம்.

விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை யென்று ணர்தியால்
பொழியாத புயல்தங்கு புவனமுந் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகும் மண்ணுலகும் எவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்கு மற்ற
அழியாத வீடுந் தரக்கடவன் இவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே.

வா என்பதை வாவே என்று இவர் அமைப்பது புதுச் சொல்லாட்சி.

சிறுபறைப் பருவத்தில் முருகனைத் தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ என்றும், முத்தமிழ் பயில் பகுதிப்பதிமுருகன் என்றும் பாடுகிறார். தென்கலை, வட கலை இரண்டையுமே இவர் போற்றுகிறார். ‘வடகலை தென்கலையொடு பயிலும் கவிவாணர்கள் ஓடிவா’ என்பது இப்பருவத்தின் எட்டாம் பாடல்தொடர். இறுதிப் பாடலில் தீராதவினைதீர்த்த தம்பிரான் எந்தம்பிரான் என்று மீண்டும் சொல்வது காணத்தக்கது. வழக்கமாகச் சந்தத்தை ஒரே பருவத்தில் இருமுறை மும்முறை மாற்றுகிற இவர் சிறு தேர்ப் பருவத்தில் மாற்றவில்லை. முன்பும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழின் இறுதிப் பருவத்திலும் இவ்வாறு மாற்றாதது கொண்டு, இவ்வாறு இறுதிப் பருவத்தில் யாப்பையும் சந்தத்தையும் மாற்றாது பாடுதல் ஒரு கவி மரபாக இருக்கலாம் என்று கருதத்தோன்றுகிறது.

இப்பிரபந்தம் பாடுவதற்கு முருகன் 'பொன்பூத்த குடுமி' என்று அடியெடுத்துக் கொடுத்தார் என்பது சுவாமிகள் வரலாற்றில் சொல்லப்பட்டது.

### 8. சிதம்பர மும்மணிக்கோவை :

மும்மணிக்கோவை என்பது நேரிசை யாசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை என்ற மூன்று வகைப் பாக்களால் மண்டலித்து அந்தாதியாக வருமாறு முப்பது பாடல்கள் பாடுகின்ற ஒரு பிரபந்தம். இந்த வகையில் சேரமான் பெருமாள் பாடிய திருவாரூர் மும்மணிக் கோவையும், பட்டினத்தார் பாடிய திருவிடைமருதூர், திருக்கழுமல மும்மணிக் கோவைகளும் மிக்க பிரசித்தி வாய்ந்த பழம் பிரபந்தங்கள். இவை மூன்றும் பதினோராம் திருமுறையில் அடங்கியுள்ளன. சுவாமிகள் சிதம்பர மும்மணிக்கோவை, பண்டார மும்மணிக்கோவை என்ற இரண்டு மும்மணிக்கோவைப் பிரபந்தங்கள் பாடியுள்ளார். இவை இரண்டும் சைவ சித்தாந்தக் கருத்துக்களின் கரு வூலமாக உள்ளன.

சிதம்பர மும்மணிக்கோவை கற்பக விநாயகர் காப்புச் செய்யுளாக ஒரு வெண்பாவும் பின்னர் முப்பது பாடல்களும் உடையது. சிதம்பரத்தலம் விராடபுருடனுக்கு இதயத் தானமாக உள்ளது. சுவாமிகள் இங்குக் கோயில் கொண்டுள்ள கோவிந்தராசப் பெருமாளையும் விலக்காமல் போற்றி யுள்ளார். மற்றும் பல்வேறு தலப்பெயர்கள், தீர்த்தச் சிறப்பு, தில்லை மூவாயிரவர், அம்பலங்கள், இறைவன் கூத்து ஆகியவற்றை விரிவாகச் சொல்கிறார். திருநடனக் கோலம் பிரணவ வடிவம். இதன் பொருள் ஐந்தொழிலை உணர்த்துவது. பதஞ்சலி வியாக்கிரபாதருக்காக ஆனந்தத் தாண்டவம் ஆடுவதையும், காளி பொருட்டாக ஊர்த்துவ தாண்டவம் ஆடுவதையும் உபமன்னியு முனிவருக்குப் பாற்

கடல் வரவழைத்ததையும் பாராட்டுகிறார். தூக்கிய திருவடியைக் குஞ்சித கமலம் என்று குறிப்பிடுகிறார்.

இதன் முதல்பாடலில் சைவ சம்பிரதாயப்படி நடராஜப் பெருமானுடைய திருவுருவம் ஐந்தொழிலை உணர்த்துவது என்பதைச் சொல்லுகிறார்; டமருகக் கரம் தோற்றம். அமைத்த கரம் காத்தல், உலகடங்கலும் மாற்றுவது (அழிப்பது) அக்கினி ஏந்திய கரம், மறைத்து ஊட்டுதல் ஊன்றிய பதம், பேரின்பம் கொடுப்பது குஞ்சித பதம்

பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பில் நானில வளாகமும்
ஏனைப் புவனமும் எண்ணீங் குயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே,
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையுங் காப்பதுன் அமைத்த பொற்கரமே,
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே,
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்துநின்று
ஊட்டுவ தாகும்நின் ஊன்றிய பதமே,
அடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பம்
கொடுப்பது முதல்வ,நின் குஞ்சித பதமே

அம்பிகை நடராஜப் பெருமான் திருநடனத்தைத் தரிசிப்பதற்கு ஒரு பொருள் கூறுகிறார். பச்சிளங்குழவி நோய்க்காக மருந்து உண்டால் அதன் பசுங்குடல் மருந்தின் காரம் தாங்காது. ஆகவே அதன் தாய் தான் அம்மருந்தை உண்டு அதன் சாரத்தைத் தன் முலைப்பாலின் வழியே குழந்தை பெறும்படி செய்து அதன் நோயைப் போக்கு கிறாள். இதுபோல அம்பிகை பெருமான் நடனத்தைத்

தான் தரிசித்து அதன் பயனை உயிர்கள் நுகர வைக்கிறாள். இவர் கூறும் சொற்கள் இன்று தமிழில் பழமொழி போல வழக்குப் பெற்றுள்ளன;

பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென
நோயுண் மருந்து தாய் உண்டாங்கு.

இல்லறம், துறவறம் என்ற இரண்டையுமே விரிவாகச் சொல்லுகிறார். பின் துறவறத்தின் கடினத் தன்மையையும் விளக்கமாகச் சொல்லுகிறார். இவை இரண்டும் உலகியல் வழக்கும், புலநெறி வழக்கும் என்று இருவகை வழக்கும் நிலை பெற்றவை என்று இவர் சொல்வது முழுமையாக மரபைத் தழுவி உள்ளது.

முத்தி பெறுவதில் உள்ள கஷ்டத்தைக் குறிப்பிடுகிறார். ஆரூர்ப்பிறத்தல் முத்தி. காசியில் இறத்தல் முத்தி. காசிக்குப் போவதிலுள்ள கஷ்டத்தைச் சொல்லுகிறார். இவை இரண்டும் நேர்ந்தால்தான். ஆனால் தில்லைக் கூத்த னுடைய கூத்தை ஒரு கால் நோக்கினாலும் பரகதி பெறுவான். தில்லை தரிசிக்க முத்தி என்பது பழமொழி. அன்றியும் பெருமானைத் தரிசித்தால், கொடியன் என்று அருளை மறுக்க மாட்டான். எப்படி என்றால் மருந்து உண்பவன் மனமகிழ்ந்து உண்ணினும், அருவருப்புற்று உண்ணினும் பலன் உண்டல்லவா? அதுபோல.

இமையஞ் சேர்ந்த காக்கையும், பொன்நிறம் பெறும் என்று எல்லோரும் பாடுவார்கள். அதுபோலச் சிவசந்நிதி அடைந்தபின் தகுதியற்ற தமக்கும், தகுதி மிக்க பிறருக்கும் என்ன வேற்றுமை காண முடியும் என்று கேட்கிறார்.

பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையும்
மன்னுமா லிமய வரைப்புறஞ் சேர்ந்துழி
இருதிறப் பறவைக்கும் ஒருநிற னல்லதை
நிறம்வேறு தெரிப்பதுண்டோ, இறைவ.

இவர் நடராஜப் பெருமானிடத்து ஒரு வரம் கேட்கிறார். தமக்கு உலக வாழ்க்கையில் மிகவும் கீழான அனுபவம் தந்து அதே சமயத்தில் மெய்த்தவக் குழாத்தோடு இருக்குமாறு உடல் நீங்களவும் செய்து ஒருகால் பிற்காலத்தில் வேறு வரம் தாம் மறந்து கேட்டாலும் அதைத் தராது இருக்கும் ஒரு வரமே வேண்டுகிறார். (பாடல் 8).

மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண
வரமொன் றிங்கெனக் கருளல் வேண்டும். அதுவே
பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத் திசைத்த ஒருதுணி யல்லது
பிறிதொன்று கிடையா தாக; வறுமனைக்
கடைப்புறத் திண்ணை யல்லது கிடக்கைக்கு
இடம்பிறி தில்லை யாக; கடும் பசிக்கு
உப்பின் றட்ட புறக்கையூண் அல்லது
மற்றோ ருண்டி வாய்விட் டரற்றினும்
ஈகுந ரில்லை யாக: நா ணாளும்
ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக; இத்திறம்
உடல்நீங் களவும் உதவி, கடவுள், நின்
பெரும்பத மன்றியான் பிறிதொன்று
இரந்தனன் வேண்டினும் ஈந்திடா ததுவே

'அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன். —அரங்கத்து அரவணைப் பள்ளியானே' என்று பெத்யாழ்வார் சொல்லும் வேண்டுகோள் இவ்விடத்து நினைக்கத்தகும்.

தாம் எப்படி வாத பித்த சிலேட்டுமம் என்பவற்றில் அதுவதுவாக மூழ்கியிருக்கும் இயல்பினன் என்பதைத் திட்டமாகக் கூறுகிறார்,

வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும்
ஐயுண் மதுரமும் அல்லன பிறவும்
நாச்சுவை யறிய நல்கின மேற்சென்
றதுவது வாகஅழுந்திப் புதிதுண்டு
கழிபெருங் காம மூழ்கி.

சுவாமிகள் எல்லாப்பொருள்களையுமே விடாது அடுக்கிச் சொல்வதில் மிக்க ஆற்றல் பெற்றவர். அம்பிகையைக் குறிப்பிடும்போது அவள் எண்ணில் பல்கோடிப் பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்தி என்று சொல்லுமிடத்து பிறப்புவகைகளையும் உயிர் வகைகளையும் அடுக்கிச் சொல்கிறார். (பாடல் 14),

முட்டையிற் கருவில் வித்தினில் வெயர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
நடப்பன கிடப்பன பறப்பன வாகக்
கண்ணகன் ஞாலத் தெண்ணில்பல் கோடிப்
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்தி —

சுவாமிகள் எல்லா இலக்கணங்களிலும் அணி, இலக்கணத்திலும் மிக்க வல்லவர் என்பதை அடுத்து இவர் பாடிய சிதம்பரச் செய்யுட் கோவையால் அறியலாம். இங்கு ஒரு பாடலில் (15) நடராஜரைக் கரும்பாகவும் அக்கரும்பை உண்ணுகின்ற பிடி அம்பிகையாகவும் வைத்து முற்று உருவகமாகப்பாடி யிருப்பது அறியத்தக்கது.

ஆட்டுகின்றோ ரின்றிமன்றுள் ஆடுமா னந்தத்தேன்
காட்டுகின்ற முக்கட் கரும்பொன்று—வேட்டதனை
உற்றுநெடு நாளாக உண்ணுமோர் மால்யானை
பெற்றதொரு கூந்தற் பிடி.

'நெய்தலொடு தழீஇய மருதவேலித் தெய்வப் புலியூர்' என்று இவர் பாடுவது, ஒரு பழங்காலத்தில் தில்லைக்கு மிக்க அருகிலேயே கடல் அமைந்திருந்தது என்பதற்குச் சான்றாகும்.

வியாசருக்கு வாதராயணர் என்ற ஒரு பெயர் சொல்வதுண்டு. எத்தனையோ வியாசர்கள் அவர்களுடைய செயல்கள் எத்தனையோ. அவர் இந்த வாதராயணர் என்ற நிலையில் பிரம்ம சூத்திரத்தைத் தொகுத்தார் என்பது தத்துவ வரலாறு. சுவாமிகள் வாதராயணர் திருமாலே பரம்பொருள் என்று சொல்லிக் காசியில் தூக்கிய கை அப்படியே நிற்கப் பெற்றார் என்ற வரலாற்றை வாதராயணர் என்ற பெயரில் சொல்லுகிறார். 'என்று நீ உளை மற்று அன்றே யான் உளேன் என்று (20) இவர் சொல்வது பின்னால்'என்று நீ அன்று நான் உன் அடிமை யல்லவோ' என்று பாடத் தாயுமானவருக்குத் தூண்டு கோலாய் இருந்திருக்கும் மாணிக்கவாசகர் திருக் கோவை யார் பாடினார் என்ற வரலாற்றை இவர் சுட்டுகிறார்.

ஒருவன் காணா தொளித்திருந் தோயை
வசைப் புத்தேள் மணிநாப் பந்திக்
கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்
பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்
ஐந்திணை யுறுப்பின் நாற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப் பனுவற்குப்
பொருளெனச் சுட்டிய ஒரு பெருஞ்செல்வ.

இதே பாடலில் தொடர்ந்து, சுந்தரமூர்த்தி திருத்தொண்டத் தொகை பாடியதைக் குறிப்பிடுகிறார். மற்றும் சில அடிகள்.

செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவாவெனப் படுமே

முதலான அடிகள் இவர் வாக்கில் பிறந்து பழமொழியாகி விட்டன.

பின்னர் ஒரு பாட்டில் பரவையார் வரலாற்றைக் கூறுகின்றார். அப்பால் ஆணவக் குடியெனும் சேரிப் பரத்தை.

அவர்க்குரிய தங்கையர் இருவர். குடிலை என்னும் மடவரல் ஒருத்தி, ஐவரைப் பெற்றனள். மோகினி என்பவள் மூவரைப் பெற்றனள். கலை எனப் பெயரிய கணிகை என்ற ஒருத்தி தானும் மூவரைப் பெற்றனள். மான் எனப்பட்ட மூலப் பிரகிருதி என் மூவராகிய ஆன்மதத்துவங்கள் 24 ஐப் பெற்றாள். என்ற இவற்றையெல்லாம் மிக்க சமற்காரமாக குடும்பத்தோடு இயைத்துச் சொல்கிறார்.

இவ்வாறு இந்த மும்மணிக் கோவை என்ற சிறு பிரபந்தத்தில் சைவசமயத்தின் சாரமாகக் கருதப்படும் எல்லாக் கருத்துக்களுமே ஆங்காங்கு மனத்தில் பதியக்கூடிய முறையில் சொல்லிக் கொண்டே வருவதைக் காண்கிறோம்.

## 9. சிதம்பரச் செய்யுட்கோவை

இவர் சிதம்பரச் செய்யுட்கோவை பாடிய நிலை அவர் வரலாற்றில் சொல்லப்பட்டது. சுவாமிகள் சைவ அன்பர்கள் விரும்பியபடி யாப்பிலக்கணத்தில் பல்வேறு யாப்புக்களுக்கும் உதாரணமாக நடராஜப் பெருமான் துதி அமைத்துப் பாடிய பாடல்கள். இதனுள் 84 பாடல்கள் உள்ளன. வெண்பா விகற்பம், வெண்பாஇனம், ஆசிரியப்பா விகற்பம், ஆசிரியப்பா இனம், கலிப்பா விகற்பம், கலிப்பா இனம், வஞ்சிப்பா, வஞ்சி இனம், மருட்பா என்ற பிரிவுகளில் பாடிய பாடல்கள் உள்ளன. இவ்வாறு இவர் இலக்கணத்துக்காகப் பாடிக் கொடுத்த பாடல்களிலும் மிகச் சிறந்த சைவசமய தத்துவப் பொருளும் அமையும்படி பாடியிருப்பது இவருடைய சிறப்பு. இவர் பாடிய பாடல்களில் அமைந்துள்ள யாப்பு நுட்பங்களை எடுத்துப் பிற்காலத்தார் விளக்கிச் சொல்லியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் இங்கு விரித்துரைக்க இடமில்லை. எனினும் சில பாடற்சுவை களை மட்டும் காட்டிக்கொண்டு போவோம்.

நீதிநெறி விளக்கத்தின் காப்புச் செய்யுளாகப் பாடிய இளமை செல்வம் யாக்கை ஆகிய மூன்றின் நிலையாமையைச் சுட்டும். 'நீரிற்குமிழி இளமை' என்ற பாடலை இங்கு ஓர் உதாரண வெண்பாவாக எடுத்து அமைத்திருக்கிறார். (பாடல் 4)

நல்ல கவிதைக்கு எளிமையே ஓர் அழகு. பாடலில் சிறப்பான பொருள் அமைந்திருப்பது வேறு. பாடல் வடிவமே கவிதை அழகைக் காட்ட வல்லது என்பது ஒரு சிறந்த கருத்து. அதைப் பின்வரும் பாடலில் நன்கு காணலாம்.

திருமுடியிற் கண்ணியும் மாலையும் பாம்பு
திருமார்பில் ஆரமும் பாம்பு—பெருமான்
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பொருப்புயத்திற் கங்கணமும் பாம்பு.

இப்பாடலில் பாம்பு பாம்பு என்று பலமுறை மடக்கி வருதலே இப்பாடலுக்கு ஒரு சிறப்பான கவிதை அழகைத் தரவல்லது. அப்பர்பாடிய 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே' என்ற கருத்தை உள்ளடக்கி வரத்தில் பிறப்பு ஒன்று அருள்க என்றும் ஒரு பாடலில் பாடுகிறார். அடுத்த பாடல் கண்கள், செவிகள், சென்னி, வாய் ஆகிய நான்கையும் வாழ்த்துவது. "வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்" என்று பெரியார் பாடியது போல இவர் நடராஜரைத் துதிக்கின்ற உலகத்தாரை வாழ்த்துவது போலத் தம்மையே வாழ்த்திக் கொள்கிறார் என்றும் கருதலாம்.

வாழி திருமன்றங் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழியவனை வணங்கும் முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய்.

ஒரு சொல் மூன்றுமுறை அடுக்கி வரலாம். அதுவே ஓர் இலக்கிய அழகு என்பது இலக்கணங்கள் சொல்வது. அந்த நிலையையும் கடந்து நான்கு அடுக்கிய தொடராக இவர் ஒரு விகற்பத்து இன்னிசைச் சிந்தியல் வெண்பாவில் அமைக்கிறார்.

**போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்**
**கூற்றங் குமைக்க வருமுன் நமரங்காள்**
**ஏற்றுவந்தான் பொற்றா ளிணை. (62)**

பின்வரும் ஆசிரியப்பா விகற்பம் காணத்தக்கது. இங்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றையும் குறிப்பிடுகிறார்.

**தீர்த்தமென்பது சிவகங் கையே**
**ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே**
**மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே.**

குமரகுருபரர் நகைச் சுவையோடு ஒரு கருத்தை எடுத்துக் காட்டுகிறார். இக்கருத்து எல்லோரும் நன்கு பயின்றிருக்கிறார்கள். இதன் கருத்தாவது அட்டமூர்த்தமாக வடிவு கொண்டிருக்கின்ற ஒருவன் ஒருத்தி என்ற உருவம் வேறு. இதை ஒருத்தன் என்று சொல்வதா, ஒருத்தி என்று சொல்வதா என்பது பற்றி இடர்ப்பாடு எழும் காலத்துத் தமிழில் இருவருக்கும் பொதுவாக ஒருவர் என்று ஓர் இயற்சொல் இப்போது இருக்கின்றது. இச்சொல் இல்லையென்றால் இந்தத் தன்மையை எவ்வாறு சொல்லிக் காட்டுவேன் என்று கேட்கிறார். (54)

**அருவருக்கு முலகவாழ் வடங்க நீத்தோர்க்கு**
**ஆனந்தப் பெருவாழ்வா மாடல் காட்ட**
**மருவருக்கன் மதிவளிவான் இயமானன் நீர்**
**மண்ணெனுமெண் வகையுறுப்பின் வடிவுகொண்ட**

ஒருவனுக்கு மொருத்திக்கு முருவொன் றாலவ்
வுருவவயி:தொருத்த னென்கோ வொருத்தி என்கோ
இருவருக்கு முரித்தாக வொருவ ரென்றோர்
இயற்சொலில் லவின்யான்மற்றென்சொல் கேனே.

நெடுங்காலத்துக்கு முன்னமேயே தமிழ் யாப்புக்களில் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் வழக்கு இழந்து போய்விட்டன. வெண்பாவும் ஆசிரியப்பாவும் மட்டுமே தொடர்வழக்காக உள்ளன. அதுபற்றி இவ்வாசிரியர் கலிப்பாவில் அதிகப் பாடல்களைத் தரவில்லை. மருட்பா என்றவொரு பகுதி பிற்காலத்தில் அகப்பொருள் இலக்கியத்துக்கு உரியதாகச் சொல்லப்படுகின்றமையால் அது வழக்கத்துக்கு வருகிறது. இவ்வாசிரியர் அதிலும் சில பாடல்கள் பாடியிருக்கிறார்.

கலிப்பாவின் விகற்பங்களும் இனங்களும் வஞ்சிப்பாவும் பிற்காலத்து யாப்பருங்கலம் போன்ற இலக்கண நூல்களில் தான் இலக்கணமும் இலக்கியமும் காணப்படுகின்றன. தமிழ் மொழியிலேயே கலித்தொகை ஒன்றுதான்கலிப்பாவால் முழு மையும்இயன்றநூல். வஞ்சிப்பாவால் இயன்றநூலே இல்லை. இது வரலாறு கூறும் நிலை. ஆதலின் சுவாமிகள் இவற்றில் அதிகக் கவனம் செலுத்தவில்லை என்பது பொருத்தமே.

சேக்கிழார் அடியார்கள் சிறப்பைக் கூறும்போது இரண்டு பாடல்களில் உள்ளம் உருகும் படியாக அச்சிறப்பைக் கூறுகிறார்.

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடுஞ்செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.

ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன்பணி அலதொன் றிலர்
ஈரஅன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ

இக்கருத்தை ஓதாது உணர்ந்த மெய்ஞ்ஞானியாகிய குமரகுருபரர் எடுத்து இந்நூலின் 50ஆம் பாடலில் மெய்ஞ்ஞானியர் ''குஞ்சித்த சேவடியைக் கும்பிடவே விரும்புவர் விண்ணுலகமும் வேண்டார்'' என்று அழகாகப் பின்வருமாறு கூறுகிறார்.

மெய்ப் பொருள் துணிவோர்

மின்பொலி பொன்புனை மன்றிலெம் முயிராம்
விமலன் குஞ்சித கமலங் கும்பிட
வேண்டுவர் வேண்டார் விண்மிசை யுலகே.

இந்நூல் இறுதிப்பாடலுக்கு முந்திய பாடலில் (83), ஞானசம்பந்தர் ஆணை நமதே என்றது போல, 'மன்றுடையான் வார் கழல் கண்டு உய்ம்மின், இது மெய்ம்மொழி, என் மொழி பிழையாதாகும்' என்று இவர் இறுதியாகச் சொல்வது சுவையாக உள்ளது.

வம்மின் நமரங்காண் மன்றுடையான் வார்கழல்கண்
டுய்ம்மி னுறுதி மறிதில்லை—மெய்ம்மொழிமற்
றென்மொழி பிழையா தாகும்
பின்வழி நுமக்குப் பெரும்பயன் தருமே.

இந்த நூற்பாடல்கள் யாப்பின் இலக்கணத்துக்கு எடுத்துக் காட்டாகச் செய்யப்பட்ட பாடல்கள் ஆனமையால், பாடல்தோறும், இறுதியில் பாடலின் யாப்பிலக்கணம் ஒரு தனிக்குறிப்பாகத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. சிலபாடல்களுக்குச் சொல்லப்பட்ட இலக்கணம் மிக்க விரிவாயும் உள்ளது. பாடல்கள் 1, 11, 12, 13, 21, 22, 23 முதலிய பாடல்கள் பார்க்க. குமரகுருபரர் பாடல்களை மட்டும் செய்து அளித்திருப்பின் பிற்காலத்தார் யாப்பிலக்கணக் குறிப்புக்களை எழுதிச் சேர்த்திருக்கிறார்களெனவறு தோன்றுகிறது.

இச்செய்யுட் கோவை பற்றிய ஒரு செவி வழிக்கதையை அனுபந்தத்தில் காணலாம்.

**10. பண்டார மும்மணிக்கோவை :**

இது சுவாமிகள் தம்முடைய குருநாதர் கட்டளைப் படி புள்ளிருக்கு வேளூர் பணிந்து பாடிப் பின்னர்த் தில்லை வழி பட்டுத் தங்கிப் பாடல்கள் பாடிய பிறகு தருமபுரம் மீண்ட போது குருநாதரால் விசேட தீட்சை, நிருவாண தீட்சை எல்லாம் அளிக்கப் பெற்றுப் பூரண உபதேசம் பெற்ற காலத்தில் பாடிய சிறு பிரபந்தமாகும். அக்காலத்தில் பண்டாரம் என்பது கருவூலம். ஞானபொக்கிஷம் என்று பொருளாகும். இது வேறிடத்தில் விளக்கி சொல்லப் பட்டது. சைவ ஆசாரியர் அனைவரும் பண்டாரம் என்றே அக்காலத் தில் வழங்கப் பெற்றனர். பிற்காலத்தில் தான் பண்டார சந்நிதி என்ற விசேடப் பெயர் வந்தது. குமர குருபரருக்கு உபதேசம் செய்தவர் தருமபுரம் ஆதீனத்தில் நான்காம் பட்டத்திலிருந்த மாசிலாமணி தேசிகர் என்பவர் தமக்கு அனுக்கிரகம் செய்தமையின் இந்த ஆசாரியர் மீது குமரகுரு பரர் இந்தப் பிரபந்தத்தை மிகவும் சிறப்பாகப் பாடியிருக் கிறார். இது சம்பிரதாயம் போல காப்பு வெண்பா ஒன்றும் 30 பாடல்களும் கொண்டது. நூலின் பின்னால் தனிப் பாடல்கள் சில உள்ளன. பாடல்கள் ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக்கலித்துறை என்ற வரிசையில் அமைந்தவை. இந்தப்பிரபந்தத்தின் பாடல்கள் மிகவும் சிறப்பாகச் சைவ சமயக் கருத்துக்களையும் ஆசாரியருடைய அருளையும் பேசு கின்றன. இதன் ஆசிரியப்பாக்கள் பொதுவாக அளவால் நீண்டவை.

இந்த நூல் முழுமையிலும், தம் குருவான மாசிலாமணி தருமைக் குருஞானசம்பந்தரே, அவருக்கும் குருவான கமலை ஞானப் பிரகாசரான ஞானசம்பந்தரே என்றும் பெய ரொற்றுமையால் காழி ஞானசம்பந்தரே என்றும் எங்குமே பாடுகிறார்.

இவருக்குத் தருமையும் ஆரூராகிய கமலையும் மதுரை யாகிய கூடலும் ஞானபீடங்கள். மாசிலாமணி தேசிகர் இம் மூன்றிடங்களிலும் ஞான அரசு வீற்றிருக்கிறார்.

**தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்**
**திருநகராக அரசு வீற்றிருக்கும்**
**மாசிலாமணித் தேசிக ராய.**

என்பார் (8). இவருக்குத் தருமை ஞானோபதேசம் பெற்ற இடம். கமலை என்பது இந்த ஞானோபதேசத்துக்கு மூலமாயிருந்த குருஞான சம்பந்தரின் ஆசாரியஸ்தானம். கூடல் என்பது, மதுரையில் வீற்றிருக்கின்ற சொக்கலிங்க மூர்த்தி குருஞான சம்பந்தர் வழியாக இம்மதுரை அனை வருக்கும் ஆன்மார்த்த மூர்த்தியாக அமைந்த காரணத்தால் அதையும் உடன் சேர்த்தே சொல்கிறார் என்று கருதத் தக்கது.

முதல் பாடலில் ஞானப்பிரகாசன் இன்னருள் பெற்ற மாசிலாமணி, ஞானசம்பந்தர் என்ற பெயர் உடைமை யினால் அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை. முதுமைக் கோலம் கொண்டு அமர்ந்தருள் பூண்டார் என்கிறார். அடுத்த ஆசிரியப்பாவில் தாம் பலவகை வழிப்படாது திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தத்து இறவா நிலைமை பெற்று இன்பமார்ந்து இருக்கும் பிறவா நன்னெறி வேண்டுகிறார். விண்ணுலக ஆட்சியும் தமக்கு வேண்டுவ தில்லை. குருவின் பரிகலம் மாந்திப் பவக் கடல் உழக்கும் நமலியாய்ப் பிறந்தாலும் போதும் என்கிறார்.

மூன்றாம் ஆசிரியப்பாவில் முழுமையாக சமயக் கருத்துக் களை அமைத்துப் பாடுகிறார். மிக்க சுவையோடு எல்லாச் செய்திகளையும் சொல்கிறார். உயர்ந்தோன் தலைவனாகி இழிந்தோட் புணரினும் இழிவெனப் படாது. இழிந்தவராகிய தாம் அவரைக் காதலித்தமையினால் தம்மைக் கைப் பிடித்தல் தகும் என்கிறார்.

நான்காம் ஆசிரியப்பா மிக்க சிறப்புடையது. எங்குமே இவர் பாடல்கள் உருவகமாய் இருக்கின்றன. இங்கு ஆசாரியர் உயிர்த்தொகுதி உய்வதற்காக குடிலை என்னும் தடவயல் நாப்பண் அருள் வித்திட்டுக் கருணை நீர் பாய்ச்சி வேதம் என்னும் ஒரு மரத்தை வளர்த்தார். அதில் பலயோர் பல பயன்கொண்டு வந்தார்கள். இலை தளிர், அரும்பு, மலர், பிஞ்சு, அருங்காய் என்று அவரவர் விருப்பம்போல் பெற்றார்கள். ஆனால் அவை அல்லாமல் சிலரே அதனிடத்துச் சைவ சித்தாந்தமாகிய கனி பிழிந்து தேனமுது பெற்றனர்.

பல்லுயிர்த் தொகுதியும் பயங்கொண் டுய்கெனக்
குடிலை யென்னுந் தடவயல் நாப்பண்
அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதவம் வளர்த்தனை
பாதவ மதனிற் படுபயன் பலவே, அவற்றுள்
இலைகொண் டுவந்தனர் பலரே, இலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே
அவ்வா றுறுப்ப் மிவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னியனாயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கியத்
தீம்புன லமு தமார்ந்தன னதனால்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே.

அடுத்த வெண்பாப்பாட்டில் மாசிலாமணியைச் சிந்தாமணி, சூளாமணி, முனிவர் சிகாமணி என்றெல்லாம் சொல்வது நமக்குப் பண்டைத் தமிழ்க் காப்பியங்களை நினைவூட்டுகிறது.

அடுத்த பாடலில் குருவே தமிழ்ப்பெரும் கூடல்-பிறப்பவர் என்பார். அடுத்துத் தொடர்ந்து பலதொடர் களைச் சிலேடையாகச் சொல்கிறார் ஆறாம் ஆசிரியப்பாவில் சந்திநிபாதத் தன்மையைக் கூறும்போது கதலித்துண்டில் தழற்கொளுவுவது என்று நூல்களின் கருத்தைத் தமக்கு ஏற்றிச் சொல்கிறார் இந்தக் கருத்து இந்த ஆசாரியர்களுடைய முன்னோராய் இருந்த சம்பந்த முனிவர் என்பவர் சிவானந்த மாலை என்ற தம் நூலுள் நாலுவகைச் சத்திநிபாதம் என்று விரித்துச் சொல்கின்ற செய்தி.

எட்டாம் பாடலில் திரிகரணங்கள் என்பதைச் சிலேடையில் வைத்துப் பேசுகிறார். மூன்று கரணங்கள், திரிகின்ற கரணங்கள் என்று எட்டாவது கட்டளைக் கலித்துறையில் கலம்பகத்தில் வருகின்ற சித்து என்ற உறுப்பை அமைத்துப் பாடுகிறார்.

பத்தாம் ஆசிரியப்பாவில் பரிசில் வேண்டினவர்க்கு வரிசையோடு அளிப்பது வள்ளியோர் கடன். உன் சந்நிதி பட்ட மாத்திரத்தில் எனக்குச் சத்திநிபாதம் எய்தியது. ஆதலால் சரியை, கிரியை, யோகம், போகம் என்றெல்லாம் கூறாமல் நாளை என்று நலிற்றாமல் உடனேயே அருள் செய்வாயாக என்று வேண்டுகிறார்.

ஒரு பாடலில் (29), ''வந்திருக்கின்ற என்னுடைய தன்மை எப்படியாயினும் கொடை மடம் பட்ட மன்னர்களின் இயல்பு போல நீ என்னுடைய தன்மைகளை நோக்காது சரியை கிரியை யோகத்தில் செலுத்தாமல், என்னுடைய பரிபாகத்தையும் நோக்காமல், நாளை என்றும்

சொல்லாமல், இப்போதே எனக்கு அருளுவாயாக என்று சொல்லுவது'' மிகவும் அருமையாக உள்ளது.

மாசிலாமணி ஞானசம் பந்த
எனையாட்கொள வந்தெய்தினை யாகலின்
முனியா தொன்றிது மொழிகுவன் கேண்மதி
கற்றன ராயினுங் கல்லா ராயினும்
அற்றனம் யாமென வடைந்தனர் தமையெனிற்
காலம் பாரார் கருத்தினை யளவார்
சீல நோக்கார் தீக்குணங் கொள்ளார்
பரிசிலர் வேண்டிய பரிசுமற் றெல்லாம்
வரிசையோ டளிப்பது வள்ளியோர் கடனே
நன்னெறிப் படரா நலமிலி யாயினும்
செந்நெறிப் படர்ந்தநின் சீர்புனைந் தேத்தலிற்
சத்திநி பாதநின் சந்நிதிப் பட்ட
இத்திறத் தெளிதினி லெய்திய தெனக்கே அதனாற்
சரியையிற் றாழ்க்கலை கிரியையிற் பணிக்கலை
யோகத் துய்க்கலை பாகமு நோக்கலை
நாளையின் றெனவொரு வேலையும் நவிற்றலை
ஈண்டெனக் கருளுதி யிறைவ
பூண்டுகொண் டிருப்பனின் பொன்னடித் துணையே.

இது அப்பருடைய சுவையான திருக்கடவூர் மயானப் பாசுரம் ஒன்றை நினைவூட்டுகிறது.

உன்னி வானவர் ஓதிய சிந்தையில்
கன்னல் தேன் கடவூரின் மயானத்தார்
தன்னை நோக்கித் தொழு தெழுவார்க்கெலாம்
பின்னை என்னார் பெருமானடிகளே.

சிவானுபவத்தைச் சொல்லப் புகுந்தவர் அதை அதாவது பேரின்ப உணர்ச்சியைச் சிற்றின்பம் போலத் தோற்றத் தக்க முறையில் சொற்றொடர்களை வைத்துப்

பாடுகிறார். முன்னமே ''தலைமகன் இழிந்தோட் புணரினும் இழிவெனப் படாதே'' என்றார். அதைத் தொடர்ந்து மேலும் சொல்லுகிறார்.

ஆதலின் யாமுனைக் காதலித் தனமாற்
காதலி னெமையருட் கைப்பிடித் தருளி
ஒருவரு முணராப் பரம வீட்டில்
இருளறை திறந்த பெருவெளி மண்டபத்
துயர்நா தாந்தத் திருமல ரமளியிற்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞானவா ரமுத பான ம தார்ந்து
கருவிகள் கழன்று பரவச மாகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து
பேரா வியற்கை பெற்றினி திருப்ப
ஆரா வின்பம் அளித்தரு ளெமக்கே.

இங்குச் சொல்லியுள்ளது மிகவும் சிறப்புடையது. ''ஒருவரும் உணரா'' என்றது சிவஞானம் கைவரப் பெறாதவர்கள் என்று பொருள் தரும். இருள் அறை என்றது சிற்றின்பத்துக்குத் தனியிடம் வேண்டும் என்ற குறிப்பு. இருள் என்பது ஆணவம், அமளி என்பது திருவருட் சக்தி. புளகம் மெய்போர்த்தல், சிவானந்த நுகர்ச்சியின் மெய்ப்பாடு, பேரா இயற்கை என்பது மற்றீண்டு வளரா நெறி என்ற பேரின்பநிலை.

நூல் முடிந்தபின் உள்ள மூன்று கட்டளைக் கலித் துறைப் பாடல்களில் முதல்பாடல் பலசருதி. இந்த மும் மணிக் கோவையை நித்தம் துதிக்க வல்லார் எடுத்த சனனத் திலேயே எய்தற்கரிய தாகிய பேரின்பம் அடைகுவர் என்று சொல்வது.

மூன்றாவது பாடல் தாம் இப்பாமாலை பாடிய செயலே சரியை. இதைத் தரிக்கும்படி இன்று சாற்றியதே மெய்க்கிரியை. மற்றுத் தம்முடைய தமிழைத் தெரிக்கின்ற போது அருள் செய்ததுவே சிவயோகம். மாசிலாமணி தமக்குப் பாலித்ததுவே ஞானம் என்று சொல்லுகின்றது.

இவர் இந்த மும்மணிக்கோவை முழுவதும் கள்ளப் புலங் கொண்டு உரைக்கவில்லை. மற்றுத் தம் உள்ளத்தில் அருள் நின்று உணர்த்த தம் நாவில் உறைந்த கலைமகள் மாசிலாமணி வண்புகழில் எள்ளத்தனை எடுத்து ஒரு நூலாக்கி இவ்வாறு இசைத்தாள் என்கிறார்.

### 11. காசிக் கலம்பகம்

இப்பிரபந்தம் சுவாமிகள் காசிக்குச் சென்ற போது விசுவநாதரை வணங்கிப் பாடிய பிரபந்தம் என்று சொல்லப் படுகின்றது. இவ்வாறு சொல்வதற்கு வேறு ஆதாரம் இல்லை. உண்மையில் இவர் காசி சென்றவுடன் அரசவை யில் வெற்றிபெறும் நோக்கமே குறிக்கோளாகக் கொண்டு சரசுவதியைப் பாடி அவள் அருள் பெற்று, அந்நாட்டு மொழியைக் கற்றுத்தேர்ந்து சகலகலாவல்லியின் அருளால் வல்லவராகி அரசவையில் நடந்த சமய வாதத்தில் வெற்றி கொண்டு, பிறகே விசுவநாதரை வணங்கி அவர் தாளில் இந்தப் பாமாலை என்ற இக்காசிக் கலம்பகத்தைச் சூட்டி இருப்பார் என்பது உண்மை வரலாறாய் இருக்கலாம். முன்னமே இவர் பாடிய கயிலைக் கலம்பகமும், மதுரைக் கலம்பகமும் தெய்வ வணக்கமாய்ச் சொல்லப்பட்டன. வழக்கம் போல் இது காப்பு வெண்பா ஒன்றும் 100 பாடல் களும் கொண்டது. காப்பு வெண்பா சுவையான பாடல்.

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே—மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடியளித்த
ஓரானை வந்தெ னுளத்து.

முதல் பாடலாகிய கலிப்பா மிகவும் சுவையான சமயக் கருத்துக்களைக் கொண்டது. சுவாமிகள் கலம்பகத்துக்குரிய எல்லா உறுப்புக்களையும் இந்நூலில் சொல்லவில்லை. புதிய உறுப்புக்களான பிச்சியார், கொற்றியார் போன்றன இங்கு வருகின்றவ. ஒரே உறுப்புக்குப் பல பாடல்களும்வருகின்றன. தவக்கோலம் பூண்ட பெண்களைச் சொல்லும் போது இவர் சைவம், வைணவம் என்று வேறுபாடில்லாது பிச்சியார், கொற்றியார் என்று இருவரையும் தனித்தனிப் பாடல்களில் குறிப்பிடுகிறார்.

ஒரு பாடலில் எல்லாம் காசியாகக் காணும் காட்சி பெறறால் அப்புறம் ''பேயோடு ஆடினும் ஆடப் பெறுதுமே'' என்கிறார். இது ஒரு மேலான கருத்து. சாதாரணமாக இன்று கூட எந்தத் தீர்த்தத்திலும் நீராடும் வைதிக மக்கள் அந்தத் தீர்த்தமே கங்கை என்று கருதி அதற்கான மந்திரத்தைச் சொல்லி முழுகப் பார்க்கிறோம். (பாடல் 17)

காணுங் காணும் நதிகளெல் லாம்புனற்
    கங்கை, யேஅங் குளதெய்வம் யாவையும்
தாணு எங்கள் அகிலேச ரே,மற்றைத்
    தலங்கள் யாவுந் தடமதிற் காசியே,
பூணு மாசைமற் றொன்றே: உடல்விடும்
    போது நன்மணி கர்ணிகைப் பூந்துறை
பேணு மாறு பெறவேண்டும்: அப்புறம்
    பேயோ டாடினும் ஆடப் பெறுதுமே.

புலவர்களுக்கு நிந்தாஸ்துதியாகப் பாடுவது மிகவும் விருப்பமானது. சுவாமிகளும் விசுவநாதரை நோக்கி

'இல்லாளே முப்பத்திரண்டறமும் செய் திருப்ப நீ ஏன் இரக்கின்றாய்' என்று கேட்கிறார்.

இல்லாளே முப்பத் திரண்டறமுஞ் செய்திருப்பச்
செல்லார் பொழிற்காசிச் செல்வனார்—மெல்லப்
பரக்கின்ற புண்ணீர் படுதலை கொண்டையம்
இரக்கின்ற வாறென்சொல் கேன்.

விசுவநாதரை இச்சந்தர்ப்பத்தில் செல்வனார் ஐயம் இரக்கின்றார் என்பது சிறப்பு.

காசியில் அகில உலகத்துக்கும் உணவு வழங்குகின்ற அம்பிகை அன்னபூரணி என்பதும் இங்கு நினைக்கத்தக்கது.

காசியில் இறக்க முத்தி என்பது பழமொழி அல்லவா? அதை ஒட்டிப் புராணங்களெல்லாம் ஒரு கருத்தைச் சொல்லும். காசியில் உயிர் துறப்போர்க்கு அம்பிகை உயிர் பிரியும் சமயம் அந்த வேதனை தீரத் தம் முன்றானையால் விசிறி, விசுவேசர் செவியில் தாரக மந்திரத்தை உபதேசிக்க, உயிரைக் கயிலைக்குச் செலுத்துவார்கள் என்பது மரபு. அதைச் சுவாமிகள் மிகவும் விளக்கமாக வருணிக்கிறார்.

கங்கை சூழ் கிடந்த காசி வாணா
ஐவளி பித்தெனு மவைதலை யெடுப்ப
மெய்விட் டைவருங் கைவிடு மேல்லையில்
மாமுதல் தடிந்த காமரு குழவியும்
பொழிமதங் கரையும் மழவிளங் களிறும்
மூண்டெழு மானம் பூண்டழுக் கறுப்ப
இடக்கையி னணைத்துநின் மடித்தலத் திருத்தி
உலகமோ ரேழும் பலமுறை பயந்தும்
முதிரா விளமுலை முற்றிழை மடந்தை
ஒண்டொடித் தடக்கையின் வீசு நுண்டுகில்
தோகையிற் பிறந்த நாகிளந் தென்றல்

மோகமுந் தளர்ச்சியுந் தாகமுந் தணிப்ப
மறைமுதற் பொருளின் நிறைசுவை யமுதினை
அஞ்செவி மடுத்துண வூட்டிநின்
குஞ்சித அடிக்கீழ்க் குடியிருத் துகவே.

மடக்கு முதலான சொல்லணிகள் யாவும் இவருக்கு எளிதாகப் பணி புரிவன. ஒரு பாடல்

வண்ண மேனி யரும்பு வனங்களே
வாசம் வாச மரும்பு வனங்களே
நண்ணு மாலய மாதவ ரங்கமே
ஞால மேழ்தரு மாதவ ரங்கமே
தண்ணென் மாலை தருமருக் கொன்றையே
தருவ ளையர் தருமருக் கொன்றையே
கண்ணி னிற்பர் மனத்திருக் கோயிலே.
காசியே யவர்க் கோர்திருக் கோயிலே.

ஒரு பாடலில் சிவபெருமான் முத்திச் சரக்கறையைக் கொள்ளையிடுங்கள் என்று சில பேருக்குத் திறந்து விட்டார். அனந்தகோடி பிள்ளைகள் மனைக் கிழத்திக்கு குடும்பம் பேணுக என்று இருநாழி கொடுத்து அதில் எண்-நான்கு அறமும் ஓம்புக என்றார். 'காசி ஆண்டகையார் பெருந்தகைமை அழகிது' என்கிறார். (42)

சுவையான பாடல்களில் ஒன்று பின்வருவது.

ஆனந்த வல்லியுடன் ஆனந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தா டருட்கடலை—ஆனந்தம்
கொள்ளத் திளைத்தாடுங் கூடாதேல் இப்பிறவி
வெள்ளத் திளைத்தாடு வீர்.

காசிக்கு ஆனந்தக் கானம் என்பது பெயர் ; அம்பிகைக்கு ஆனந்த வல்லி என்பது ஒரு திருநாமம்.

இவ்விடத்தில் ஒரு குறிப்புச் சொல்லத்தக்கது. சுவாமிகள் காசிக்கு வந்தபோது முகம்மதிய மன்னனுடைய சர்வ

சமய மகாநாடு நடந்து கொண்டிருந்தது. ஆதலால் இவர் அந்தச் சமயம் வேறு எதையும் சிந்திக்கவில்லை. தாம் மகாநாட்டுக்குச் சென்று அந்த நாட்டார் மொழியில் பேசித் தலைவனுக்கும் மக்களுக்கும் தம்முடைய சைவ சமயத் தத்துவங்களை எடுத்து உணர்த்த வேண்டும் என்ற எண்ணமே அவர் உள்ளத்தில் மேலோங்கியிருந்தது. ஆகவே இந்தச் சமயத்தில் பாடப்பட்ட நூல் சரசுவதியின் அனுக் கிரத்தை வேண்டுவதாகிய சகலகலாவல்லிமாலை. தேவியின் அருள் பெற்று இவர் மகாநாட்டில் சென்று தம் சமய தத்துவத்தை விளக்கிக் கூறி அனைவரையும் தம் வழிக்குக் கொண்டு வந்த பிறகே இவர் காசி விசுவநாதரையும் பிற தெய்வங்களையும் நினைத்துப் பார்த்து அங்குச் சென்று காசிக் கலம்பகம் பாடினார். இதுவே இயற்கையான நிகழ்ச்சி. முதலில்தோன்றியது சகலகலாவல்லிமாலை. பிறகு தோன்றியதே காசிக் கலம்பகம். ஆனால் வரலாறு சொன்னோர் அனைவரும் காசிக்கலம்பகத்தை முதலில் சொல்லிப் பின்னர்ச் சகலகலாவல்லி மாலையைச் சொல்லி யிருக்கிறார்கள். ஆதலின் யாமும் இவர்கள் நெறிப்படியே இங்கு வரலாற்றைச் சொல்லியிருக்கிறோம்.

## 12. சகலகலாவல்லி மாலை

சகலகலாவல்லி—சரசுவதி. அவள் மீது பாடப்பட்ட பத்துப் பாடல்கள் கொண்ட சிறு தோத்திர நூல் இப்பெயர் பெறுகிறது. காசிக்குச் சென்று அங்குள்ள முகம்மதிய மன்னன் ஒரு சர்வமத மகாநாடு கூட்டியிருந்தபோது அதில் அந்நாட்டுமொழியில் தம் சைவ சமய விளக்கத்தை விரிவுரை யாற்றி அனைவரையும் தம் வசப்படுத்தும் நோக்கத்தோடு சுவாமிகள் எல்லா மொழிக்கும் தெய்வமாகிய சரசுவதியை இந்த நூலால் துதித்து தேவியின் அருள் பெற்று அவ் வண்ணமே இந்தச் சமய மகாநாட்டில் பேசி மன்னனைத் தம் வசப்படுத்தினார் என்பது வரலாறு. இவ்வரலாற்று

உண்மைக்குத் காசியில் இன்று வரை ஓங்கு நிற்கின்ற சுவாமி களின் பெயரைத் தாங்கிய காசி குமாரசுவாமி மடமே சான்று பகரும். இந்தப் பத்துப் பாடல்களிலும் சுவாமிகள் கேட்டோரெல்லாம் தம்பாடலில் ஈடுபட்டுத் தமக்குப் பணியைச் செய்யும் படியான கவிதைத் திறமையை அருள வேண்டும் என்று வேண்டுகிறார்.

சிலகாலத்துக்கு முன் தமிழ்நாட்டு ஆரம்பப் பள்ளிக் கூடங்களில் இப்பாடல்களைச் சிறுவர்கள் மனப்பாடம் செய்வது வழக்கமாயிருந்தது. இதைக் சொல்லிச் சரசுவதியைத் துதித்தால் பிள்ளைகள் கல்வியில் மேம்படுவார் கள் என்ற நம்பிக்கை இருந்தது. ஓரளவு இச்சிறுநூல் கந்தர் கலிவெண்பாவையும்விட அதிகமான பிரசித்தி பெற்றிருந்தது என்று கருதலாம்.

சுவாமிகள் முதன் முதல் பாடிய கந்தர் கலி வெண்பாவின் இறுதியில் ஆசு முதல் நாற்கவியும், அட்டா வதானமும், சீர் பேசும் இயல் பல்காப்பியத் தொகையும், ஓசை எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப்புலமை பாலிக்க வேண்டும்'' என்று வேண்டினார். அவர் பாடிய இறுதி நூல் என்று கருதப்படுகின்ற இந்தச் சகலகலாவல்லி மாலையிலும் அவ்வேண்டுகோளைப் பல வகையாகச் சொல்லுகிறார். அத்தனையும் இங்கு கை கூடிய நிலை.

முதல்பாடலில் தன் உள்ளத்தில் அவள் வந்து தங்க வேண்டும் என்ற வேண்டுகோள். பின் பொருட்சுவை.

---

1. தமிழ் நாட்டு அரசு சமீப காலத்தில் தானே பாடப் புத்தகம் வெளியிடும் தொழிலை மேற்கொண்ட போது, தெய்வத் தோத்திரப் பாடல்களைத் தமிழ்ப் பாடநூலை விட்டு நீக்கி அரசியல் தலைவர்களைத் துதிபாடும் பாடல்கள் சேர்த்திருக்கிற பரிதாபத் தைக் காண்கிறோம்.

சொற்சுவை பொருந்திய நாற்கவியும் பாடும் பணியில் பணித்தருள்வாய் என்பது. பின் 'செந்தமிழ்த் தெள் அமுதார்ந்து உன் அருட்கடலில் குளிக்கும்படி செய்வாய்' என்பது. இங்குச் சரசுவதியைச் சொல்லும் போது தெள்ளித் தெளிக்கும் பனுவல் புலவோர் கவிமழை சிந்தக் கண்டு களிக்கும் கலாப மயிலே என்று சரசுவதியை விளிக்கிறார். அடுத்த பாடலில் வேண்டுகோளும் அம்மையின் வருணனை யும் சிறப்பானவை.

தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த
கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்
வாய்வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந்
தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே,
சகல கலாவல்லியே.

அடுத்த பாடல் மீண்டும் தம் நெஞ்சத்தில் அவளை இருக்கும்படி வேண்டுதல். அடுத்தது பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொற் பனுவலும் யாம் எண்ணும் பொழுது எளி தெய்த நல்காய் என்பது. அடுத்த இரண்டு பாடல்களும் இதே கருத்துக்கள். ''பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற் கூட்டு சொல்விற் பனமும் அவதான முங்கவி சொல்லவல்ல நல்வித்தை யுந்தந்து அடிமை கொள்வாய்.'' அடுத்த பாடல் ''சொற்கும் பொருட்கும் உயிராம் மெய்ஞ்ஞானத்தின் தோற்றம் என்ன நிற்கும் நின்னை நினைக்க வல்லவர் யார்?'' என்பது.

கடைசிப் பாடல் சுவாமிகள் இப்போது போகின்ற அரசவையை மனத்தில் எண்ணி மன்னரெல்லாம் தமக்குப் பணிவாய் இருக்கவேண்டுமென்று வேண்டுவது பொருத்த மாய் உள்ளது. அது பற்றியே சரசுவதியைக் கண் கண்ட தெய்வம் என்கிறார்.

மண்கண்ட வெண்குடைக் கீழாக
 மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய்
 வாய், படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
 டேனும் விளம்பிலுன் போற்
கண்கண்ட தெய்வ முளதோ
 சகல கலா வல்லியே.

இவ்வாறு பாடிய சுவாமிகளுக்குச் சகலகலா வல்லி அருள் செய்து அவ்வருளால் சுவாமிகள் பேசிய சைவ சமயச் சிறப்பை மன்னன் நன்குணர்ந்து அவர் கேட்டவற்றை யெல்லாம் அவருக்கு அளித்தான் என்று கண் கூடாகக் கண் முன்னேயும் குமாரசாமி மடம் வடிவத்தில் காசியில் கேதாரக் கட்டத்தருகே பார்க்கிறோம்.

இது வரை குமரகுருபரர் நூல்கள் என்று அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட பிரபந்தங்களை ஒருவாறு ஆராய்ந்தோம். வேறு பிரபந்தங்கள் அவர் பேரில் இன்று அச்சில் உள்ளன. அவை அவருடைய நூல்கள் என்று கருதப் பெறாவிட்டாலும் கூட இந்த வரலாற்றின் முழுமைக்காக அவற்றைக் குறித்தும் இங்கு சில சொற்கள் சொல்கிறோம்.

## மற்றப் பிரபந்தங்கள்

சுவாமிகள் பாடிய நூல்கள் 12 என்றும், அவற்றுள் இரண்டாவது பிரபந்தமாகிய கயிலைக் கலம்பகம் கிடைக்க வில்லை என்றும் சொல்லி மற்ற 11 பிரபந்தங்களைப் பற்றிய ஆராய்ச்சிக்குறிப்புகளை மேலே கொடுத்திருக்கிறோம்.

காசித் துண்டி விநாயகர் பதிகம் சுவாமிகள் பாடினார் என்று சிலர் நம்புகிறார்கள். அப்படி ஒரு பிரபந்தம் அவர் பாடவில்லை என்றும் அப்படி ஒரு நூல் இல்லை என்றும் பின்னால் முதல் குறிப்பாகத் தந்திருக்கிறோம்.

மேலும் மதுரையில் சுவாமிகள் மீனாட்சி அம்மையின் கருணைக்குப் பாத்திரமான சமயத்தில் அம்மை மீது இரட்டை மணி மாலை ஒன்றும் குறம் என்ற ஒரு பிரபந்த மும் பாடினார் என்பது பலருடைய கருத்து. அது போலவே இவர் குருவின் ஆணைப்படி சிதம்பரத்தில் போய்த் தங்கி யிருந்த காலத்தில் சிதம்பர மும்மணிக்கோவையும் சிதம்பரச் செய்யுட் கோவையும் பாடியதோடு கூட அம்பிகை மீது தில்லைச் சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை என்ற ஒரு பிரபந்தமும் சுவாமிகள் பாடினார் என்று இவர்கள் கருது கிறார்கள். இந்த மூன்று நூல்களும் கிடைத்து அச்சிடப்பட்டு வழக்கில் உள்ளன. பிரபந்தத்திரட்டில் சேர்த்தே அச்சிடப் படுகின்றன. இவை பற்றிய ஒரு குறிப்பும் பின்னே உள்ளது.

### துண்டி விநாயகர் பதிகம்

இப்படி ஒரு பதிகம் கிடைக்கவில்லை. இது குமரகுருபரர் நூல்களுக்கு அமைந்த சிறப்புப்பாயிரத்தில் சொல்லப்பட வில்லை. ஐயர் அவர்களும் இப்படி ஒரு பதிகத்தைக் காட்ட வில்லை. மகாவித்துவான் அவர்கள், இப்படி ஒன்று சுவாமிகள் பாடியதாகச் சொல்லுகின்ற படியால் அவர் இப்பதிகம் பாடினார் என்ற வழக்கு எழுந்திருக்கிறது. மகாவித்துவான் உண்மைச் சைவ மரபுப்படி, எதையும் விநாயகரையே வணங்கித் தொடங்க வேண்டும் என்ற நினைப்பில் ஒரு விநாயகர் பதிகத்தைப் படைத்துக் கொண்டி ருக்கிறார். இது உண்மையன்று என்பது பிள்ளையவர்கள் மாணாக்கரும் பெரும் பண்டிதருமான ஐயரவர்கள் கருத்து. அடிகன் பாடிய துண்டி விநாயகர் பதிகம் பெரிய விருத்தங் களையுடையது. அதன்கண் வடமொழிக் கலப்பு அதிகமாகக் காணப்படுகின்றது. என்று கா. சுப்பிரமணிய பிள்ளை குறிப்பிட்டிருப்பதற்கு ஆதாரம் விளங்கவில்லை. இதுவும் கற்பனையே,

**மற்றப்பிரபந்தங்கள்**

மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை.

மதுரை மீனாட்சியம்மை குறம்

தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை,

இந்த மூன்றும் சுவாமிகள் பாடிய பிரபந்தங்கள் என்ற வரிசையில் சிலரால் முன்னமே அச்சிடப் பட்டுள்ளன. பலருக்கு அபிமானம் காரணமாக இவற்றினிடத்தில் ஈடுபாடு உண்டு. ஆதலால் இவற்றை விட்டுவிட விரும்பாமல் இவை பற்றிய சில குறிப்புக்களைப் பின்னே தருகிறோம்.

**மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை**

தமிழ்மொழியில் முதல்முதல் 5 ஆம் நூற்றாண்டில் காரைக்காலம்மையார் இரட்டை மணிமாலை பாடினார். அதன் பிறகு குமரகுருபரர் காலம் வரையில் எழுந்துள்ள இரட்டை மணி மாலைப் பிரபந்தங்களுக்குக் கணக்கில்லை. இவருடைய பிரபந்தமும் சம்பிரதாயப்படி வெண்பா, கலித்துறை என்று மாறிமாறி இருபது பாடல்களைக் கொண்டு அந்தாதியாக அமைந்துள்ளது. "என்னைப் பாடச் செய்து கேட்பது இவருக்கு ஒரு திருவிளையாட்டு" என்ற பாடல் சுவை உடையது.

> கடம்பவன வல்லி செல்வக் கர்ப்பூர வல்லி
> மடந்தை யபிடேக வல்லி—நெடுந்தகையை
> ஆட்டுவிப்பா ளாடலிவட் காடல்வே றில்லையெமைப்
> பாட்டுவிப்ப துங்கேட் பதும்.

இப்பாடலில் வல்லி வல்லி என்று பலமுறை சொல்லுவது போல அடுத்த பாடலிலும் காணலாம். இந்தத் தன்மை குமரகுருபரர் நூல்களிலும் காணப்படும். என்னுடைய நெஞ்சமாகிய இல்லம் இருள் மூடிக்கிடக்கிறது. நீ இதில் விளக்கேற்றி வைத்தால் போதும் என்று தொனியால் அகத்திருள் நீக்கி ஞானஒளி தருவாயாக என்று கேட்பதற்கு வேறுபொருள் காட்டச் செய்கிறார்,

தருமே கடம்பவனத் தாயேநின் சிற்றி
லகமேயென் னெஞ்சகம தானால் மகிழ்நரொடும்
வாழா நின் றாயிரம் மனையிருள்மூ டிக்கிடப்ப
தேழாய், விளக்கிட் டிரு.

இந்த நூற்பாடல்கள் யாவுமே சுவையான பாடல்களே. சுவைக்குப் பின்வரும் பாடலைக் காட்டலாம். இறைவியினுடைய திருவடி உண்டு, அன்பு இல்லை என்பதைப் பூ உண்டு நாரில்லை என்று தொனிக்கும்படி பாடுகிறார். (நார்—அன்பு.)

நாவுண்டு, நெஞ்சுண்டு, நற்றமி ழுண்டு நயந்தசில
பாவுண் டினங்கள் பலவுமுண் டே, பங்கிற் கொண்டிருந்தோர்
தேவுண் டுவக்குங் கடம்பா டவிப்பசுந் தேனின் பைந்தாட்
பூவுண்டு, நாரொன் றிலையாந் தொடுத்துப் புனைவதற்கே.

மீனாட்சியம்மை குறம்

குறம் என்பது கலம்பகத்தின் உறுப்புக்களில் ஒன்றாக வருவது. அது ஒரே பாடல். தலைவனிடத்துக் காதல் கொண்ட தலைவியின்பால் ஒரு குறத்தி தோன்றி, தலைவன் வந்து அவளுக்கு அருள் செய்வான் என்று குறிசொல்லிப் பரிசில் பெற்றுப் போதலைக் கூறும் உறுப்பு. இந்தக் கருத்தை அதாவது பிற்காலக் குறவஞ்சியின் மூன்று பாகங்களில் ஒரு பாகமாகிய குறம் என்ற இடைப்பகுதியைமட்டும் 51 பாடல் கொண்ட விரிந்த நூலாக இங்கு ஆசிரியர் பாடியிருக்கிறார். இதுவே தமிழ் மொழியில் முதன் முதலில் தோன்றிய குறம் என்ற தனிப்பிரபந்தம். குறம் என்ற பிரபந்தங்கள் மிகவும் குறைவு. பிற்காலத்தில் அடுத்த நூற்றாண்டு முதல், இந்தக் குறம் என்ற நூல் அமைப்பில் முன்னால் ஓர் அங்கம் பின்னால் ஓர் அங்கம் சேர்த்து, குறவஞ்சி என்ற பெயரில் எண்ணற்ற பிரபந்தங்கள் செய்யப் பெற்றுள்ளன. இவற்றில் இசையும் ஆட்டமும் முக்கிய இடம் வகிக்கும். இதில் முதல்

அங்கமானது தலைவன் உலாவருதற் சிறப்பு. இரண்டாம் அங்கம் இங்குச் சொல்லப்படுகின்ற குறம். மூன்றாம் அங்கம் குறவன் குறத்தியைத் தேடி வந்து இங்கு அவளைக் கண்டு இருவருமாகத் தங்கள் குடிசைநோக்கிச் செல்லுதல். இந்தக் குறம் என்ற பிரபந்தத்தில் ஒரு குறத்தி பொதியமலையி லிருந்து வந்து பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சியம் மைக்குக் குறி சொல்லுகிறாள். தலைவர் சொக்கலிங்கப் பெருமான். பலவகைக் குறிகளையும் பார்த்து அம்பிகைக்கு மனம் தேறுமாறு இவள் குறியுரைக்கிறாள். வழக்கம் போல் தனது மலைச் சிறப்பு குலச் சிறப்பு முதலியன சொல்லி கஞ்சி வார்க்குமாறு கேட்டல், தலைவி கையைப் பார்த்து கையின் சிறப்புக்கூறுதல், தன் குறி தப்பாது எனல் என்பது பொருள். இறுதியில் சொக்கருடன் அரசிருக்கும் அங்கயற் கண் ஆரமுதைப் பாடுவனே' எனக் குறத்தி அம்பிகையைப் பாடி முடித்தல் சொல்லப்படும். 21 ஆம் பாடலில் பாதிப் பாட்டில் அடை மொழியில்லாமல் பாண்டித்தலங்கள் பதினான்கையும் சொல்லுகிறாள் :

கூடல்புன வாயில் கொடுங் குன்றுபரங் குன்று
குற்றாலம் ஆப்பனூர் பூவணம் நெல்வேலி
ஏடகம் ஆடானைதிருக் கானப் பேர் சுழியல்
இராமேசந் திருப்புத்தூர் இவைமுதலாந் தலங்கள்
நாடியெங்கள் அங்கயற் கண் ணாண்ட தமிழ்ப்பாண்டி
நன்னாடும் பிறநாடு மென்னாட தாகக்
காடுமலை யுந்திரிந்து குறிசொல்லிக் காலங்
கழித்தேனென் குறவனுக்குக் கஞ்சிவாரா தம்மே.

ஒருகால் இந்தப் பாடலை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பார்த்து குமரகுருபரசுவாமிகள் பாண்டி 14 தலங்களும் நெல்வேலி உவந்து போற்றி இராமேச்சுரம் தாழ்ந்து போற்றி என்று வரிசையாகப் போற்றினார் என்று மிக விரிவாகப் பாடத் தோன்றியது போலும். இந்த நூலின்

பாடல்கள் பாட இசைக்கு ஏற்றமாதிரியாகவே செய்யப் பட்டுள்ளன. இதன் பாடல்கள் யாவும் பிற்காலத்தில் சிறந்த குறவஞ்சியாகிய குற்றாலக் குறவஞ்சி பாடிய திரிகூட ராசப்பக் கவிராயருக்கு வழி காட்டியிருக்கின்றன என்று சொல்லலாம். இந்த நூல் பாடப் பெற்ற காலத்தில் அல்லி அரசாணி மாலை என்ற நூல் ஒரு நாடோடிப் பாடல் போலப் பாமரமக்களால் நன்கு பயின்று பாடப்பட்டு வந்திருக்கிறது. அதில் அல்லிக்கு அருச்சுனனைப் பற்றிக் குறி சொல்லும் பகுதி விரிவாக அமைந்துள்ளது. ஒரு கால் இந்த நூலாசிரியர் அந்த மாலையையும் கேட்டிருக்கக் கூடும்.

இன்று நம்மிடையே அதிகம் பிரசாரம் பெற்றிருப்பது மேலகரம் திரிகூட ராசப்பக் கவிராயர் பாடிய திருக்குற்றாலக் குறவஞ்சி மிகவும் பிரசித்தமாய் உள்ளது. காரணம் அதனுடைய மொழி நடையும் பொருள் நடையும். ஆனால் அது மூன்று அங்கங்களைக் கொண்ட குறவஞ்சியாகும். அது கூட முன்னால் தோன்றியிருந்த மதுரை மீனாட்சி அம்மை குறத்தைப் பல பகுதிகளில் அடியொற்றிப் பாடியிருக்கிறது என்று ஊன்றிப் பார்த்தால் தெரியும். எடுத்துக் காட்டாக அதிகம் பிரசித்தி பெற்றிருக்கிற

புழுகாலே தரை மெழுகு பிள்ளை யார்வை
பொற்கோல மிட்டுநிறை நாழி வையாய்

திங்கண்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குபுயல் சூழுமலை தமிழ் முனிவன் வாழுமலை
அங்கயற்க ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதிய மலை யென் மலையே:

என்ற வரிகளை எடுத்துக்காட்டாகச் சொல்லலாம்.

கிழங்கு கிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம் என்பது மிகவும் சிறப்பான குற்றாலக் குறவஞ்சிப் பாடல்.

நன்கு தெரிந்தது. அந்தப் பாடல் பின்னே காட்டுகின்ற மீனாட்சி அம்மை குறத்தின் பாடலைத் தழுவியது என்பது நன்கு புலப்படும்.

கொழுங் கொடியின் விழுந்த வள்ளிக்
கிழங்கு கல்லி யெடுப்போம்
குறிஞ்சி மலர் தெரிந்து முல்லைக்
கொடியில் வைத்துத் தொடுப்போம்
பழம் பிழிந்த கொழுஞ்சாறுந்
தேறலும் வாய் மடுப்போம்
பசுந்தழையு மரவுரியு
மிசைந்திடவே யுடுப்போம்
செழுந்தினையு நறுந்தேனும்
விருந்தருத்தக் கொடுப்போம்
சின வேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம்
எழுந்து கயற்கணி காலில்
விழுந்து வினை கெடுப்போம்
எங்கள் குறக் குடிக் கடுத்த
வியல் பிதுகா ணம்மே.

இந்தக் குறத்தில் கடைசிப் பாடல் பின்வருவது:

நீர்வாழி தென்மதுரை நின்மலனார் அருள்வாழி
கார்வாழி அங்கயற்கட் கன்னிதிரு வருள்வாழி
சீர்வாழி கச்சிநகர்த் திருமலை பூபதிவாழி
பேர்வாழி யவன் செல்வம் பெரிதூழி வாழியவே.

இப்பாடலைப் பார்க்கும்போது சில கருத்துக்கள் தோன்றுகின்றன. இது பாட்டின் அமைப்பாலும் நடையாலும் குமரகுருபரர் வாக்கல்ல என்று திட்டமாய்ச் சொல்லமுடியும். இரண்டாவது இதில் திருமலை பூபதி வாழி என்று சொல்வதால், குமரகுருபரர் எங்கும் திருமலை

நாயக்கரைப் பாடவில்லையாதலால், இதையும் இவர் பாடவில்லை என்றே சொல்லலாம். இவர் சந்தித்தது மதுரையிலிருந்த திருமலை நாயக்கர். இங்குக் கச்சிநகர்த் திருமலை என்று சொல்வதால் குமரகுருபரருக்கு நிச்சயம் இது சம்பந்தமில்லை என்று சொல்ல வேண்டும். ஆதலால் இக்குறம் சுவாமிகள் பாடவில்லை என்பது தெளிவு. இந்த இடத்தில் கச்சிநகர்த் திருமலை என்பதற்கு ஐயரவர்கள் இந்நூலாசிரியரை ஆதரித்த உபகாரி என்று குறிப்பிட்டிருப்பது மிகவும் திருத்தமான குறிப்பு; இதன் பொருளாவது குமரகுருபரர் அல்லாத வேறொருவரான இக்குறம் பாடிய ஆசிரியரை ஆதரித்தவர் என்றே தெளிவாய்ச் சொல்லப் படுகிறது.

**தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை**

இது சம்பிரதாயமான ஒரு பிரபந்தம். தில்லைத்தலத்தில் நடராஜப் பெருமானுக்குரிய தேவியாகிய சிவகாம சுந்தரி மீது பாடப்பட்ட 20 பாடல் கொண்ட பிரபந்தம் ஆகும். தமக்குப் பிரமன் வாழ்வும் திருமால் வாழ்வும் ஒருபொருள் அல்ல என்று நயமாகவே ஒரு பாடலில் சொல்லுகிறார்.

**மறைநாறுஞ் செவ்வாய் மடக்கிள்ளாய் பிள்ளைப்**
**பிறைநாறுஞ் சீறடியைம் பேதாய், — நறைநாறும்**
**நாட்கமலஞ் சூடேம்; நறுந்துழாய் தேடேம்நின்**
**தாட்கமலஞ் சூடத் தரின்.**

சிவகாமியம்மை மீது தனிப் பிரபந்தங்கள் எவையும் பழங்காலத்தில் பாடப்பெறவில்லை. 16ஆம் நூற்றாண்டில் சில தனித் துதிப் பாடல்களும் புராணங்களில் நடராஜர் துதிக்குப் பின்னால் வருகின்ற சிவகாமசுந்தரி துதியாகச் சில தனிப்பாடல்கள் மட்டுமே உள்ளன. பிற்காலத்தில் ஒரு பக்திமான் இவ்வாறு ஒரு பிரபந்தம் பாடிவைத்தார் என்றே தோன்றுகிறது. வழக்கம்போல இது வெண்பாவும்

சட்டளைக் கலித்துறையும் மாறி மாறி அந்தாதித் தொடையில் மண்டலித்து வருகின்ற 20 பாடல் கொண்ட ஒரு சிறு பிரபந்தம்.

பல பொய்க்கதைகளைக் கோத்துச் சொன்ன மகா வித்துவானும் இதைச் சொல்லவில்லை. பிந்திய இருவரும் சிலவற்றையே சொன்னார்கள். வரிசை பிறழ்ந்தும் சொன்னார்கள். ஆனால் குறிப்பிட்ட பாடலில் 12 என்று எண்ணிட்டுச் சொன்னமையினால் இந்த நூல் அவற்றில் அடங்கவில்லை என்பது தெளிவு.

## ஒரு படப்பதிப்பு

குமரகுரு சுவாமிகள் அருளிய பாடல்களின் திரட்டாகப் பதிப்பிக்கப்பட்ட பதிப்புக்களில் ஒரு பதிப்பை அதன் சிறப்புத் தன்மை கருதி இங்கு குறிப்பிடுதல் தகும். பதிப்புக்கள் மூலம் மட்டும் அடங்கிய பதிப்பு, மூலமும் குறிப்புரையும் கொண்ட பதிப்பு. படங்கள் கொண்ட பதிப்பு. இப்படிப் பலவிதம் உள்ளன. இவற்றுள் நீதிநெறி விளக்கம் மட்டும் ஆங்கில மொழி பெயர்ப்போடு கூடிய பதிப்புக்கள் சில. இங்கு நாம் சொல்லப்போகும் பதிப்பு உரையும் படங்களும் கொண்ட பதிப்பு. சொல்லப்போகும் பதிப்பானது அக்காலத்துப் பெரும் புலவர்கள் சுவாமிகளின் நூல்களிடத்து எவ்வளவு பக்தி கொண்டிருந்தார்கள் என்பதைக் காட்டுவது. இப்பதிப்பு காஞ்சிபுரம் சபாபதி முதலியாரின் மாணாக்கருள் ஒருவரான காஞ்சிபுரம் இராமசாமி நாயுடுவால் இயற்றப்பட்ட உரையுடன் சார்வரி வருடம் சித்திரை மாதம் (1860 ஏப்பிரல்) அச்சிடப்பட்டது. இப்பதிப்பு ''திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த காசிமடம் குமரகுருபர சுவாமிகள்'' என்று குறிப்பிடுகிறது. இதனுள் தொடக்கத்தில் ''திருமகள் அகலாப் பரம வைகுந்த'' என்ற சிறப்புப் பாயிரப் பாடல் காணப்படுகிறது. இப்பாடலை இயற்றினோர் பெயர் இங்குக் காணப்படவில்லை என்ற குறிப்பும் காணப்படு

கிறது. இப்பதிப்பின் சிறப்பு இதில் ஏராளமான படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன என்பது. தமிழில் பலவகையான புராணங்களிலும் இராமாயணம் பாரதம் போன்ற இதிகாசங்களிலும் பொருத்தமான இடங்களில் ஐதிகப் படங்கள் சேர்க்கப்பட்டிருக்கும். ஆனால் இந்தப் பிரபந்தத்திரட்டில் படங்கள் அமைந்திருப்பது பதிப்பித்தோர் இதன்பால் எவ்வளவு பக்தி காட்டியிருக்கிறார்கள் என்பதையே காட்டுகிறது.

மீனாட்சியம்மைக்குத் தனிப்படம். அம்மைக்கு இங்கு மீனாட்சி சுந்தரி என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது. திருச்செந்தூரில் குழந்தையாயிருந்த குமரகுருபரர் பேசும் ஆற்றல் பெற்று முருகன் மீது பாடல் பாடுகிறார். மற்றொரு படம் மதுரையில் மீனாட்சியம்மை குழந்தைப் பெண்ணாகத் தோன்றி குமரகுருபரர் கழுத்தில் முத்துமாலையை எடுத்து இடுகிறார். ஒருபுறம் பக்த கோடிகள் பிரசங்கம் கேட்டுக் கொண்டிருக்க மறுபுறம் அரசவையினர் இருக்கிறார்கள். பின்னர் புள்ளிருக்கு வேளூரில் குமரகுருபரர் முன் முருகன் அர்ச்சகர் வடிவில் வந்து விபூதி கொடுத்தல் ஒரு படம். அடுத்தது தேசிகர், காசியில் மடம் கட்டி அறம் செய்க என்று குமரகுருபரர் தலையில் கைவைத்து ஆசீர்வதித்து இவரைக் காசிக்கு அனுப்புகிறார். இது ஒரு படம். இதற்கு முன் குமரகுருபரர் ஆடம்பரமாகத் தேசிகர் முன்னிலையில் வீற்றிருப்பதும் பிறகு மேலாடையை இடுப்பில் கட்டி அவரைப் பணிவதும் ஒரு படம். (ஆயினும் இக்கருத்தே பிழை. இது குமரகுருபரருக்குப் பொருந்தாது என்று முன்னமே காட்டி இருக்கிறோம்.)

காசிக்குச் சென்ற சுவாமிகள் அங்கு காளியைத் தியானித்து வணங்கி அவளால் கொடுக்கப்பட்ட சிங்கத்தின் மீதேறி அவையினர் முன் வருதல் ஒரு படம். துருக்கர் இவரிடத்து மாமிசத்தைக் கொடுக்க அவ்வளவும் இவருடைய அருள் நோக்கம் பட்ட மாத்திரத்தில் காய்கனிகளாக

மாறுதல், பின்னர் பழுக்கக் காய்ச்சிய இரும்பை எதிரில் உள்ளோர் அஞ்சி நடுங்கும்படி இவர் ஏந்தி நிற்றல். குமர குருபரர் காசியில் தருமம் செய்கிறார். ஏராளமான மக்கள் அவரிடம் வந்து அன்னதானம் பெற்று உண்ணுகிறார்கள். அடுத்தது உபய கருடன் வட்டமிட்டுக் காட்ட அந்த இடத்தைத் துருக்க மன்னன் தானம் செய்து மடம் கட்டிக் கொடுக்கிறான்.

இந்தப் படங்கள் அக்காலத்தில் இவருடைய சரித்திரம் எந்த அளவு நம்பப்பட்டு வந்தது என்பதைக் காட்டும். இவையாவும் சரி என்ற நினைப்பில் இவற்றை இங்குச் சொல்லவில்லை.

இனி, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழுக்குப் பருவம் தோறும் அது அதற்குரிய ஐதிகப்படம் காணப்படுவது ஓர் அருமை. செங்கீரைப் பருவத்தில் குழந்தை ஒவ்வொரு காலாக அடியெடுத்து வைத்துத் தவழ்தல் தாலப்பருவத்தில் மங்கையர் கூடி நாவசைத்துக் குழந்தையை தாலாட்டுகிறார் கள். சப்பாணிப் பருவத்தில் மங்கையர் கைகொட்டி ஆடுகிறார்கள். அடுத்தது முத்தப் பருவத்தில் குழந்தையை அனைவரும் எடுத்து முத்தாடுகிறார்கள். வருகைப் பருவத் தில் குழந்தையை அனைவரும் வா என்றழைக்கிறார்கள். அம்புலிப் பருவத்தில் குழந்தைக்குச் சந்திரனைக் காட்டி அழைக்கிறார்கள். (அம்மானைப் பருவத்திற்குரிய படம் காணப்படவில்லை) ஒரு தடாகத்தில் மீனாட்சியம்மையும் உடன் வைத்துக் கொண்டு நீராடுதல். இறுதியாக அம்மை யும் மற்றொரு பெண்ணும் தனித்தனி ஊசலில் அமர்ந்து ஆட ஏனைய மகளிர் ஊசலை ஆட்டி விடுகிறார்கள்.

இவ்வாறு பிள்ளைத்தமிழுக்கும் இவருடைய சொந்த வாழ்க்கை வரலாற்றுக்கும் படங்கள் அமைத்திருப்பது வேறொரு புலவர் சரித்திரத்துக்கோ, நூல்களுக்கோ நாம் காண்பதற்கில்லை.

நீதிநெறி விளக்கம் பற்றிய குறிப்பின் இறுதியில் பதிப்புக் களைப் பற்றிய மற்றொரு குறிப்பும் தந்திருக்கிறோம்.

# அனுபந்தங்கள்

## முன்னுரை

ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் வரலாற்றோடு தொடர்புடைய பல செய்திகள் சொல்லப்படுகின்றன. ஆனால் அவை உண்மைக்குப் பொருந்தாதவை என்றுதான் கருதவேண்டும். இருப்பினும் இச்செய்திகளைப் பலர் பலவிதமாக இவை உண்மை என்றே நம்பிச் சொல்லி வந்திருப்பதால் இவற்றை ஒதுக்கி விடுவது குறைபாடு என்று பலர் எண்ணக் கூடும். ஆதலால் இவற்றையும் இங்குப் பிரதான வரலாற்றோடு சேர்க்காமல், தனி அனுபந்தமாகப் பின்னே தருகிறோம். இவ்வாறு தரப்படுகின்ற செய்திகள் பல.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையும் புலவர் புராணம் பாடிய தண்டபாணி சுவாமிகளும் குமரகுருபரர் சரித்திரத்தைப் பலவிதமாகப் பாடியிருக்கிறார்கள். அவர்கள் எவ்வாறு பாடினார்கள், எப்படியெல்லாம் பிழைபாடுடையன என்ற தன்மைகள் முதல் இரு அனுபந்தங்களில் விரித்துச் சொல்லப்படுகின்றன.

சுவாமிகள் திருமலை நாயக்கரிடம் சிறப்புப் பெற்ற வரலாறும் காசி நகரில் முகம்மதியத் தலைவன் நடத்திய சமய மகாநாட்டில் கலந்து கொண்டு சிறப்புப் பெற்ற வரலாறும் அவருடைய பிரதான வரலாற்றின் பகுதிகளாகவே சொல்லப்பட்டுள்ளன. அவை அடிப்படையில் உண்மையான வரலாறுகள் என்றே நாம் கருதுகின்ற காரணத்தால் அவ்வாறு சொல்லியிருக்கிறோம்.

சுவாமிகள் முகம்மதியத் தலைவனுடைய மகாநாட்டில் புகுந்தபோது சிம்மத்தின் மீது ஆரோகணித்துச் சென்றார் என்று வரலாறு சொல்லுகிறது. இந்த வரலாற்றின் பல

பேதங்களையும் நன்கு ஆராய்ந்து அவற்றின் பொருத்த முண்மை, பொருத்தமின்மை ஆகியவற்றையும் மற்றோர் அனுபந்தம் சொல்கிறது. இதையொட்டிச் சிங்கத்தை வசப்படுத்துவது போலப் பலவகையான பிராணிகளும் எவ்வாறு ஞானியருக்கு இன்றும்கூட வசப்படுகின்றன என்பதை மற்றோர் அனுபந்தம் விரிவாக எடுத்துக்காட்டி இவற்றை அறிந்தால் சிங்கவாகன வரலாற்றை எளிதாகத் தள்ளி விடுவதற்கு இல்லை என்று காட்டுகிறது.

துளசிதாசரையும் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரையும் சுவாமிகளுடைய சரித்திரத்தோடு சில வரலாறுகள் சம்பந்தப் படுத்துகின்றன. இந்தச் சம்பந்தம் எந்த அளவு பொருந்தக் கூடியது என்பதைக் கடைசி இரண்டு அனுபந்தங்கள் தெளிவு படுத்துகின்றன.

மேற்காட்டிய பலவேறு செய்திகளையும் வரலாற்றின் பகுதிகளாகச் சொல்ல முடியாமையால் இங்கு வேறாக ஆராய்ந்து சொல்லப்படுகின்றன.

சகலகலாவல்லிமாலை பாடிய நிலை குமரகுருபரர் வரலாற்றுக்குப் பொருத்தமாக வழங்குவது வரலாற்றுப் போக்கில் காட்டப்பட்டது. அதற்குப் பொருந்தாத கதை ஒரு தனி அனுபந்தமாகக் காட்டப்படுகிறது.

மற்றும், நேபாளத்தில் மோரங்கி என்னுமிடத்தில் குமரகுருபர சுவாமிகள் தம் சீடராயிருந்த வாகீசத் தம்பிரான் என்பவரைக் கொண்டு ஒரு மடம் அமைக்கச் செய்தார். அம்மடம் அவர் காலம் தொடங்கி இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக மிகச் சிறப்பாக மேலோங்கியிருக்கிறது என்று 10 MADRAS தீர்ப்பினால் விளக்கமாக அறிகிறோம். திருவாவடுதுறைத் தம்பிரான் 1880இல் வந்து புகுந்தபோது, இந்த மோரங்கி நிலைமை அவர்களுக்குத் தெரியாது. ஆதலால் அம்மடத்தை காசி மடத்தார் இழந்துவிட்டார்கள். இது வேறெவ்வகையாலும் அறியப்படாத ஒருசிறப்புச்செய்தி யாதலால், ஒரு தனி அனுபந்தமாகச் சொல்லப்படுகிறது.

அனுபந்தம்-1

## மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய குமரகுருபரர் சரித்திரம்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை (1815 — 1876) தாம் மிகுந்த ஈடுபாடு கொண்ட இரு சைவப் புலவர்கள் சரித்திரத்தைப் புராணமாகப் பாடினார். ஒன்று குமரகுருபரர் சரித்திரம், மற்றது சிவஞான சுவாமிகள் சரித்திரம். முந்தியது 338 பாடல்களில் நூல் முற்றுப் பெற்றது. பிந்தியது நூல் அபூர்த்தியாய் நின்று விட்டது. இவர் பாடிய குமரகுருபரர் வரலாற்றில் பல பகுதிகள் காசி மடத்தில் வழங்கும் வரலாற்றுக்கு மாறாக உள்ளன. கீழே பிள்ளையவர்கள் பாடிய நூலின் சுருக்கத்தைத் தருகிறோம்.

சிவைகுண்டத்தில் வாழ்ந்த பாண்டி வேளாளர் மரபில் வந்த தம்பதியருக்குத் திருச்செந்தூர் முருகன் அருளால் ஒரு மகன் பிறந்தான். அவன் பேசா மூங்கையாயிருத்தல் கண்டு, பெற்றோர் மகனுடன் திருச்செந்தூர் முருகன் சந்நிதியில் சென்று வழிபட்டார்கள். முருகன் ஒருநாள் ஒரு குமரன் வடிவில் குழந்தை முன் தோன்றி ''நீ யார்'' என்ன, குழந்தை முதன்முதலாக வாய் திறந்து. ''அடியேன்'' என்றான். அவனுக்கு இரு மொழிப் புலமையும் பாடும் புலமை, பிரசங்க வன்மை, தீக்கைகளும் நல்கித் திருவடியும் சென்னியில் சூட்டிச், ''சடைவேடம் தாங்கிப் பக்குவர்க்கு உபதேசம் செய்'' என்று சொல்லித் திருநீறு அளித்து மறைந்தான்.

சிறுவர் பின், சடைதாங்கி ஆறுகட்டி சுந்தர வேடம் பூண்டு[1] உலகத்தாரால் குமரகுருபரர் என்று போற்றப் பெற்றார்.

பின் தென்கலையே (தமிழ்) நூல் செய்யத் தக்கதென்று துணிந்து 'பூமேவு' என்று தொடங்கும் கந்தர் கலிவெண்பாப் பாடினார். பெற்றோர் இதனையறிந்து இதுகாறும் மூங்கையாயிருந்த தம் மகன் என்பதை மறந்து நம் குல தெய்வமென்று நினைத்துத் தொழுது நீங்கினர், குமரகுருபரர் பின் கயிலைக் கலம்பகம் பாடினார். பின் நெய்வேலி, இராமேச்சுரம், குற்றாலம், குறும்பலாசுழியல்' கானப்பேர், ஆடானை, புனவாயில், பெருந்துறை, கொடுங் குன்றம், புத்தூர், பூவணம், பரங்குன்றம், ஏடகம், ஆப்பனூர் போற்றிக் கூடல் அடைந்தார். (இங்கு பாண்டி 14 தலங் களும் சொல்லப் பெறுகின்றன) அங்கயற்கண் அம்மை— திருமுன் சென்றார். பிள்ளைக்கவிப் பிரபந்தம் செய்தார். அம்மை நகரையாளும் நாயக்கன் கனவில் கூறவும், அவன் அரங்கேற்றத்துக்கு ஏற்பாடுகள் செய்து அவருக்கும் பெருஞ் சிறப்புச் செய்தான். அரிய நாயகபுரம் (அரியநாயகபுரம்

---

1. இங்குச் சொல்லப்பட்டவை சைவ மரபுக்கு மாறானவை. மகாவித்துவான் 'மடத்திலேயே சில காலம் புகழோடு வாழ்ந்தவர். மரபுகளை நன்கு அறிந்தவர். இவர் இவ்வாறு மரபு வழுவிப் பாடிய தற்கு ஒரு காரணம் உண்டு. அது முன் குறிப்பிடப் பட்டது. சடை யாரும் வளர்க்கலாம். ஆறுகட்டி சுந்தரவேடம் என்பன ஆசாரியன் அளிப்பன. ஆசாரியனாக வந்த முருகன் இவற்றைச் சிறுவருக்கு அளிக்கவில்லை. இவைதானாக எடுத்து அணிந்து கொள்வனவும் அல்ல. ஆறுகட்டி சுந்தரவேடம் பரிவட்டம் என்பன ஒரு தொடர். இந்தச் சந்தர்ப்பத்தில் பரிவட்டம் என்பது காவி ஆடை. இதுவும் ஒருவர் எடுத்துத் தாமே அணிந்து கொள்வது அல்ல. பிறர் கொடுக்க வாங்கி அணிவது. ஆகவே இங்கு மகாவித்துவான் கூற்றுப் பிழை.

என்பது பின்னால் காசிமடத்தில் 20ஆம் பட்டத்தில் இருந்த அருணந்தி சுவாமிகள் பிறந்த ஊர்) என்ற ஊரை அவருக்குக் கொடுத்தான். நீதியைச் சுருக்கி உரைக்குமாறு கேட்க, அவர் நீதிநெறி விளக்கம் பாடினார். பலர் கேட்க, மதுரைக் கலம்பகம் பாடினார். சிராப்பள்ளியடைந்து பலரும் உவக்கப் பிரசங்கம் செய்தார். அங்குப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் வந்து கலப்ப இருவருக்கும் போட்டி. அரசவை நாணயத்தில் பொறிக்க ஐயங்கார் கருடன் என, இவர் இடபம் என்றார். ஐயங்கார் தோற்றார். நாயகர் மகிழ்ந்து இடப இலச்சினை யுடைய காசு அச்சிட்டார். பின் கடம்பந்துறை, ஈங்கோய் மலை, பராய்த்துறை, பாச்சிலாச் சிராமம், பைஞ்ஞீலி, தவத்துறை, ஆனைக்கா, பாற்றுறை, மூக்கீச்சரம், கற்குடி எறும்பியூர் மலை, திருக்காட்டுப்பள்ளி பணிந்து மீண்டு சிராமலை வந்தார். ஐயங்கார் ஏவலால் சில வைணவர் சமயவாதத்துக்கு வந்தனர். இருவர் வாதங்களும் 24 பாடல் களில் சொல்லப்படுகின்றன. அன்பிலாலந்துறை கானூர் மழபாடி நெய்த்தானம் ஐயாறு பூந்துருத்தி கண்டியூர் சோற்றுத்துறை பழனம் குருசாமி திருமலை திருவலஞ்சுழி பட்டீச்சுரம் சத்தி முத்தம் மேற்றளி பழையாறை குடந்தை குடமூக்கு இடைமருது ஆவடுதுறை.

இங்குத் திருமூலரை வணங்கினார். பின் திருமடத்துள் புகுந்தார். பின்னர்த் திருமாளிகைப் பிரான் நமசிவாய தேசிகர் பொற்பார் திருவடி புகழ்ந்து போற்றினார். அங்குத் தாதமார்க்கம் முதலான நான்கு மார்க்கத்திலும் அடியார் கள் ஒழுகுதலைக் கண்டார். அங்கு நமசிவாயருடைய அருள் நினைந்து மகிழ்ந்தார். அங்குத் தேசிகராயிருந்த குமார சுவாமி சற்குரு இவரை வரவேற்றார்.

[இங்குக் குறிப்பிடத்தக்க ஒரு காலப்பிழை நேர்ந் துள்ளது. திருவாவடுதுறையில் 6,7 குருமூர்த்திகளாகக் குமாரசுவாமி தேசிகர், பிற்குமாரசுவாமி தேசிகர் என

இருவர் இருந்திருக்கிறார்கள். இவர்களுக்கு அடுத்து வந்த மாசிலாமணி தேசிகர் காலம் 1625-1658 என்று வேறு சான்றுகளால் திட்டமாய்த் தெரிகிறது. இந்த நிலையில் முந்திய இருவருடைய காலமும் 1600க்குச் சற்று முன்னும் சற்றுப் பின்னுமாக இருக்க வேண்டும். ஆனால் 1688இல் முத்தியடைந்த குமரகுருபரருடைய பிறந்த காலம் சுமார் 1610-1615 ஆக இருத்தல் கூடும். அவர் திருவாவடுதுறைக்கு வந்ததாகச் சம்பிரதாய வரலாறு சொல்லவில்லை. அப்படி வந்திருந்தால், அது 1630ஐ ஒட்டி இருக்கலாம். 1630 இல் எந்தக் குமாரசுவாமி தேசிகருமே இல்லை. ஆதலால் பிள்ளையவர்கள் குமாரசுவாமி சற்குரு வரவேற்றார் என்பது (பாடல் 150) காலப் பிழையாகும்.

பின் அந்தக் குரு இவரைப் போதம், சித்தி மற்ற நூல்கள் இவற்றில் வினாவினார். இதை அனுபவித்த குமர குருபரர் இவரே நமது குரு என்று எண்ணினார். பின்னர் இருவரும் அளவளாவி மகிழ்ந்து பின்வடமடம் சென்று பூசையாற்றிப் பந்தியில் அமர்ந்து உண்டு பிறகு விடை பெற்று அப்பால் வந்தார். அங்கிருந்து மாயூரம் சேர்ந்தார். அங்கு வழிபட்டு மெய்ஞ்ஞான சம்பந்தர் தளியில் வழிபட்டார். (குருஞான சம்பந்தர் சமாதி) பின்னர்த் திருமடத்துள் புகுந்தார். இத்தானமும் நோக்கலாம் என்று தான் புகுந்தார். திருவருள் செலுத்தச் செய்யவில்லை. தேசிகர் அருகு சென்று இருந்தார். அடியாரும் துறவியரும் பற்பலர் வந்து கண்டு மகிழ்ந்தனர். இவருடைய கல்வியும் ஞானமும் பிரசங்க வாய்மையும் மடை உடைந்தெனக் கவி வடிக்கும் வாக்கும் நோக்கி அனைவரும் வியந்தார்கள்.

அப்போது மாசிலாமணி தேசிகர் இவரை நோக்கிப் பின்வருமாறு கேட்டார். "முருகப் பெருமானுடைய அருளைப் பெற்றவர்கள் அவன் தந்தையின் அருள் பெற்றவர்களை

வணங்க மாட்டார்களோ?'' என்று, அதற்கு இவர் நீறு அணிந்தவர் யாரும் தொழற்கு உரியார் ஆயினும் ஆசிரம பேதத்தால் ஏற்படும் விதியையும் கருதவேண்டும் என்றார்.[1] இதன் பிறகு ''ஐந்து பேரறிவு'' என்னும் செய்யுளின் அர்த்தம் என்ன? அதை நீர் சொல்லும்'' என்று அவர் குமர குருபரரைக் கேட்டார். இதன் பிறகு உள்ள பகுதிகள் சரி யாக இல்லை. இதுபற்றி ஐயர் அவர்களுடைய குறிப்புப் பின் வருமாறு இந்த இடத்தில் உள்ளது.

''இதன் பின்னிருந்த 7-பாடல்கள், வரலாற்று முறை மையைச் செவ்வனே தெரியாதவர்கள் சொல்லக்கேட்டுச் செய்யப்பட்டமையின், கொள்ளத்தக்கன வல்லவென்று பிள்ளையவர்கள் நாங்கள் பாடங் கேட்ட காலத்திற் சொல்லி யிருந்தமையின் அவற்றை இங்கே பதிப்பிக்க வில்லை. இந்தப் பாகத்திற்குரிய பாடல்களைப் பின்பு அவர்கள் இயற்ற வில்லை.''

இங்குப் பிள்ளையவர்கள், வரலாறே சரியாகத் தெரிந்து கொள்ளாமல் தப்பாகப் பாடியிருக்கிறார் என்று சொல்ல வேண்டும். அதனால் தான் ஐயரவர்கள் பிழைக்கு ஒரு பிராயச்சித்தம் போல இப்படிச் சில வரிகள் எழுதியிருக் கிறார். இவ்விடத்தில் பலவகையான கருத்துப் பிழைகள் காணப்படுகின்றன. குமரகுருபரர் திருவாவடுதுறை தேசி கரைக் கண்டு இவரே நம் குரவர் என்று எண்ணினார் என்பது தவறு. அப்படி எண்ணினால் ஞானாசிரியனைத் தேடிச் செல்கின்ற இவர் அந்த இடத்திலேயே நின்றிருக்க வேண்டும். அப்படி நிற்கவில்லை. ஆதலினால் அந்த எண்ணம் என்று சொல்லியது பிழையாகும்.

மற்றப்படி அப்போதிருந்த குரு குமாரசுவாமி சற்குரு என்று காட்டியிருப்பது முன்னமே பிழை என்று காட்டினோம்.

---

1. இவை தெளிவற்ற சொற்கள்.

குமரகுருபரர் தருமபுரம் தேசிகர் அருகு சென்று இருந்தனர் என்று சொல்லப்பட்டது. அதன்விளைவாக அத்தேசிகர் குமரவேள் அருளைப் பெற்றவர், குமரவேள் தந்தையின் அருளைப் பெற்றவரை வணங்காரோ?'' என்னும் கேள்வி கேட்கும் நிலை எழுந்தது. இந்த நிலை குமரகுருபரருக்கும் தேசிகருக்கும் இருவருக்குமே பெருமையில்லை. இதன் பின்னால் வரும் கேள்விகளும் பதில்களும் ஒரு தெளிவற்ற நிலையை உண்டுபண்ணி உள்ளன. ஆதலால் இந்தச் சரித்திரமே மிகவும் தப்பாய் உள்ளது. "ஐந்து பேரறிவும்'' என்னும் பாடலின் தொடக்கம் வருகின்றதே அன்றி மேற்கொண்டு வேறு எந்தத் தெளிவும் குமர குருபரரைத்தேசிகர் ஆட்கொள்ளுதலும் சொல்லப்படவேயில்லை. ஆதலால் இந்தச் சரித்திரம் மிகவும் தப்பாய் இருப்பதனால் முழுமையாகப் புறக்கணிக்கத் தக்கது.

மற்றும் ஒன்று வழங்கும் வரலாற்றில் குமர குருபரர் தம்மையறியாமலே திருவருளால் முறையாகக் குருஞான சம்பந்தருடைய சுவட்டைப் பின்பற்றித் தம்மூரிலிருந்து மதுரை வழிபட்டுத் திருவாரூர் வழிபட்டுப், பிறகு தருமபுரம் வருகிறார். இது ஞானவரலாற்றுக்குப் பொருத்தமாய் இருக்கிறது. ஆனால் பிள்ளையவர்கள் சரித்திரத்தில் தருமையில் சிலநாள் தங்கிவிட்டுக் குமரகுருபரர் திருவாரூர் சென்று அங்கு வணங்கி நான்மணிமாலை பாடுகிறார் என்று சொல்லப்படுகிறது. இது கதையைத் தலைகீழாக மாற்றிச் சொல்கிறது.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வரலாற்றை இவ்வாறு பெரிதும் பிழைபடப் பாடியதற்குக் காரணம், அப்போது திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவராயிருந்த காசிவாசி ராமலிங்கத் தம்பிரான் என்பவர் (திருப்பனந்தாள் 14 ஆவது பட்டம்) இந்தக் காரணத்தை ஐயரவர்கள் தமது மீனாட்சிசுந்தரம் பிள்ளை வரலாற்றில்

(முதல்பாகம் பக்கம் 333 இல்) எழுதியிருக்கிறார். இப்பகுதி, சுவாமிகளைப் போற்றினோர் என்ற பகுதியில் அப்படியே எடுத்து எழுதப்பட்டுள்ளது. இந்த ராமலிங்கத் தம்பிரான் தம் இறுதிக் காலத்தில் சொந்தப் பகைமை காரணமாகத் தருமபுரத்தின் பரம்பரை வரலாற்றில் பெருங்கேடு சூழ்ந்து, அதன் பயனாய்த் திருப்பனந்தாள் காசிமடம் 1880-1894 ஆகிய ஆண்டுகளில் கொடிய இருள் சூழ்ந்திருந்தது.

ஆரூர் தரிசிக்க எண்ணிப் புறப்பட்டு, வழியில் வழுவூர், அம்பர்மாகாளம். திருவீழிமிழலை, திருவாஞ்சியம். பின் திருவாரூர் பணிந்தார். அங்குத் திருவாரூர் நான்மணி மாலை பாடினார். பல சமயவாதிகள் வர அவர்களோடு சமய வாதமும் செய்து வந்தார். இவர் வாதத் திறனைப் பார்த்துப் பிறர் மறுத்துரையாமலே போய்விட்டார்கள். மீண்டும் தலயாத்திரை. கீழ்வேளூர், மறைக்காடு, நாகை, நள்ளாறு, புகலூர், செங்காடு, கடலூர், வெண்காடு, புள்ளிருக்கு வேளூர்.

அங்கு வைத்திய நாதரையும், தையல் நாயகியையும் கண்டு மகிழ்ந்தார். கனவில் கந்தனார் இளம் குழவியாய்த் தோன்றி, ''நம்மைப் பாடாதே போதியோ?'' எனலும், இவர் சுவை அலிமந்த முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் பாடி முடித்தார். பாடி முடித்துத் தில்லை அடைந்து நடனம் கண்டு அதில் திளைத்தார். திருவேட்களம், நெல்வாயில், கழிப்பாலை தரிசித்தார். சிதம்பர மும்மணிக்கோவை பாடினார்.

சைவர் சிலர் வந்து போற்றி யாப்பிலக்கணத்துக்கு உதாரணமாகச் செய்யுள் பாடித் தரவேண்டுமென்று குறையிரப்பச் சிதம்பரச் செய்யுட் கோவை பாடினார். அங்கும் சமயவாதம் பின்னர்த் திருப்பாதிரிப்புலியூர், திணைநகர், திருமாணிகுழி, திருவதிகை, திருவெண்ணெய் நல்லூர். இங்கு அருள் நூலைச் செந்தமிழால் மெய்கண்டார் மொழி

பெயர்த்தார் என்ற கருத்தை நூலாசிரியர் ஏற்றுப் பேசுவர். இது இன்று சைவருக்கு உடன்பாடன்று. அருணந்தி திரு வுருவம் பணிந்து ஆமாத்தூர், கோவலூர், அண்ணாமலை, பழமலை, தூங்கானைமாடம், கழுக்குன்று பணிந்தார். கழுக்குன்றில் திருவாதவூரடிகளுக்குப் பெருந்துறைக்கோலம் காட்டினார் என்று ஆசிரியர் கூறினார். பின் இடைச்சுரம், கச்சூர், திருவான்மியூர், மயிலை ஒற்றியூர், பாசூர், திரு முல்லைவாயில், ஆலங்காடு, திருத்தணிகை, அங்கு வேங்கட கிரிவேந்தர் இவருக்கு கனவரிசை செய்தார். பின் காஞ்சி குமரகோட்டம். அங்கு தலம் பலவும், பின் காளத்தி, காசி நகர் முடித்து எழுகிறார். காசிநகர் வருணை கங்கை வருணை, துண்டி விநாயகர் மீது விருத்தம் பத்துப் பாடினார். காசிக் கலம்பகம். இங்கு ஆட்சி புரிந்த துலுக்க வேந்தைப் பார்த்து மடம் அமைக்கும் எண்ணத்தோடு சரசுவதியை நோக்கிச் சகலகலாவல்லி மாலை பாடினார். இவருடைய பிரசங்கம் கேட்டு அனைவரும் வியந்து மகிழ்ந் தனர். மன்னன் மடம அமைத்துக் கொடுத்தான். அவன் கொடுத்த நிதியம் கொண்டு அன்னதானம் செய்து அற மெலாம் போற்றி வாழ்ந்தார். அக்காலம் காசியில் உள்ள கேதாரநாதர் கோயில் திருப்பணி செய்யுமாறு இவருக்குக் கனவில் பெருமாள் கட்டளையிட, இவர் அவ்வாறே காடு போக்கிப் பெரும் கோயில் அமைத்தார். துலுக்கக் குருக் கனார் இவரிடம் பொறாமை கொண்டு இவரை, "உங்கள் தெய்வம் மெய்யானால் காய்ச்சின இரும்பை ஏந்திக் காட்டுக" என்றார்கள். அவ்வாறே ஏந்திக் காட்டினார். அவையில் இருந்தோர் யாவரும் சிவனே தெய்வம் என்று தீர்ந்தார். அரசன் இவரைப் புகழ்ந்து சிறப்புச் செய்தான். பின்னர் கண்மணி (உருத்திராக்கம்) விளையும் பூமியைக்

யைக்கொள்ளும் நோக்கத்தோடு முகரங்கிக்கு[1]த் தம் சீடர் வாகீச முனிவரை அனுப்பி அங்கு ஒரு மடம் அமைப்பித்தார்.

முகரங்கி (மோரங்கி) அக்காலத்தில், பின்னும் 19 ஆம் நூற்றாண்டின் இறுதிவரையில் கூட மடம் மிகவும் பிரசித்தமான உருத்திராக்கக் காடாகத் திருப்பனந்தாள் காசி மடத்தின் வசம் இருந்தமை நமக்குத் தெரிகிறது. இதைக் குறித்து முத்துசாமி ஐயர் தீர்ப்பில் சில குறிப்புக்கள் வருகின்றன. இதற்கு 10-20 ஆண்டுகளுக்கு முன்தான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை சரித்திரம் பாடினார். அதில் முகரங்கி மடம் பற்றி ஒரே ஒரு பாடல் பாடியிருக்கிறார். அது தரும் விளக்கத்துக்காக அந்தப் பாடலை இங்கு எடுத்துக் காட்டுகிறோம். 'அன்னையில் பொலியும் எங்கள் ஐயர் தாம் இருந்தார் அன்றே' என்று பாடியபின் (292 ஆம் பாடல்)

மாதவத் துயர்ந்தா ராய வாகீச முனியை நோக்கிக்
காதல்செய் விபூதிக் கேற்ற கண்மணி விளையும் பூமி
மேதகக் கொளின் றென்ன அவர்முக ரங்கி மேவி
ஓதுமப் பூமி கைக் கொண் டுயர்மட மொன்று செய்தார்.

தமக்குப்பின் தக்கவர் சொக்கநாத முனிவர் என்று துணிந்து அவரிடம் செந்தூர் முருகன் உருவத்தைத் தந்து பூசிக்கும்படி செய்து வைகாசி கிருஷ்ண பட்சம் திருதியை திதியில் முத்தி அடைந்தார். (அடைந்த ஆண்டு 1688 என்பர் )

பின்னர் இவர் தொடர்பாக அநேகர் ஆட்சி புரிந்த பின் தில்லை நாயக சுவாமிகள் என்பவர் காசியை நீக்கி வந்து

---

1. முகரங்கி நேபாளத்தில் உள்ளது. அங்கு இவர் சீடரான வாகீச முனிவர் அமைத்த மடம் நெடுநாள் இருந்து காசிக்குமாரசாமி மடத்தால் பரிபாலிக்கப் பெற்றுச் சமீப காலத்தில் கை கழுவி விட்டாரென்று தெரிகிறது. முகரங்கி—மோரங்கி.

இங்குத் திருப்பனந்தாளில் மடம் அமைத்தார் என்று தொடங்கிப் பின்னர்க் காசிமடத்தில் வீற்றிருந்த தலைவர்கள் பற்றிய குறிப்பும் தம் காலத்தில் இருந்த இராமலிங்க சுவாமி களுடைய விருப்பத்தின்படி தாம் இந்தச் சரித்திரத்தை எழுதியதான குறிப்பும் மீனாட்சிசுந்தரம்பிள்ளை கூறுகிறார்.

இனி, தருமைக் குருதேசிகன் முன்னால் சென்ற குமர குருபரரை அவர். "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்ற பாடலுக்கு அனுபவப் பொருள் கூறுக என்று கேட் டலும், அனுபவப் பொருள் கூற அறியாது, குருபரர் திகைத்து, இவரே இனி எனது ஞானகுரு என்று உணர்ந்து அவர் அடியில் வீழ்ந்து வணங்கித் தம்மை ஆட்கொள்ள வேண்டும் என்று வேண்டினார் என்பது காசி மடத்திலும் தருமையிலும் சொல்லப்படும் வரலாறு. ஆனால் பிள்ளை யவர்கள் பாடிய சரித்திரத்தில், "ஐந்து பேரறிவும்" என்று பாடலைக் குறிப்பிட்ட பிறகு ஐயரவர்கள் எழுதியுள்ள குறிப்பு முன்னம் தரப்பட்டது. மேலும் வழங்கும் சரித்திரத் துக்கும் இவ் வரலாற்றுக்கும் நிரம்ப வேறுபாடு காணப் படுகிறது. அவற்றை ஆராயப்புகின் விரியும். அது அவசியமு மில்லை. பிள்ளையவர்கள் காலத்தில் வரலாறு நன்கு தெரிய வில்லை என்பது மட்டுமல்ல, வரலாற்றைத் திரித்துப் பொய்யாகவே பாடும்படி அவருக்குத் தூண்டுதல். விளக்கம் வேறிடத்தில் உள்ளது. யாரோ சொன்னதை வைத்து அவர் இப்படிப் பாடினார் என்றே கருத வேண்டும். இதைச் சரியான வரலாறாகக் கொள்ளவியலாது.

பிள்ளையவர்களுக்கு இயல்பாகக் குமரகுருபர சுவாமி களிடம் அளவற்ற ஈடுபாடு. அதனோடு கூட அவரைப் போற்றி வளர்த்தது, திருவாவடுதுறை மடம். பின்னும் சொல்லப் போனால் திருவாவடுதுறை மடத்துக்கும், தரும புரம் மடத்துக்கும் நல்லுறவு அக்காலத்தில் இல்லை. இந்தத்

தன்மைகள் எல்லாம் இவர் எழுதிய குமரகுருபர சுவாமிகள் எழுதிய சரித்திரப் புத்தகத்தைப் பாதித்திருக்கிறது என்பது உண்மை.

அன்றியும் இவ்வரலாறு பாடும்படி தம்மைக் கேட்டவர் இராமலிங்கத் தம்பிரான் என்பவர். இவர் காசிமடத்தில் தலைவராயிருந்த காலம் 1853-1880. மீனாட்சிசுந்தரம் பிள்ளை காலமானது 1876 இல் இதற்கு முன் இவ்வரலாற்றைப் பாடி முடித்திருக்கிறார். சுமார் 1870-1872 கடைசிக் காலத்தில் இந்த இராமலிங்கத் தம்பிரான் குமார சுவாமித் தம்பிரான் என்பவரைத் திருவாவடுதுறையிலிருந்து கொண்டு போய்த் திருப்பனந்தாளில் அமர்த்தினார். இதனால் விளைந்தது பெரும்பூசல். அதாவது திருப்பனந்தாளில் தருமபுரத்துச் சீடரல்லாமல் திருவாவடுதுறைச் சீடர் இருந்த காலம் 1880 முதல் 1894வரை பிள்ளையவர்கள் 1896இல் காலமான போதிலுங் கூட அப்போதே தருமபுரத்திடம் பகைமை ஏற்பட்டு விட்டது. இத்தன்மைகளும் அவர் எழுதிய சரித்திரத்தைப் பாதித்திருக்கின்றன என்பதை மறுக்க முடியாது.

பிள்ளையவர்கள் சிறந்த சிவபக்தரானமையால் அவர் குமரகுருபரருடைய தலயாத்திரையைக் கூறும்போது. பாண்டி நாட்டுத்தலங்கள் முழுமையும், சோழ நாட்டு வடகரை, சோழ நாட்டுத் தென்கரை, நடுநாடு, தொண்டை நாடு ஆகிய பகுதிகளிலுள்ள தலங்கள் பெரும் பகுதியும் குறிப்பிட்டு வருகிறார் என்று நாம் காண்கிறோம்.

வரலாற்றில் குமரகுருபர சுவாமிகள் மதுரை திருவாரூர் சென்றது யாத்திரையாகத் தெரியவில்லை. ஆனால் இவர் யாத்திரை என்றே பெருக்கிக் கற்பனையாக விரித்துச் சொல்கிறார். சொல்லுமிடத்துப் பாடல் பெறாத தலமாகிய வழுவூர் முதலியனவும் சேர்த்துச் சொல்லப் பெறுகின்றன.

நூல் இறுதியில் இவர் முகரங்கியில் மடம் அமைத்த செய்தியை ஒரு பாடலால் சொல்லுகிறார். இச்செய்தி வேறெங்குமே குறிப்பிடப் பெறாதது. ஆனால் 10 Madras தீர்ப்பில் மோரங்கி மடம் என்று இது விரிவாகச் சொல்லப் பெறுகிறது.

மாதவத் துயர்ந்தா ராய வாகீச முனியை நோக்கிக்
காதல் செய் விபூதிக் கேற்ற கண்மணி விளையும் பூமி
மேதகக் கொளினன் றென்ன வவர் முகரங்கி மேவி
யோதுமப் பூமி கைக்கொண் டுயர்மட மொன்று செய்தார்.

இராமலிங்கர் பணியில் சில இவர் சொல்லுகிறார். திருவாய்ப்பாடி கோயில் திருப்பணி, தில்லை சேய்ஞலூர், திருப்பனந்தாள் திருலோக்கி, திருவாலவாய் கட்டளைகள். பிறகு கும்பாபிடேகம் சில, இங்கு கல்லால் கட்டிய மடம் மடத்தில் ஆசான் திருஉருவ பிரதிட்டை முதலியன குறிப்பிடுகிறார்.

பிள்ளையவர்கள் இராமலிங்கத் தம்பிரான் காலமாவதற்கு (1880) நான்கு ஆண்டுகள் முன்னமே (1876) இல் காலமாகி விட்டார். ஆதலால் இத் தம்பிரானுக்குப் பின் மரபு சீர் கெட்டதை இவர் எப்படிச் சொல்வார் என்று அறிய வழியில்லை. அதன் பின் திருப்பனந்தாளில் குமரகுருபரருக்குப் பின் பட்டத்திலிருந்து சுவாமிகளையும் அவர்கள் முத்தி பெற்ற தினங்களையும் முறை பிறழாது திருத்தமாக 14 ஆம் பட்டம் இராமலிங்கத் தம்பிரான் வரையில் 23 பாடல்களில் சொல்லுகிறார். குமரகுருபரர் சொக்கநாதர், அருணாசலர், அம்பலவாணர், சடையப்பர் தில்லை நாயகம் வரையில். இவர்களுடைய செயல்கள் எதையும் சொல்ல வில்லை. தில்லை நாயகர் திருப்பனந்தாளில் மடமொன்று உண்டு பண்ணினார் என்று பாடுகிறார். இவருக்குப்பின் மற்றொரு குமர குருபரர், சிதம்பர நாதர், சடையப்பர், கணபதி

இராமலிங்கர், சொக்கலிங்கர், கணபதி, இராமலிங்கம் என்று 14 பேரையும் நன்கு சொல்லுகிறார். அடுத்து தம் காலத்தவரும் இச்சரித்திரம் பாடுவித்தவருமாகிய இராம லிங்கரை 22 பாடல்களால் போற்றுகிறார்.

பிள்ளை அவர்கள் 1876 இல் சிவபதம் அடைந்தார். பின்னர் காசிமடத்தைப் பரிபாலித்தவர்கள் பெயர் அவர் தெரிந்து கூறியிருக்க முடியாது. பின்னர் சொக்கநாத முனிவர், அருணாசல முனிவர், அம்பலவாண தேவர், சடையப்ப தேவர், தில்லைநாயக சுவாமி, முந்திய ஆசான் நாமம் பெற்றவர் (குமரகுருபரர்) சிதம்பர நாதர், இரண் டாம் சடையப்பர், கணபதி சுவாமிகள், முதலாம் ராமலிங்க சுவாமிகள், பின்னர் (திருவாவடுதுறை) இடையீடு - 1880 முதல் 1894 வரை; குமாரசாமித் தம்பிரான், கந்தசாமித் தம்பிரான் ஆகிய இருவர், பொன்னம்பல சுவாமி 1894-1898, சோமசுந்தர சுவாமி 1898-1914, இரண்டாம் சொக்கலிங்கர் 1914-1919, சொக்கலிங்கர் (3) - 1919-1930, சுவாமிநாத சுவாமி 1930-1944, அருள் நந்தி சுவாமி 1944-1972, முத்துக்குமரசுவாமித் தம்பிரான் 18-5-1972 முதல் இருந்து வருகிறார். இந்த நூல் செய்வித்தவர். (மகாலிங்க சுவாமி வியாஜ்ஜிய காலம்)

பிள்ளை அவர்கள் தருமபுரத்தில் சந்நிதானமாய் இருந்த மாசிலாமணி தேசிகர் இடத்தில் உபதேசம் பெற்ற குமர குருபரர், திருவாவடுதுறை ஆதினத்தில் இருவேலப்ப தேசிகர் இடத்திலும் உபதேசம் பெற்ற சிவஞான யோகிகள் ஆகிய இருவர் வாழ்க்கையையும் சரித்திரங்களாக (புராணம் போல) பாடத் தொடங்கினார். குமரகுருபரருடைய சரித் திரத்தை 338 பாடல்களால் பாடி முடித்தார். ஆனால் சிவஞான யோகிகள் சரித்திரத்தைத் தொடங்கி நாட்டுச் சிறப்பு சொல்லுமிடத்தில், நடுநாட்டுச் சிறப்பைச் சொல்லத்

தொடங்கி 203-ம் பாடல் 'மருவுலகங்களிதூங்க' என்ற பாடலுக்கு அப்பால் போகவில்லை. பின்னர் ஒரு காலத்திலும் அவர் அதை முடிக்கவில்லை. சரித்திரம் அவ்வளவோடு நின்றுவிட்டது.

மருவுலகங் களிதூங்க வண்சமயா சாரியராம்
இருவர்களுஞ் சந்தானத் திருவர்களும் அவதரிக்கப்
பெருகுதவஞ் செய்ததெனிற் பிறங்குவள நடுநாட்டின்
அருகுதவிர் சிறப்புரைக்க அடியேனால் ஆகுவதோ.

''இந்த நாட்டின் சிறப்புரைக்க அடியேனால் ஆகுவதோ'' என்று அவர் பாடியது அப்படியே நின்றுவிட்டது.

[இங்குச் சொல்லப்பட்டவை சைவ மரபுக்கு மாறானவை மகாவித்துவான் மடத்திலேயே சிலகாலம் புகழோடு வாழ்ந்தவர். மரபுகளை நன்கு அறிந்தவர். இவர் இவ்வாறு மரபு வழுவிப் பாடியதற்கு ஒருகாரணம் உண்டு. அது முன் குறிப்பிடப்பட்டது. சடை, யாரும் வளர்க்கலாம். ஆறு கட்டி சுந்தரவேடம் என்பன ஆசாரியன் அளிப்பன. ஆசாரியனாக வந்த முருகன் இவற்றைச் சிறுவருக்கு அளிக்கவில்லை. இவை தானாக எடுத்து அணிந்து கொள்வனவும் அல்ல. ஆறுகட்டி சுந்தரவேடம் பரிவட்டம் என்பன ஒரு தொடர். இந்தச் சந்தர்ப்பத்தில் பரிவட்டம் என்பது காவி ஆடை. இதுவும் ஒருவர் எடுத்துத்தாமே அணிந்து கொள்வது அல்ல. பிறர் கொடுக்க வாங்கி அணிவது. பரிவட்டம் தலையில் அணியும் பாகை போன்ற காவி ஆடை. அது ஒரு கொள்கைச் சின்னம், வெறும் காவித்துணி அன்று. எனவே இவ்விடத்தில் மகா வித்துவான் கூற்றுக்கள் முழுமையும் பிழை. இராமலிங்கத் தம்பிரானைத் திருப்தி செய்வதற்காக மனமறிந்து செய்த பிழை ]

அனுபந்தம் : 2

## தண்டபாணி சுவாமிகள் பாடிய புலவர் புராணம்

தண்டபாணி சுவாமிகள் பாடிய புலவர் புராணத்தி லுள்ள குமர குருபரர் வரலாறு முன்னமே குறிப்பிடப் பட்டது. அந்த வரலாற்றில் சம்பிரதாயமாக வழங்கும் வரலாற்றுக்கு நிரம்ப வேறுபாடு காணப்படுகின்றது. வேறு பாடுகளை மட்டும் கிழே காட்டுகிறோம்.

குழந்தையோடு திருச்செந்தூர் சென்று மகன் ஒரு மண்டலத்தில் பேசவேண்டும் என்று பிரார்த்தித்து விரதம் இருந்த பெற்றோர் உப்பில்லா வெற்றன்னம் ஒருபோது உண்டு உறங்காராய் விரதம் காத்தார். ஒரு மண்டல காலத்தின் இறுதி நாள் அருச்சகன் மீது ஆவேசமாக அங்கை வேல் எடுத்து நீரும் தீர்த்தமும் கொடுத்துப் பண்டைவினைத் திறம் தீர நோக்கினான் பூ என்னப்புகன்றான். அம்மொழி பற்றி அப்புத்திரன் பஃறொடை. வெண்பா பகர்ந்தான். பின்னர் அவன் தருமபுரம் சென்றான் மடத்து அதிபர் மாசிலாமணி இவன் வருவதை உணர்ந்து இனிய பரிகலம் எடுத்துத் தொன்னையில் வைத்திருக்கச் சொன்னார். வந்த குமரகுருபரருக்கு அம்முனியே திருச்செந்தூர் ஆசானாகக் கண்களில் தோன்றினார். முனிவர் சிறுவரைத்தழுவிக் குஞ்சிதபாத நிலைமை உணர்வித்துப் பரிகலமும் சிவ வேடமும் ஈந்தார். ஞான குருபரன் மகிமை உணர மாட்டா தார், போனவரைத் திருத்தொண்டர் புராணத்தின் கவி ஒன்றால் ஈனமுறச் செயித்து ஆண்டான் என்பர். அப்படி அல்ல. குருவின் கட்டளைப்படி காசி நோக்கினார். மீனாட்சி அம்மை விழைந்ததனால் 'கார்கொண்ட' என்றெடுத்துப் பிள்ளைக் கவி பாடினார். அரங்கேற்ற எண்ணித் திருமலை நாயக்கன் அரண்மனை செல்லவே அது முடியாமல் உத்தரவாயிலில் துயின்றார். அம்பிகை நாயக்கன் கனவில் தோன்றிப் பிள்ளைக் கவியை அரங்கேற்று மாறு சொல்லவும், அவன் அவ்வாறே ஆனை மேல் ஊர்

வலம் வைத்து அரங்கேற்றம் செய்தான். வாரானைப்பருவம் தொடங்கலும் அம்பிகை பட்டர் தம் மகளாகி அரசன் மடியில் அமர்ந்திருந்து நூல் முற்றியதும் மறைந்தாள். அவையினர் அம்பிகையின் கருணையை உணர்ந்தனர். பின்னர் இவர் குருசந்நிதியைச் சேர எண்ணிப் புள்ளிருக்கும் வேளூர் வர எண்ணியபோது குமரன் 'என்னைத் துதித்து ஏகுதி' எனலும் இவர் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் பாடினார்.

பின்னும் எத்தனைத் தலமோ விதிப்படி தொழுது தில்லையில் போய்ச் செய்யுட் கோவை பாடிக் காசியில் கலம்பகம் பாடினார். நீதிநெறி விளக்கமும் கலைமகள் மாலையும் பின் வேறு சில பனுவலும் பகர்ந்தார். பாடிய நூல் மூந்நான்கு. அங்கு மிலேச்ச மன்னரைக் கண்டார். 'யார் நீ?' என வினவலும் அண்டர் நாயகன் அடிமை என்றார். அவன் யாவர்க்கும் பொதுவனோ? எனக் கேட்டலும் இவர் 'ஆம்' என்றார். 'எம்மொடு உண்பாயா' என அவன் கேட்க அவன் மாமிசம் உண்பவன் என இவர் அறிந்திருந்த படியால் 'எம் குரு மாமிசம் தின்னச் செப்பிடவில்லை' என்றார். அதன் மேல் அவன் 'இங்கு தெய்வீகம் ஒன்றேனும் இயற்றுதி' என்று சொன்னான். இவர் இரவில் இறைவனை வேண்ட, இறைவன் அந்த மன்னன் நிதம் தொழும் குருவாகி, அவன் விருப்பம் ஈந்து அனுப்புதி சீக்கிரம் என்றார். கனாக் கண்ட மன்னன் காலையில் இவரைக் கண்டு "எம் மக்க தேசிகன் உன் பெருமையை எனக்குச் சொன்னான், உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான். அதன் மேல் இவர் காசியில் 64 மடம் அமைக்க வேண்டும் என்றார். அரசன் அப்படியே விரைந்து விண்ணவரும் வியக்கும்படியாக எல்லாம் செய் தான். குமரகுருபரர் மேகம் போல் உலகத்துக்கு நன்மை செய்து வந்தார். பின்னர் அவ்வூர் வைரப் பெருமானுள், கங்கையில் சிறிய புனல் புகுதல் போலக் கலந்து ஒன்றானார். அவருக்கு மற்றொரு பிறப்பு இல்லை.

படிக்காசுப் புலவன் குமரகுருபரர் பணி செய்தனன் என்று சிலர் சொல்வார்கள்.

இவற்றுள் தருமைக் குருவின் சந்நிதியில் குமரகுருபரர் வாக்குத் தடைப்பட்ட செய்தியைத் தண்டபாணி சுவாமிகள் ஒப்புக் கொள்ளவில்லை. மற்றப்படி செய்திகளும் முன் பின்னாக வரிசை மாறி உள்ளன. காரணம் இந்த சுவாமிகள் செவி வழியாகவே செய்திகளைக் கேட்டு ஆராயாமல் பாடியது.

தண்டபாணி சுவாமிகளுக்குக் குமரகுருபரர் வரலாற்றுச் செய்திகள் பலவும் நிகழ்ந்த முறையில் எட்டவில்லை. தாம் கேள்விப்பட்டவற்றை அவர் எப்படியோ கோத்து ஒரு வரலாறாகப் பாடிவிட்டார். அது உண்மை வரலாறாக முடியாது. இப்படியேதான் அவர் பாடிய மற்றெல்லாப் புலவர் வரலாறுகளும், அவர் வேண்டுமென்றே சரித்திரத்தை மாற்றவில்லை. முன்பின் திருத்தமாக அறியாமையால் தெரிந்த அளவு கோத்து வைத்தார் என்றே சொல்லலாம்.

அனுபந்தம் : 3

## சேய்த் தொண்டர் புராணம்

குகன் முருகனடியார் வரலாறு என்று இந்த விரிவான 3833 பாடல் கொண்ட புராணத்தைக் தேனூர் வீரகவி வே. செ. சொக்கலிங்கனார் அவர்களைக் கொண்டு பாடச் செய்து, திருப்புகழ் முழுமைக்கும் உரை செய்து வெளியிட்ட வரும் ஒப்பற்ற முருக பக்தருமாகிய தணிகைமணி ராவ் பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை டிசம்பர் 1960இல் வெளியிட்ட பெருநூல். இதன் அமைப்பு முழுமையும் சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத்தை அடி ஒற்றியது. தேவாரத் திருமுறை முதலியன போலவே

இவரும் இந்தச் சேய்த் தொண்டர் புராணத்தைப் பன்னிரு திருமுறைகளாக வகுத்து முருகனைப் புகழ்ந்து பாடியுள்ள புலவர் ஒவ்வொருவருக்கும் நாயனார் என்ற பெயர் கொடுத்து நூலையும் திருத்தொண்டர் புராணத்தைப் பின் பற்றி காண்டம், சருக்கம் என பாகுபாடு செய்து வெளியிட்டு இருக்கிறார். இது முருகனுக்குரிய பன்னிரெண்டாம் திருமுறை எனப் பெயர் பெறுகிறது. இதனுள், குமரகுருபர சுவாமிகள் சரிதம், குமரகுருபரர் சுவாமிகள் புராணம் என்ற பெயரில் 3-குமரகுருபரர் சருக்கத்தில் 280 பாடல் களாய் அமைந்து இருக்கிறது. இந்த நூல் பாடப்பட்ட காலம் கி. பி. 1968. முந்தையோர் கூறிய கதைகளுக்கு மேலாக இவ் ஆசிரியர் தாமாகப் பல விளக்கங்களைச் சேர்த்து இருக்கிறார். புலவர் புராணம் பாடியவரே கதைகளோடு தம் உள்ளத்தில் முருகப் பெருமான் தோற்றுவித்த கருத்துக் களையும் சேர்த்துப் பாடியிருப்பதாக எழுதியிருக்கிறார். அவர் பாடிய காலம் அதற்கு பல ஆண்டுகள் பிற்பட்டிருந்த அந் நாளில் பின்னும் பல கற்பனைகள் சேர்ந்து இருக் கின்றன. அவற்றில் சாரமானவற்றை இங்குத் தொகுத்துச் சொல்கிறோம்.

குமரகுருபரர் கயிலாய புரத்தில் சண்முக சிகாமணி, சிவகாம சுந்தரி என்போர் புதல்வராய்ப் பிறந்தார். பெற்றோர் புத்திரப் பேறு இல்லாதிருந்து பின் புத்திரப் பேறு அளிக்காவிட்டால் உயிர் துறப்போம் என்று சூளுரைத்து விரதம் இருந்து, பின்னர் இக் குழந்தையைப் பெற்றார்கள், 5 வயது வரையில் அப் பிள்ளை ஓர் மழலைச் சொல்லேனும் அறைந்திலர் மருந்துக்கெனும் புதல்வருடைய ஊனம் கலைந்து கந்தவேள் ஆட்கொள்ளும் காலமும் குறுக பெற்றோர் செந்திலம் பதியை நோக்கி நடந்தனர், மைந்தர் செல்வரோடும் வழியில் ஆழ்வார் திருநகரி கடந்து காயல் பட்டினம் வந்து பின்னர் செந்தில் அடைந்து அங்கு குக

சகோதர துண்டி விநாயகர் பவனம் எய்தினார். முருகன் கோயில் வலம் வந்து அவனைப் போற்றி நாள் இருபதிற்று இரட்டிமேல் நாளிரண்டு நாள் எய்துமுன் புதல்வன் மூங்கையை நீக்கிப் பேசுமாறு வேண்டினர். இல்லையேல் கடலில் வீழ்ந்து உயிர் விடுவோம் என்றார்கள். 47 நாள் சென்றபின் குழந்தை துயில் செய்கையில் விடிய ஓர் யாம வேளையில் முருகன் குமரகுருபரா என்று அழைத்துக் கரத்தினால் தொட்டு எழுப்பி குழந்தையின் ஊன முத்திரை தனைக்கலைத்து தன் உபய பூங்கழல்களை முடியிற் சூட்டி உலகியல்பனைத்தும் உணர்த்தி நாவை நீட்ட என வினவினார். சுத்த முத்தமிழினோடு ஆறக்கரம் பொதித்து நம் விசுவரூபம் காண் எனக் கூறித் திருவாய் மலர்ந்து மறைந் தான். குழந்தை பெற்றோரை எழுப்பி நிகழ்ந்தது கூறலும் அவர்கள் குழந்தையோடு முருக தரிசனத்துக்குச் சென்றார்கள்.

குழந்தை அங்கு 'பூமேவு செங்கமலப் புத்தேளும்' என்று எடுத்து செந்தூர்க் கந்தர்கலி வெண்பாவைப் பாடினார். பெரியோர் பலரும் இவர் தீர்க்கதரிசி, கௌமார மார்க்கத் தினை வளர்ப்பான் வந்து அவதரித்தவன் என்று கொண்டா டினார். குருகடாட்சம் ஒரு நான் என்றோ என்று ஆலய வலம் செய்தார். அப்போது "நின் அமுத வாக்கு தடைப் படும் இடத்தை நீ நின் சீல சற்குருவாய்க் கொள்" என்று எழுந்ததோர் தெய்வ வாக்கு. பின் கந்தக் கடவுள் சந்நிதி நீங்கி சண்முக விலாசம் புக்கு அயின்றனர். திரு அமுதம். பின் செந்தில் பதியினை அகன்று தமது ஊர் சென்றார். பின்பு உரிய நாளில் பெற்றோர் தல யாத்திரை தொடங்க, இவர் அவரைத் தொடர்ந்து கானப்பேர் சென்றார். பின்னர் அதை நீங்கி மதுராபுரி அங்கயற்கண்ணம்மை பிள்ளைத் தமிழ் பாடி நடந்து பரங்குன்று வந்தார், அங்கு தரிசித்து மதுரை அடைந்தார். மன்னன் கனவில் அம்மை

எழுந்தருளி முருகன் ஆட்கொண்ட அன்பன் எம்மைத் தொழுது. பிள்ளைத் தமிழ் பாடினான் அதனை நமது சந்நிதியில் அரங்கேற்று'' என்று கட்டளையிட்டார். அப்படியே அரசன் நகரை அலங்கரித்து பரங்குன்று நோக்கி வந்து செல்வர் இடத்து தன் கனவை உரைத்து, மதுரை நோக்கி அழைத்துச் சென்றான். சின்னங்கள் அரற்ற மதுரை நகர் புகுந்து கோயிலில் அரங்கேற்ற ஏற்பாடுகள் அரசன் நடத்தினான். தினம் ஒவ்வொரு உருவம் அம்மை அர்ச்சகர் மகள்போல் வந்து அரசன் மடிமீது எழுந்தருளி னார். வருகைப் பருவத்தில் தொடுக்கும் கடவுள் என்ற பாடலை இன்னும் ஒருகால் அறைதி என்று அம்மை சொல்ல இவர் அங்ஙனமே சொல்லிக் கேட்ட அம்மை அரசன் மடிமீது எழுந்தருளி மறைந்தாள். முத்தப் பருவம் முடியுங்கால் முத்துவடம் ஒன்றை இவர் புயத்திட்டு அம்மை மறைந்தாள். பருவம் பத்தும் முடிந்தன. அரசன் இவரை அரியாசனத்தில் அமர்வித்து வணங்கிப் பல சிறப்புச் செய் தான். குமரகுருபரர் அதன்பின் மீனாட்சி அம்மை இரட்டை மணி மாலையும், மதுரைக் கலம்பகமும் பாடினார். அரசன் வருடம் 20,000 பொன் வருவாயுடைய அரியநாயகபுரம் இவருக்கு அளித்தான். பின்னர் அரசனிடத்து விடை பெற்று திருமாநகரைக் கடந்து முருகன் தலங்கள் பல தரிசித்து சேய்நல்லூர் அடைந்தார். அங்கு வணங்கி, திருவானைக்கா பணிந்தார்.

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்னும் வைணவப் பெரியார் வாதாடித் தோற்றோடினார். பின் திருவானைக்கா வணங்கி இவ்வாசிரியர் ஊராகியதோர், முருகனை வணங்கி பின் தரளகிரி திருப்பைஞ்ஞீலி மீண்டும் திருவானைக்கா அகிலாண்ட நாயகியை வணங்கி குடகாவிரி கடந்து, காவிரி நாட்டில் குகன் தலங்கள் பலவும் பணிந்து, திருவாரூர் சென்றார், அங்குத் திருநான்மணிமாலை பாடி அங்கிருந்து

தருமபுரம் அடைந்தார். அங்கு ஆதீனத்துக் குருபீடத்து உறையும் அடிகட்குத் தம் வரவைச் சொல்லி அனுப்பினார். தம் பரிவாரங்களை நிறுத்தி அரியாசன மீது அமர்ந்தருளும் அடிகள் திருமுன் அணுகினார். அவர் பரிவாய் 'வருக' என்றார். அன்னார் பாதம் பணியாராய்ச் சரியாசனமுற்று எமது அடிகள் 'தர்க்கமிடலாம்' என்றார். அவர் வினாக்களுக்கெல்லாம் தக்க விடை இறுத்தார். அதன் மேல் மாசிலாமணி என்ற பெயர் கொண்ட அந்தத் தேசிகர் அறுபத்து மூவர் புராணத்து 'ஐந்துபேர் அறிவும்' என்ற பாசுரத்துக்குப் பொருள் யாது என வினவ, குமரகுருபரர் வாக்குத் தடைப்பட்டது. இவர் உடனே திடுக்கிட்டு ஆசனத்தை விட்டு இறங்கி தமக்கு அசரீரி ஓதிய வாக்குப் பலித்தது என்ற வாறு மேலாடையை இடையில் அணிந்து தேசிகரை மீண்டும் பணிந்தார். அவர் இவரை எடுத்தணைத்து 'மைந்த நீ எம்மை இகழ்ந்தமை குறியோம். ஆயினும் நீ இயற்கையாய் ஒரு பெரும் பிழையை அகழ்ந்திடற்கு ஒரு மண்டலம் தில்லை அம்பலம் தொழுது மீள்' என்றுச் சொல்லி வெண்ணீறு அருளினார். பின்னர் குமரகுருபரர் தில்லை நோக்கிச் சென்றார். புள்ளிருக்கு வேளூர் அடைந்தார். அங்கு குமரேசன் ஆலய வாயிலின்முன் பணிந்து சொல் . மலர் மாலைகள் பல புனைந்தார். மறுநாள் காலை இவர் குமரன்முன் வணங்குதலும் குருக்கள் வடிவில் குமரன் இவர் முன்வந்து திருநீறு அளித்து எமக்கு உன் திருவாயால் பிள்ளைத்தமிழ் ஒன்று அறைதி என்று சொல்லி மறைந்தார். அதுகேட்டு அடிகள் 'பொன் பூத்த' என்று எடுத்து அத்திமுகனைத் தொழுது பின் பல தேவதைகள் காப்பு என வாய் மலர்ந்து, பத்துப் பருவமும் பாடி அப்பாற் செல்லும்போது, கண்டவர்கள் 'குமரவேளுக்கு நிகரற்ற தமிழ் பாடியவர் வருகிறார்' என்று கொண்டாடினார்கள். தில்லை நகர் அடைந்து கோபுரம் கண்டு கனகசபை அடைந்து செம்மணி என்று

எடுத்து மும்மணிக் கோவையும், இரட்டை மணிக் கோவையும் இறைஞ்சி மொழிந்தார். பின் அங்குள்ள அன்பர்கள் அவரை இறைஞ்சி யாப்பனைத்தையும் கொண்ட நூல் அருளும்படி வேண்டலும் இவர் அப்படியே யாப்பமைப் பின் பாகுபாடு எலாம் உறச் சிதம்பரச் செய்யுட்கோவை எனும் நூல் சிறந்த நூல் என அருளினார். அங்கிருந்து தாய்நாடிக் கன்று துள்ளித் தாவி ஊட்டச் செல்வதுபோல் இவர் குருவின் சந்நிதித்தான முற்றார். அவர் இவரை எடுத்தணைத்துத் துறவறச் சின்னம் சூட்டி மூல மந்திரம் உணர்த்தி அடிமை கொண்டருளினார். இவர் அந்த நிலையில் குருதோத்திரமாகப் பண்டார மும்மணிக் கோவை பாடினார். மதுரை மன்னவன் அளித்த பொருள் யாவையும் குருவின் பாதத்தில் காணிக்கையாக வைத்தார். குரு வானவர் ''நீ இவற்றை எடுத்துக்கொண்டு காசியுற்று அங்கு அறம்புரிதியால்'' என்று உத்தரவளித்தார்.

அதன் மேல் குமரகுருபரர் இரவும் பகலும் நடந்து பல மாதங்கள் பல தலங்கள் தொழுது புனல் நாடு கடந்து, நடு நாட்டினில் பல தலங்களும் தொழுது தோயம் பல குடைந்து தொண்டை நாடு அடைந்து காஞ்சி நகர் அடைந்தார். அங்கு குமரன் தலங்கள் பல தரிசித்து தெலுங்கு நாடு அடைந்தார். அங்கு சிம்மாசலம் தொழுது, கலிங்கம், கஞ்சம் கடந்து காசி நகர் அடைந்தார். அங்கு ஒரு கூடாரம் அமைத்து அதில் தங்கி முருகன் ஆலயம் காணாது துயரால் புழுங்கினார். இரவில் அவர் கனவில் முருகன் எழுந்தருளி ஓர் இடத்தைக் குறிப்பிட்டு 'இங்கு நாம் இருக்கின்றோம்'' என்று காட்டினார். காலை எழுந்த குமரகுருபரர் அந்த இடத்தைக் காடழித்துப் பார்க்கும்போது ஒரு சிவாலயம் கண்டார். அங்குத் தொண்டாற்றி விளக்கேற்றி அகிலேசர் மைந்தன் சந்நிதி அடைந்தார். அக்கோயிலுக்குக் காசிக் கலம்பகம் என்ற ஓர் நூல் பாடினார், சகலகலா வல்லி

மாலை சொற்றார். அரசன் முன்னர் செல்லவும் அவன் இவர் கழல் பணியாது இருக்க அவரை ஏன் பணியவில்லை என்று கேட்டார்.

அதற்கு மன்னன் "நீர் துறவி, நும் பால் அற்புதம் விளங்கக் காணில் அப்போது என் மன மொழி மெய்யால் உம்மை வணங்கி வரவேற்று ஆதரிப்பேன்" எனவும், அடிகள் "நாளை உன்னிடத்து அற்புதம் செய்துகாட்டுவேன்" என்று சொல்லி இருக்கை புகுந்து இறைவனை "பாய் கேசரி அருள்" என்று வேண்டினார். முருகன் அருளால் மாகாளி சந்நிதியில் இருந்த சிங்கம் அடிகள் முன் வந்து நின்று வணங்கி நின்றது. அவர் அதில் ஆரோகணித்து அரசன் அவைக்குச் செல்ல அங்கிருந்தோர் கண்டு அஞ்சினர். அவனும் வணங்கி "மன்னியும்" என்று கேட்டான். பின் அவர் அச்சத்தைக் கண்டு இனி இது உன் கண்ணில் 'வெள் விடை போல் பொலியும்' என்றார். அரசன் "உமக்கு எதுவும் செய்கிறேன்" என்று பணிய, அவர் சொல்லவே அவன் அவருக்கு பொருளும், புலங்களும், மானியமாய் சாசனம் மூலம் வழங்கினான். பின்னர் மறுநாள் தொடங்கிக் கோயிலும், விழாக்களும் தொடங்கி நடத்தினார். மடாலயம் நிறுவப்பட்டது. அவர் கனவில் "உபய கருடன் வட்டமிடும் இடத்தைக் கேள்" என்று அறிவுறுத்த, அடிகள் அவ்வாறே அரசனிடம் கேட்டுப் பெற்று அங்கு மடம் கட்டினார். மன்னன் மந்திரிகளுடன் சென்று உபயகருடன் வட்டமிட்ட பகுதி துருக்கர் தொழும் பள்ளி இறுதி வரை என்று சொல்லவே அவன் "தான் அளித்தது அளித்தது தர்ன்" என்று சொன்னான். அப்படியே குமாரசாமி மடம் அமைந்தது. அங்கு அரசன் ஆணையினால் தெய்வ விழா நடத்தி இரவு பகலாய் அன்னதானம் செய்தார்.

அரசனுடைய மதபோதகர் சொல்லியவாறு இவர் மன்னன் அவையில் கொழுந்துவிட்டு எரியும் செங்கனலில்

பழுக்கக் காய்ச்சிய ஓர் கரும்பொற் றண்டைக் கரத்து ஏந்திச் சிவசண்முகனே யாவர்க்கும் தெய்வம், சைவ சமயமே தலையாய சமயம் என்று காட்டினார். பின்னர் அவர்கள் இவரை அரசன் 'விருந்துக்கு வருக' என அழைக்க இவர் அங்ஙனமே செல்லவே அசைவக் குழம்பு பலவும் செய்து அளிக்க, இவர் பன்றி மாமிசம் மட்டும் குறைகிறதே யான் கொண்டு வந்தேன் என்று அதையும் சமைக்கும்படி சொல்ல துருக்கர் தலைகவிழ்ந்தனர்.

பின்வர் இவர் தருமபுரம் வந்து குருவை வணங்கி மீண்டும் காசிக்கு வந்து அறங்களை நடத்திக் கொண்டிருந் தார். உரிய காலத்தில் குகத்துறக்கம் புகுந்தார்.

இவ்வாறு குமரகுருபரர் வரலாற்றில் புலவர் புராண முடையார் சேய்த் தொண்டர் புராணமுடையார் பின்னும் பலர் இதே போல் தவறான கதைகளைப் புனைந்து செருகி விட்டார்கள். சேய்த் தொண்டர் புராணத்திற்குக் காரண மாயிருந்த ராவ் பகதூர் செங்கல்வராயபிள்ளை தமிழ் நாடே கண்டிராத முருக பக்தர். அதனால் இங்கு விளைந்தது முழுப்பொய்ம்மையே.

அனுபந்தம் : 4

## துளசிதாசரும் பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும்

ஸ்ரீ சுவாமிகளையும் இவ்விருவரையும் பற்றி அநேகக் கதைகளை வரலாறு சொன்னோர் சொல்லி வரக் காண் கிறோம். யாவும் பொய்க்கதைகளே. துளசிதாசர் சுவாமி களுக்கு பலகாலம் முன்னே வாழ்ந்தவர். அய்யங்கார் சுவாமிகள் பற்றிய வாதங்கள் கீழானவை என்று சுவாமிகள் இவற்றிலிருந்து விலகியிருக்கும் மனப்பான்மையுடையவர். இவை பற்றிய உண்மை சிறிதும் இல்லை. இவ்விருவர் பற்றிய கதைகளையும் கீழே விளக்கிச் சொல்வோம்.

அனுபந்தம் : 5

## துளசிதாசர்

துளசிதாசரைப் பற்றிய குறிப்பு இங்கு ஆராயத்தக்கது. டாக்டர் ஐயரவர்கள் குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் தொகுதியை மிகவும் அருமையாக முன்னுரை, குறிப்புரை, பின்னுரைகளோடு, அமைத்திருக்கிறார். அதில் ஒரு செய்தி கவனிக்கத் தக்கது. சுவாமிகள் "தமது மடாலயத்தில் (காசியில்) புராண சாலை ஒன்று ஏற்படுத்தி அங்கே இந்துஸ்தானி பாஷையிலும், தமிழிலும், புராணப் பிரசங்கங்கள் செய்து வந்தார். "தமிழின் தலைசிறந்த பெருங்காப்பியமாகிய கம்பராமாயணத்தையும் அந்நாட்டு மக்கள் விரும்பியவாறு பிரசங்கம் செய்து வந்தார் என்பர். சில சமயங்களில் சிறந்த இராம பக்தராகிய துளசிதாசரி அந்தப் பிரசங்கங்களைக் கேட்டு உவந்தனர் என்றும், கம்ப ராமாயணத்துள் உள்ள கருத்துக்களைத் தாம் இந்துஸ்தானி மொழியில் இயற்றிய இராமாயணத்தில் அமைத்துக் கொண் டனர் என்றும் கூறுவர்."

இக்கருத்துச் சரி என்று கருதுவதற்கில்லை. குமரகுருபர சுவாமிகள் முத்தி பெற்றது 1688 என்பது வரலாறு. இவர் 70 ஆண்டுகள் வாழ்ந்தார் என்றாலும்கூட இவர் ஸ்ரீவைகுண்டத்தில் பிறந்த ஆண்டு 1610-1620க்கு இடைப் பட்டு இருத்தல்கூடும். பின்னால் இவர் திருச்செந்தூர், மதுரை, திருவாரூர், புள்ளிருக்குவேளூர், தருமபுரம், சிதம்பரம் என்றெல்லாம் சென்று பாடி, காசிக்குப் போயிருக் கிறார். இவர் காசிக்குச் சென்ற காலம் சுமார் 1645க்கு மேல் இருக்கக் கூடும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பாடிய முதல்நூல் கந்தர் கலிவெண்பா என்ற தோத்திர நூல் என்பது நாம் அறிவோம். இதில் அடங்கியுள்ள தொடர் கருத்துக்களை மூவகைப் பாகுபாட்டினுள் அடக்கிக் காட்டினோம். அவையாவன: முதலாவதாக சைவ சமயத்தின்படி சிவபெருமான் உயிர்

களுக்குக் கருணை பாலிக்கும் முறைமை, அதைச் சொல்லும் முகமாக அவனுடைய ஆறு திருமுகங்களின் அருட் குறிப்புக்கள், பின்னர், பன்னிரு கரங்களின் செயல்கள், திருவுருவ வருணனை, இரண்டாவதாக முருகன் திருவவ தாரச் சிறப்பு, சூர சம்மாரம், இருதிருமணங்கள் முடிவாகத் தமக்கு அருள் செய்ய வேண்டும் என்று வேண்டுகோள். இவ் வளவும் இந்தச் சிறு நூலிலேயே மிகச்சுருக்கமாய் ஆழ்ந்த அனுபவத்தோடும், அவர் பாடிய பிள்ளைப்பருவத்திற்கேற்ப வும் சொல்லப் பெறுகின்றன. இது அனேகருக்குப் பேராச்சரி யத்தை விளைவித்திருக்கிறது. எவ்வாறு எனில் ஐந்து வயதுச் சிறு குழந்தை சைவ சமயத் தோய்வு நிரம்பிய சைவ சித்தாந்த உண்மைகளை அநாயாசமாக எடுத்து வீசுகிறார். இது எவ்வாறு சாத்தியம் என்பது பலரையும் திகைக்க வைக்கிறது.

ஆனால் திகைப்பிற்கும், வியப்பிற்கும் இடம் இல்லை. குமர குருபரர் எந்தக் கௌமார சமயமும் பாடவில்லை. தமக்குத் திருச்செந்தூர்ச் சண்முக விலாசத்தில் அருள் செய்த முருகப் பெருமானைப் பரம் பொருளான சிவபெருமா னாகவே அவர் கண்டார். கண்டது முருகனுடைய திரு வுருவம் என்பதில் மாற்றம் இல்லை. இந்தக் காட்சி கிடைத்தது அருள்வசத்தால். அவ்வருள் காட்சியில் முருகனு டைய அருள் காட்சி என்றும், சிவபிரானுடைய அருள்காட்சி என்றும் வேறுபாடில்லை. ஆகவே இக்காட்சியானது சைவ சித்தாந்த ஞானத்தால் வரும் அருள் காட்சியே. இந்தச் சிறு நூலிலேயே தொடக்கப் பகுதியில் பதி இலக்கணமும், சிருஷ்டி காரணமும், மலபரி பாகம், இருவினை ஒப்பு, சத்திநிபாதம் ஆகியவற்றையும் உணர்த்தி பரசிவம் மானிடச் சட்டை சாத்தி குருபரன் என்று ஓர் திருப்பேர் கொண்டு குருவாக மண்மீது வந்து பிறப்பு, இறப்பு என்ற பிறவிக்கடலில் அகப் பட்டுத் துன்புறும் பக்குவ உயிரைக் கைகொடுத்துக் கரை

யேற்றுகிறது என்று பாடுகிறார். எல்லாம் சொல்லி முடிவாக வேண்டும் இடத்து மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் தம்மை அடியார் குழுவில் கூட்டி உலவாத பேரின்ப வாழ்வு தரவேண்டும் என்று வேண்டுகிறார்.

இந்த அனுபவம் ஐந்து வயதுச் சிறு பிள்ளையாக இருந்த இவருக்கு எப்படி உதித்தது என்று யாரும் ஐயுற வேண்டிய தில்லை. திருச்செந்தூரில் முருகன் பொழுது விடியும் நேரத் தில் இவருக்குக் கனவில் தோன்றி இவருக்குத் தம் உருவத்தைக் காட்டி அருள் செய்த போதே இவருக்குப் பூரண சிவஞானநிலை கைகூடியிருந்தது. ஆயினும் உலகியலைத் தழுவியே இவரை ஆட்கொள்ள வேண்டும் என்று முருகன் நினைத்தான் போலும். அதனால் இவருடைய உள்ளத்தில் ஞான குரு வேண்டும் என்ற அவாவை ஊட்டினான். வந்த முருகனே ஞானகுரு அல்லவா? ஏன் அந்த முருகன் அசரீரியாக இவருக்கு ''உன் வாக்கு தடைப்பட்ட இடமே அறிநீ ஞானகுரு'' என்று உணர்த்தி னான்? ஏன் இத்தகைய போக்கு. இவையெல்லாமே திரு வருளின் விளையாட்டு என்றுதான் கொள்ளவேண்டும். குழந்தையாகிய இந்த உயிர் பக்குவப்படுத்தப்பட வேண்டி யிருக்கிறது. அதுபற்றியே இவர் தருமபுரம் குருமுகமாக உணர்த்தப்பெறுகிறார். ஆனால் முருகனுக்கு ஆட்பட்டவர் ஆதலினாலே இவர் பின்னும் ஆட்பட வேண்டுமா? இந்த இடத்தில் திருஞான சம்பந்த மூர்த்தியின் தேவாரம் நமக்குத் தெளிவுபடுத்தும்.

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும், ஆதி மாண்பும்
கேட்பான் புகில்அளவில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார்.

முருகனிடத்தில் முதன்முதலாகத் திருச்செந்தூரில் கனவில் இவரை ஆட்கொண்ட போதே இவருக்குத் திருஞான

சம்பந்தர் போல எல்லா ஞானமும் கைகூடி விட்டன. இனி உலகில் இவர் உணர்த்தப்பெற வேண்டிய பொருள் வேறு ஏதுமில்லை. அதுமட்டுமின்றி இவரைப் பக்குவப்படுத்திய பிறகுதான் இவர் பதிலட்சணம் எல்லாம் அறிகிறார் என்று எண்ண வேண்டியதில்லை. ஆனால் திருஞானசம்பந்தர் காலம் வேறு, குமரகுருபரர் அவதாரம் செய்த காலம் வேறு. இரண்டுக்கும் இடையில் ஆயிரம் ஆண்டுகள் சென்றிருக்கின்றன. இக்காலத்தில் சைவ சித்தாந்தம் ஒரு பெரு நெறியாக முறைப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆசாரியார் - சீடர் அவர்களுக்கிடையே உள்ள தொடர்புகள், ஆன்மாக்களுக்கு இறைவன் உணர்த்தும் முறைமை இவையெல்லாம் வரையறை செய்யப்பெறுகின்றன. இந்த நிலையில் குமரகுருபரருக்குத் தொடக்கத்தில் எல்லா ஞானமும் கைவந்த போதிலும்கூட, குரு உபதேசம் என்பது சம்பிரதாயம். அந்த துளசிதாசருடைய காலம் 1497 முதல் 1623 வரை என்று இந்தி இலக்கிய வாணர் எழுதியிருக்கிறார். (இதன்படி துளசிதாசர் முக்திபெற்றபோது குமரகுருபரர் ஐந்து வயது ஊமைநிலையைக் கடந்திருக்க மாட்டார்). ஆதலால் 1623இல் முத்திபெற்ற துளசிதாசர் இதற்குப்பின் (1645) காசிக்கு வந்த குமரகுருபர சுவாமிகளுடைய பிரசங்கத்தைக் கேட்டிருத்தல் இயலாது. எனவே இது அபிமானத்தால் வந்த சொல்லேயாகும். உண்மையன்று.

ஆனால் நமக்கு ஒரு குறிப்பு கிடைக்கிறது, துளசிதாசர் காசி முதல் இராமேசுரம் வரையில்,

**யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்—**
**தத்ர தத்ர க்ருதமஸ்த காஞ்சலிம்**

என்று அனுமானைச் சொன்ன மாதிரி பல இடங்களிலும் சுற்றி இராமகதை பிரசிங்கிக்கப்பட்ட எல்லா இடங்களிலும் செவிமடுத்திருக்கிறார். வால்மீகியை ஒத்த பெருமையுடைய ஒரே இராமாயணம் கம்பருடைய இராமாயணம். அதை

அவர் நன்கு கேட்டு அனுபவித்திருக்கிறார். வால்மீகியில் இல்லாத பல செய்திகள் கம்பரில் இருப்பது கேள்வியால் இவர் தெரிந்து தம்முடைய கருத்துக்கு ஏற்ப மாற்றி அமைத்துக் கொண்டிருக்கிறார் என்று பலர் சொல்லியிருக்கிறார்கள். ஆதலினால் இவர் கருத்துக்களை எடுத்துக் கொண்டது குமரகுருபரரிடம் இருந்து என்பது காலப்பிழையாகவே தோன்றுகிறது. இராமேசுவரம் வரையில் இவர் கேட்ட செய்திகளைத் தம் இராம சரிதமானசம் என்ற இந்திப் பெருங்காவியத்தில் சேர்த்துக் கொண்டார். இவ்வாறு சேர்க்கப்பெற்ற செய்திகள் கம்பர் தம் இராமாயணத்தில் புதிதாகப் படைத்த செய்திகளாக இருக்குமென்று சொல்ல முடியாது. துளசிதாசர் நாட்டிலுள்ள எல்லா நதிகளிலும் நீராடி முக்கியத் தலங்கள் அனைத்தும் தரிசனம் பண்ணினாராம். காசியிலேயே பிற்காலத்தில் தம் ஆயுளைக் கழித்தார். 126 ஆண்டுகள் வாழ்ந்தாராம். மேற்குறிப்பிட்டவாறு அவர் பல இராம கதைகளைக் கேட்டிருக்கிறார். கேட்ட வரலாற்றில் சிறப்பானவற்றைத் தம் நூலில் சேர்த்திருக்கிறார். இதில் நிச்சயமாகக் குமரகுருபர சுவாமியின் நேர்முகத் தொடர்பு இல்லை.

அனுபந்தம் : 6

## பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் சந்திப்பு

தமிழ் இலக்கிய வரலாறு நெடுகிலும் புலவர்களுக்கிடையில் நிரம்பப் பூசல்கள் நடந்திருக்கின்றன என்று சொல்லுகின்ற கதைகளுக்குக் குறைவில்லை. இக்கதைகளெல்லாம் பொதுவாகப் பிற்காலத்தில் வாழ்ந்த கோணல் புத்தி உடையவர் ஒருவர் தம்முடைய கற்பனையினால் பின்னி வைத்த முடிச்சுக்கள். கம்பர், ஒட்டக்கூத்தர், அவ்வையார் பிறபுலவர்கள், ஒட்டக்கூத்தர் புகழேந்தி அருணகிரிநாதர்,

சம்பந்தாண்டான், வரதுங்கராம பாண்டியர் - பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். இப்படி எத்தனையோ முடிச்சுக்கள். இவ்வாறு பிணைக்கப்படும் இரு புலவர்கள் சம காலத்துக் குரியவர்கள் அல்லர், இவர்களுக்கிடையில் நிரம்பக்கால வித்தியாசம் உண்டு என்பதும் இந்த வீணான கதைகள் எழு வதற்குத் தடையாக இருக்க வில்லை, குமரகுருபர சுவாமி கள் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பற்றிய கதைகளும் மேற்சொன்னவை போன்ற உண்மைக்கு மாறான பொய்க் கதைகளே.

சுவாமிகள் மதுரையில் திருமலைநாயக்கனால் போற்றப் பெற்ற போது அங்கே ஐயங்கார் முன்னமே அம்மன்னனால் போற்றுதலுக்குரியவராய்ச் சிறப்பாக அமர்ந்திருந்தாராம். பொதுவாக நாயக்கர் என்போர் விஜய நகரத்திலிருந்த வர்கள் ஆதலால் வைணவத்தில் ஈடுபாடு மிகுதி. இருப் பினும் திருமலைநாயக்கனுக்கு மதுரை மீனாட்சியம்மை யிடத்து ஈடுபாடு மிகுதி என்பது சரித்திரப் பிரசித்தி பெற்றி ருக்கிறது. ஐயங்கார் நாயக்கன் அவையில் சுவாமிகளைப் பார்த்து அவருக்குத் திருச்செந்தூர் முருகப் பெருமான் அருள் செய்ததைப் போற்றி உரையாடி மகிழ்ந்திருந்தாராம். அந்த நிலையில் ஒரு நாள் மன்னன் தான் புதிதாக வெளி யிடப் போகும் காசுகளில் என்ன முத்திரை பொறிக்கலாம் என்று இருவரையும் பொதுவாகக் கேட்டான். உடனே ஐயங்கார் தம் வழிபடு கடவுளாகிய திருமாலின் வாகன மாகிய கருடன் இலச்சினையை இடலாம் என்றார். அடுத்துச் சொல்ல வந்த சுவாமிகள் ''கருடன் பறந்துவிடும்', அது காசுக்குப் பொருத்தமாகாது. அக்காசு நிலைபெறாது. சிவபெருமான் வாகனமாகிய விடை (ரிஷபம்) பறக்காது. இடையூறு செய்வோரை முட்டும். ஆதலால் இடப முத்திரையையே பொறிக்கலாம் என்றார். அரசன் இதை ஏற்றுக் கொண்டு அப்படியே இடப முத்திரை பொறிக்கு மாறு பணித்தான் என்பர்.

இது பிற்காலத்தில் திறமைசாலியான சைவர் ஒருவர் கட்டிவிட்ட பொய்க்கதை. பூசலில் மனம் இல்லாத சுவாமிகள் இப்படியெல்லாம் வீண் வம்பு பேசியிருக்க மாட்டார். இது போல ஐயங்காரையும் அவருக்கு முந்திய நூற்றாண்டில் வாழ்ந்த வரதுங்கராம பாண்டியரையும் சம்பந்தப்படுத்திப் பூசல்கள் சொல்லப்படும். யாவும் போலி களுக்கு உதாரணம்.

சீரங்கத்தில் ஐயங்கார் தம் அடியவர்களோடு சுவாமி களிடம் சமயப்போர் செய்தார். சுவாமிகள் நியாயமான முறையில் அவரோடு வாதம் செய்து வென்றார். அதன்பின் சுவாமிகள் சிதம்பரம் சென்று செய்யுட்கோவை பாடியது பற்றி ஒரு வரலாறு சொல்லப்படும். ஐயங்கார் மீண்டும் சுவாமிகளைச் சந்தித்துச் செய்யுட் கோவை பற்றிய அடிப் படையில் ஒரு சமயப் போரிட்டாராம், சுவாமிகள் நேர்மை யாக வாதிட்டு அவர்களை வாதத்தில் வென்றார் என்பதும் தேவையில்லாத ஒரு பொய்க்கதை. இந்த பூசல்கள் காஞ்சி யில் நடந்ததாகவும் சிலர் சொல்வர். சுவாமிகள் காஞ்சிக்குப் போனதாக வரலாறு இல்லை. சீரங்கத்தில் சுவாமிகளிடம் தோற்ற வைணவர் சுவாமிகள் தங்கியிருந்த வீட்டைக் கொளுத்தி விட்டார்கள் என்றும், அரசன் அவர்களைப் பிடித்துத் தண்டித்தான் என்றும் சொல்வர். இவ்வளவும் பொய்க்கதைகளே, வைணவத்தைத் தாழ்த்தியதனால் சைவத்துக்குப் பெருமை வராது.

**அனுபந்தம் : 7**

## சிங்கவாகனம்

போலிக்கதைகளை மறந்து விடுவது அவ்வளவு எளி தல்ல. சுவாமிகள் காசிக்குச் சென்று அங்கு முகம்மதியத் தலைவன் நடத்திய சமய மகாநாட்டுக்குச் சிங்கத்தின்மீது

ஏறி அவைக்குச் சென்றார் என்பது பொதுவாக நம்பப்படும் கதை. இது முழுமையாக மனித இயல்பைக் கடந்த, அற்புதங்களையே நம்பிக் கொண்டிருந்த ஒரு காலத்துக்கும் ஒரு ஜன சமூகத்துக்கும் பொருத்தமாக இருக்கும். ஆனால் நாம் அந்த நிலையைக் கடந்து வெகுதூரம் வந்துவிட்டோம். இது பகுத்தறிவையும், அறிவியலையும் கொண்டு எதையும் சோதித்து ஏற்றுக் கொள்ளுகின்ற காலம் ஆதலால் அந்தக் கதை இக்காலத்துக்குப் பொருந்தாது. ஆகவே குமரகுருபரர் வரலாறு சொல்வோர் அக்கதையை முழுமையாக நம்புகின்ற படியால் அது முழுமையும் பொய் என்று தள்ளி விடுவதை விட அதற்குப் புதுநோக்கில் ஒரு விளக்கம் சொல்வது பொருத்தமாயிருக்கும்.

சிங்கத்துக்கே இன்னும் பலவிதமான கதைகள் புனையப் பட்டிருந்தன. சிங்கத்துக்கான கதை ஒரு பதிப்பில் சகலகலா வல்லிமாலை பாடத் தொடங்கிய நிலையிலேயே உருக் கொள்ளுகிறது.

சுவாமிகள் அத்தலத்தில் வசிக்கும் நாளிலே அந்நகரத்தை யாண்டு கொண்டு ஆங்கிருந்த டில்லி பாட்சாவைக் கண்டு வசனித்துத் தரும மியற்றுதற்குத் தக்க இடத்தை பெற விரும்பி, அவனுக்குரிய இந்துஸ்தானி பாஷையைத் தெரி வித்தருளும்படி சரஸ்வதி தேவியைப் பிரார்த்தித்துச் சகல கலாவல்லி மாலை என்னும் ஒரு பிரபந்தத்தைப் பாடத் தொடங்கினார்; ஒன்பது பாடல் அருளியும் சரஸ்வதி தேவி தமக்குத் திருவருள் செய்யாமை கண்டு, "மண்கண்ட வெண் குடை'கீழாக மேற்பட்ட மன்னரு மென், பண் கண்டளவிற் பணியச் செய்வாய்" என்னும் பத்தாவது பாட்டை அருளிச் செய்தார். உடனே சரஸ்வதியார் திருவருள் சுரந்து அப் பாஷையை விளக்கியருள, சுவாமிகள் களிகூர்ந்து அவ்வரசன் சமூகத்திற் கெழுந்தருளினார். அவன் சுவாமிகளது அருமை பெருமைகளைச் சிறிதும் அறியாதவனாகையால், சிங்கா

தனத்திலிருந்து கொண்டே சுவாமிகளது வரலாற்றை வினா வினான். சுவாமிகள் அதனாலே தமக்கு யாதொரு குறைவும் இல்லையாயினும், அவனுக்கு நேரிடும் கெடுதியையெண்ணி அப்பாட்சாவின் மீது கருணை கூர்ந்து, ''மஹாராஜாவே! உம்மை ஆசீர்வதிக்க வந்த நம்மை இப்படி நிறுத்திக் கொண்டு வினாவுவது தருமமல்ல என்று உரைத்தருளினார். அது கேட்ட அரசன், ''உம்மிடத்திலே தெய்வீகங் கண்டா லன்றி உமது சரீரத் தோற்றத்திற்கு நான் மரியாதை செய்யேன்'' என்று கூறினான். சுவாமிகள் அப்படியாயின், அதனை நாளையதினம் உமக்குக் காட்டுவோம், என்று சொல்லி மீண்டு மற்றைநாள் காளியினது அனுக்கிரகத்தால் வந்த ஒரு சிங்கத்தின் மேலேறிக்கொண்டு யாவரும் அஞ்சும் படி சபையிற்புகுந்து, அரசனை நோக்கி, நீர் இருப்பது உயிரற்ற சிங்கம் நாம் இருப்பது உயிருற்ற சிங்கம். ஆயினும், நீர் அஞ்சவேண்டுவதில்லை, உமக்கு மாத்திரம் இது பசுவாகத் தோன்றும்'' என்று சொல்லி அதிலிருந்தபடியே அவன் வினாக்களுக்கு உத்தரங் கொடுத்து, அவனை வணங் கும்படி செய்து அங்கே வீற்றிருந்தருளினார்.

இப்பதிப்பு சிங்கவாகனக் கதையை மறுநாள் வரை வளர்த்துகிறது. சுவாமிகள் சரசுவதியின் அருளால் இந்துஸ் தானி மொழியறிவு எளிதாகப் பெற்றுக் கொண்டார் என்பது யாருக்கும் நன்கு புரியக் கூடியது. ஆனால் காளியை வேண்டி அவள் அனுக்கிரகத்தால் ஒருசிங்கம் வரப்பெற்று அதன்மேல் ஏறிக்கொண்டு யாவரும் அஞ்சும்படி சபையில் புகுந்து இந்தச் சிங்கத்தைப்பற்றியே அரசனிடம் பேசுகிறார். இந்த நிகழ்ச்சி. ஓர் அற்புதம் நிகழ்த்திக் காட்டவேண்டும் என்ற எண்ணத்தால் நிகழ்த்திக்காட்டுவது குமரகுருபர ருடைய கவிதைக்கும், அருளாற்றலுக்கும். இப்படியொரு கதையை நுழைப்பது அவசியமில்லை.

ஆனால் சுவாமிகள் சிங்கத்தின் மீதுவந்தார் என்ற கதையை நம்பிக் குமரகுருபரர் ஒரு சிங்கத்தின்மீது ஆரோகணித்து இருப்பதாக காசிமடத்தில் பழங்காலத்திலிருந்தே ஒரு படம் செய்யப்பட்டிருக்கிறது. அதில் பெரிய வெண்ணிறத் தாடியோடும் சடாமகுடத்தோடும் ஒரு முதிய முனிவர் சிங்கத்தின்மீது உட்கார்ந்திருக்கும் சித்திரம் வரைந்து இவர்தான் குமரகுருபரர் என்று சொல்லப்படுகின்றது. •குமரகுருபரர் காசி அவைக்குச் சென்றபோது அவருக்கு வயது 30க்கும் குறைவாகவே இருக்கும். இதற்கு ஜடாமகுடமும் வெண்ணிறத் தாடியும் சிறிதும் பொருந்துவன அல்ல. சிங்க வாகனமும் சரியன்று. இளமைக்கோலமும் வெண்ணீறு ஒளிவிடுகின்ற நெற்றியும், உருத்திராக்கமும், துவராடையும் மட்டும், அந்த நிலைக்குப் போதும், தோற்றம் மட்டும் மிக்க கம்பீரமாக இருக்க வேண்டும். மடத்தில் சிங்கம் போட்டிருக்கும் படத்தை [பழமை என்ற காரணத்தால்] பூஜைக்கு மட்டும் வைத்துக் கொண்டு மேற்குறிப்பிட்ட கோலத்தில் எல்லா மக்களையும் கவரத்தக்கதாகப் புதிதாக சைவமக்களிடம் சுவாமிகள் உருவத்தை அறிமுகப்படுத்த வேண்டும்.

வடநாட்டாரே அதாவது இந்துஸ்தானிக் காரரே நிறைந்திருந்த அந்தக் காசி அவையில் அன்னியன் ஒருவன் நுழையும் தைரியம் பெற்றதே பெருவியப்பைத் தந்திருக்கும் தவிர, வந்த அன்னியர் தலையில் சடாமுடி அணிந்து மார்பில் அக்கமணி ஆரம் பூண்டு வெண்ணீறு சண்ணித்த மேனியராய் கம்பீரமாகக் காவிஉடையில்நேரே அவையுள் தலைவன் அமர்ந்திருந்த இருக்கையை நோக்கிச் செல்கிறார். அவர் தம்மை மற்றவர்களோடு சமமாகக் கருதிக் கொள்ளவில்லை. கண்ட எல்லோரும் காணாத காட்சியை - தெய்வக் காட்சியைக் கண்டது போன்ற உணர்ச்சி பெற்று இருக்கையை விட்டு எழுகிறார்கள், எல்லோரும் எழவே தலைவனும் எழுகிறான்.

மனம் என்ன சிந்திக்கிறதோ அதன் வழி உடலும் இயங்கு கிறது அல்லவா?

**கைகள் தலைபுக்கன; கருத்துளன எல்லாம்**
**தெய்வம் என உற்ற; உடல்சிந்தை வசம் அன்றோ?**

என்பது கம்பர் வாக்கு. அரசன் உள்பட எதிரே வரு கின்ற அருளாளரைத் தெய்வப் பிறவி என்று நினைத்து எழுந்து மரியாதை செய்கிறார்கள். தங்களை அறியாமலே இம்மரியாதை, சுவாமிகளுடைய வரவு அவர்கள் 'முற்றிலும் கண்டிராத காட்சி - சிங்கம் வருவதுபோல் இருந்தது' அலங்காரமாகச் சொல்லுகின்ற சொல்லை உண்மையாகவே பிற்காலத்தார் நம்பிச் சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். இதுதான் உண்மையே தவிர, சிங்கம் என்ற மிருகம் அங்கு வரவும் இல்லை. அவர் அதன்மீது ஆரோகணிக்கவுமில்லை. அவரே சிங்கமாகத் தோற்றினார். பின் நடந்த நிகழ்ச்சிகள் இதை மெய்ப்பித்து விட்டன.

மிதிலையில் ஜனகர் சபையில் சீதை பிரவேசித்த போது அரசன், முனிவர்கள் நீங்க மற்ற எல்லோரும் எதிரே வந்தது தெய்வம் என்று எண்ணினார்கள் என்பதை கம்பர் பின் வரும் பாட்லால் சொல்லுகிறார்.

**வையர் நுகர் கொற்றவனும் மாதவனுமல்லாமல்**
**தெய்வம் என உற்ற உடல் சிந்தைவசம் அன்றோ,**

அதாவது மனம் எப்படி எண்ணுகிறதோ அதன்படி உடல் செய்கிறது என்று, அதாவது உடலை சிந்தையானது ஆட்டி வைக்கிறது என்பது கருத்து.

இந்த வரலாற்றை ஆமோதிக்க வல்லனவாய் சில இக்கால வரலாறுகளையும் இங்குக் கூறுகிறோம்.

I

பெரு ஞானியான தாயுமானவர் தமிழ்நாட்டில் 18 ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்து தாம் அனுபவித்த

சிவானந்த அனுபவத்தை உள்ளம் உருக்கும் 1450 இனிய பாடல்களால் பாடியிருக்கிறார். அவற்றுள் தேசோ மயானந்தம் என்ற பதினோராம் பகுதியில் காணப்படும் ஐந்தாம் பாடல் இங்குக் கருதுதற்கு உரியது.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்;
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாம், ஒரு சிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
கட்செவி எடுத்தாட்டலாம்;
வெந்தழலின் இரதம்வைத் தைந்து லோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்;
வேறொருவர் காணாமல் உலகத் துலாவலாம்;
விண்ணவரை ஏவல் கொளலாம்;
சந்தமும் இளமையோ டிருக்கலாம், மற்றொரு
சரீரத்தி னும் புகுதலாம்;
சலமேல் நடக்கலாம்; கனல்மேல் இருக்கலாம்;
தன்னிகரில் சித்தி பெறலாம்;
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம் அரிது; சத்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே!

இந்தப் பாடலில் ஒரு தொடர் மட்டும் நம்முடைய கவனத்துக்கு உரியது. இங்கு தாயுமானவர், உலகத்தில் எந்தச் சித்திகளையுமே எளிதில் பெற்று விடலாம். ஆனால் "சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது" என்று உபதேசிக்க வந்தவர்,

'ஒரு சிங்கம் முதுகின்மேல கொள்ளலாம்' என்று திட்டமாய்ச் சொல்கிறார். இக்கருத்து நம்மைச் சிந்திக்க வைக்கிறது. குமரகுருபர சுவாமிகள் 1688 இல் முக்தி பெற்றார் என்பது வரலாறு. அவருக்குப் பிறகு 17 ஆண்டுகள் கழித்துப் பிறந்த தாயுமான சுவாமிகள் பல அரிய சித்திகளைக் கூறு

மிடத்துச் சிங்கத்தின் முதுகின்மேல் ஏறிச் சவாரிகூடச் செய்யலாம் என்று சொல்கிறார். இக்கருத்து அக்காலத்தில் அதாவது குமரகுருபர சுவாமிகள் மறைந்த சில ஆண்டுகளுக் கெல்லாம், வடக்கிலும், தெற்கிலும் நன்கு அறியப்பட்ட நிகழ்ச்சியாக இருந்தது என்று நாம் நினைப்பது தவறாகாது. காசியில் சுவாமிகள் இவ்வாறு நடந்ததும் இவ்வாறு சென்றதும், பிற்காலத்தில் அதாவது தாயுமான சுவாமி களுடைய இளம் பருவக் காலத்தில் (1720) நன்கு பரவி விட்டது. இதை இளம்பிள்ளையாகிய தாயுமானவர் கேட்டிருக்கிறார். எல்லா மக்களையும் போல அவரும் இது உண்மை என்றே நம்பியிருக்கிறார். அவ்வாறு தெரிந்திரா விட்டால் சிங்கமுதுகின் மேற் கொள்ளலாம் என்று சிங்கத்தைச் சிறப்பித்துப் பாடுகின்ற நிலை எழுந்திராது. இன்று எதையும் வெறும் பகுத்தறிவைக் கொண்டே சோதித்துப் பார்க்கின்ற உலகத்தில், சிங்கத்தின் மீது ஆரோ கணித்துச் செல்வது நம்பவொண்ணாத செய்தியாயிருக் கலாம். அல்லது நிகழ்ந்திராத செய்தியாகவும் இருக்கலாம். ஆனால் பெருஞானியான தாயுமானவ சுவாமிகளுக்கு இது உண்மை நிகழ்ச்சியாகவே நன்கு தெரிந்து ஏற்கப்பட்டு இருந்தது. அதனால் தான் அவர் இவ்வாறு 'ஒருசிங்க முதுகின் மேற்கொள்ளலாம்' என்று திட்டமாய்ப் பாடு கிறார். அதை அவர் பார்க்கவில்லை. ஆனால் கேட்டிருக் கிறார், அதனால் அவர் பாடுகிறார். நம்முடைய பகுத்தறிவு வாதங்கள் இன்று எந்தத் திசையில் போயினும், தாயுமான வருக்கு இது உண்மை நிகழ்ச்சியே. நாம் குமரகுருபரரைப் போற்றுகிறோம் என்றால் இது நமக்கும் உண்மை நிகழ்ச்சியே.

II

வங்காளத்தில் தோன்றிப் பரமபாகவதராய்க் கிருஷ்ண னிடத்தில் அளவற்ற பக்தி பூண்டு ஆனந்தக் கூத்தாடி அந்த

வைணவச் சமயத்தை நாடெங்கும் பரப்பிய ஒருமகான் கிருஷ்ண சைதன்யர். அவர் காலம் 1486 - 1534. அவருடைய வாழ்க்கையில் ஒரு சம்பவம் குறிப்பிடத்தகுந்தது. உணர்வு களுக்கு பாவம் என்று பெயர் சொல்லப்படும். உணர்வுகளின் உச்சநிலை மகாபாவம். அந்த மகாபாவமானது இருபது வகைகளாக விரித்துச் சொல்லப்படுகிறது. அவை நாரத பக்தி சூத்திரம், பதஞ்சலி யோக சூத்திரம் முதலியவற்றால் விரித்துச் சொல்லப்படுகின்றன என்பர். மகாபாவத்தில் 10 ஆவது முயற்சி என்பதன் விளக்கமாகச் சொல்லப் படுகின்ற ஏழு கருத்துக்களுள் ஏழாவது கருத்து அல்லது உணர்வு தைரியம் எனப்படுகிறது. இதைப் பற்றி விளக்கம் எழுதும்போது தமது திருவாசக உரையின் முகவுரையில் சுவாமி சிற்பவானந்தர் கிருஷ்ண சைதன்யருடைய வரலாற்றைக் குறிப்பிட்டு எழுதுகிறார். பின்வருவது அவருடைய விளக்கம். ''தைரியம் அனைத்தையும் ஒன் றாகக் கருதி, மனதில் உறுதியும், அமைதியும் குடிகொண் டிருக்கும் நிலை இது. ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் வனத்துக்குள் ஹரிபஜனை பண்ணிக்கொண்டு போன பொழுது ஒரு புலி, வந்து அவரோடு ஆனந்தக் கூத்தாடியது. அவருக்குப் புலியும் தானும் கிருஷ்ண சொரூபம் என்ற உறுதியான மனநிலையிருந்தது. அது தைரியம் எனப்படுகிறது.''[1]

இங்குச் சைதன்யர் புலியும் கிருஷ்ண சொரூபம் என்ற திடமான மனநிலை கொண்டிருந்தார். அது காரணமாக அவர் வழியில் குறுக்கே வந்த காட்டுப்புலி கூடத் தன் கொடிய சுபாவத்தை மறந்து அவரோடுகூட ஆனந்தக் கூத்தாடிற்று என்பது வரலாறு. இது பொய்க்கதையல்ல. சமீபகாலத்து வரலாற்று நிகழ்ச்சி என்று பக்தர்கள் நம்பு கிறார்கள். சைதன்யர் குமரகுருபரருக்கு நூற்றைம்பது

---

1. சுவாமி சிற்பவானந்தர் எழுதிய திருவாசக உரை 1968 முகவுரை பக்கம் 39.

ஆண்டுகளுக்கு முன்னால் இருந்தவர். அவருடைய இயக்கம் வடநாடு முழுமையும் பெருந்த செல்வாக்குப் பெற்றிருக் கிறது. இது பக்தியினால் விளைந்த அஞ்சாமை மட்டும் அல்ல. எல்லாவற்றிலும் இறைவனுடைய, அருள் விலாசத்தைக் காணுகின்ற தன்மை. சைதன்யர் வாழ்க் கையில் இத்தகைய நிகழ்ச்சியைப் படைத்திருக்கிறது. அதே போலக் குமரகுருபரருடைய பண்டார மும்மணிக் கோவையையும் சகலகலாவல்லி மாலையையும் ஊன்றிப் பயின்றவர்கள் சுவாமிகளும் சைதன்யருடைய நிலையையே அடைந்திருந்தார் என்பதைத் தெளிவாக உணரலாம்.

III

பால்ப்ரண்டன் என்பவர் ஞானத்தேட்டம் உடையவர். எகிப்து முதலான நாடுகளில் இந்த ஞான நாட்டம் காரண மாகப் பல அனுபவங்களைப் பெற்று, பிறகு கடைசியாக இந்தியாவுக்கு வந்து இங்குப் பல அனுபவங்களைப் பெற்று, இந்தியா என்றாலே புளகாங்கிதம் அடைகின்ற மனப் பக்குவம் பெற்றிருந்தார். அவர் குறித்துள்ள அனுபவம் இங்குநாம் நினைத்துப் பார்க்கத் தக்கதாகும்.

அவர் திருவண்ணாமலை ரமண ஆசிரமத்தில் தமக் கென்று ஒரு சிறு மண்குடிசை கட்டிக்கொண்டு அதில் வாழ்ந்து வந்தார். அந்தக் குடிசைக்கு மூன்று பக்கமும் சுவர் ஒரு பக்கம் முழுமையும் திறப்பு. அதில் இருக்கும் காலத்து ஒருநாள் அவர்தம் குடிசைக்குள் நின்று கொண் டிருக்கும் சமயம், திறந்த பக்கம் திரும்பினார். அங்கு ஒரு கருநாகம் படம் எடுத்து ஆடிக் கொண்டிருந்தது. "இனி நாம் தொலைந்தோம். நாகத்திடமிருந்து தப்ப வழியில்லை" என்று ப்ரண்டன் திகில் அடைந்தார். அவர் ஓரமாகச் சுவரை ஒட்டிக்கொண்டு நின்றார். அவருடைய மனத்தில் பாம்பு தம்மைக் கொத்தப்போகிறது என்ற அச்சம். அச்சமயம் அந்த வாயில்பக்கமாக ரமண ஆசிரமத்திலிருந்த யோகி

ராமையா என்பவர் வந்தார். அவர் ப்ரண்டனுக்குத் தெரிந்தவர். ஆயினும் அடிக்கடி இவர்கள் சந்தித்துப் பேசுவது இல்லை. அவர் அவ்வழிப் போகும்போது தற்செயலாகக் குடிசையின் உட்பக்கம் தம் பார்வையைச் செலுத்தினார். நாகம் - ப்ரண்டன் என்ற நிலை புரிந்தது. ஒன்றும் செய்யவில்லை. சும்மா தமது கையாலே நாகத்தின் படத்தின் பின்புறத்தில் தடவிக்கொடுத்தார். பெட்டிப் பாம்புபோல என்று சொல்கிறமாதிரி பாம்பானது தனது படத்தைச் சுருக்கிக்கொண்டு தலையைக் கீழே போட்டு மெல்ல அப்பால் நகர்ந்துவிட்டது. இந்தச் சம்பவத்தை ப்ரண்டனே தமது "இந்தியாவின் அந்தரங்க இடங்களில் ஞானத் தேட்டம்" என்ற புத்தகத்தில் விவரித்திருக்கிறார்.

இந்தச் சம்பவம் நமக்கு ஞானிகள் யோகிகளுடைய ஆற்றலை அதாவது வனவிலங்குகளையும் வசமாய் நடத்தும் சித்தியை நிருபிக்கவல்லது. வனவிலங்கு என்ற நிலையில் புலிக்கும் நாகத்துக்கும் வேறுபாடு இல்லை. இங்கு நாகம் யோகி ராமையா என்பவரிடத்தில் பரிசத்துக்கே கட்டுப்பட்டு அடங்கியதைக் காண்கிறோம். இந்தச் சம்பவத்தைச் சொல்பவர் இந்தியர் அல்லர், எந்த மூட நம்பிக்கையும் இல்லாதவர் என்று நாம் கருதுகின்ற மேலை நாட்டார்.

## IV

மற்றொரு வரலாறும் ரமண மகரிஷியைக் குறித்தது. சிதம்பரத்தில் மாலைக்கட்டித் தெரு பழைய மூன்றாம் எண்ணுள்ள வீட்டில் ஒரு ரயில்வே ஊழியர் இருந்தார். அவர் ஒருகால் நொண்டியானவர். அதனோடு வண்டியில் ரயிலடிக்குப் போய்த் தமது ஊழியத்தை முடித்துவிட்டு வீடு திரும்புவார். ஒருநாள் அவரை மேஜிஸ்ட்ரேட் நாகரத்தினம் பிள்ளை என்பவர் பார்த்தபோது கேட்டார், "ஐயா நீங்கள் ஒருகால் ஊனமாய் இருக்கிறீர்களே, எப்படி ரயில்வே உத்தியோகத்தில் சேரமுடிந்தது?"

அந்த அன்பர் பதில் சொன்னார், "உத்தியோகத்தில் சேரும்போது நான் இவ்வாறு ஊனமாய் இருக்கவில்லை. நன்றாகத்தான் இருந்தேன். ஒரு சமயம் சில நண்பர்களோடு சேர்ந்து ரமணமகரிஷிகளைத் தரிசிப்பதற்காகத் திருவண்ணாமலைக்குச் சென்றோம். நாங்கள் சென்றபோது மகரிஷி அவருடைய குடிலுக்குள் இல்லை. வெளியே போயிருந்தார். நாங்களும் வெளியே வந்து நோட்டமிட்ட போது மலையில் ஓரிடத்தில் அவர் போய்க் கொண்டிருந்தது தெரிந்தது. அங்கே சென்று அவரைப் பார்த்துவிடுவோம் என்ற எண்ணத்தில் நாங்கள் எல்லோரும் விரைந்து மலை மேல் ஏறி அங்குச் சென்றோம். அங்குச் செல்கின்ற வழியில் திடீரென்று எங்கள் முன்னால் ஒரு சிறுத்தைப்புலி வந்தது. திகிலடைந்த நாங்கள் நாலாபக்கமும் சிதறி மலைப் பாறை கள் இடையில் குதித்து ஓட ஆரம்பித்தோம். நான் பாறை யிலிருந்து குதித்தபோது, கால் எலும்புகள் முறிந்துவிட்டன, சிறிது நேரம் அங்கேயே கிடந்தேன். பின்னால் கையை ஊன்றித் திரும்பிப் பார்த்தேன். அப்போது மகரிஷி அங்கு வர அவர் தம்முன் எதிர்ப்பட்ட சிறுத்தைப்புலியின் முதுகில் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் அப்பால் போகவும், சிறுத்தைப்புலி தன் வழியே போய்விட்டது. எங்கள் பக்கம் திரும்பவில்லை. பின் என் நண்பர்கள் நான் இருந்த இடம்வந்து என்னை மெல்ல தூக்கிக் கொண்டுபோய் ஆஸ்பத்திரியில் சேர்த்துச் சிகிச்சை செய்தார்கள். இதுவே நான் நொண்டியான வரலாறு."

[இந்த மாஜிஸ்திரேட் நாகரத்தினம்பிள்ளை பதவி ஓய்வு பெற்ற பின் திருப்பனந்தாள் காசி மடத்தின் மானேஜராகக் காசியில் இருந்தவர். யாம் காசியிலிருந்த போது எமக்குப் பழக்கமானவர்.]

இங்கும் ரமணருடைய பார்வையில் எல்லாம் இறைவ னாகவே காட்சி அளித்த காரணத்தினால் அவர் தமது

உன்னதமான சித்தி காரணமாக சிறுத்தைப் புலியைக் கடவுள் படைப்பென்று கண்டு உறவு கொண்டாட அதுவும் தனது சுபாவத்தை விட்டுச் சாந்தமாக அவருடன் பழகி விட்டுப் போயிற்று என்று பார்க்கிறோம்.

இவை போன்ற நிகழ்ச்சிகள் பண்டை நாளிலும், இன்றும் கூட எத்தனையோ நாம் கேள்விப்படுகிறோம். இத்தனையும் உண்மை என்று நாம் அறியும்போது குமரகுருபரர் சிங்கத்தின் மீது ஆரோகணித்துச் சென்றார் என்று சொல்வதும் உண்மையே என்று நம்பிக்கை கொள்வதில் என்ன தயக்கம்?

IV

திருஞான சம்பந்தர் முற்பிறவித் தவத்தின் பயனால் மூவாண்டில் உமாதேவியாரால் எண்ணரிய சிவஞானத் தின்னமுதம் குழைத்தருளி உண்ணடிசில் என ஞானப்பால் ஊட்டப் பெற்றார். அப்போது சம்பந்தமூர்த்தி எல்லா ஞானமும் ஒருங்கே உணர்ந்தார் என்று சேக்கிழார் பாடு கிறார்:

சிவனடியே சிந்திக்குந் திருப் பெருகு சிவ ஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினி லோங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்.

அவர் போலவே குமரகுருபரரும், முருகன் கனவில் திரு உருவத்தைக் காட்டிய நிலையில் எல்லா ஞானமும் கைவரப் பெற்றார். ஆதலால் வயது முதிர்ந்த அனுபவத்தால் வரும் ஞானத்தினால் தான் கந்தர் கலிவெண்பாக் கருத்துக்களைப் பாட முடியும், ஐந்தாண்டிலேயே பாடியிருக்க முடியாது என்று கருதுவது சரியாகாது. இது அருள் என்பதன் பொருளை உணராமையால் வந்த மயக்கம்.

மெய்கண்டாரைச் சொல்லும்போது 'ஈராண்டில் சிவ ஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார் என்று சொல்லுவது தோத்திரப் பாடல்.' அந்த வயதிலேயே சிவஞானம்

முழுமையும் உணர்த்தப்பெற்று, சிவஞான போதம் பாடியருளிச் சைவ சித்தாந்த நெறி வகுத்தார் மெய்கண்டார். ஆதலினால் சிவனருள் எதையும் சாதிக்கும், அதை ஆராய முடியாது, இக்கருத்தையே சம்பந்தர் பாடல் சுட்டுகிறது. குமரகுருபரர் ஐந்தாண்டிலேயே எல்லா ஞானமும் பெற்று உயர்ந்தார். ஆயினும் பிற்காலத்தில் குரு அருள் என்ற ஒரு கருத்து சமயத்தில் மிகவும் சிறப்பாக வளர்ந்துவிட்டது. உலகத்தின் உய்திக்காக இக்கருத்து சைவ சமய சாத்திரங்களில் பிற்காலத்தில் இடம் பெற்றிருக்கிறது. ஆதலினால் குமரகுருபரர் நிறைந்த அனுபவம் பெற்றுத்தான் கந்தர் கலிவெண்பாவில் கூறியுள்ள கருத்துக்களைக் கூறமுடியும் என்று எண்ணுவது பொருத்தமாகாது. பின்னால் மீனாட்சி அம்மையார் திருமலை நாயக்கன் மடியில் அமர்ந்திருந்து முத்து மாலையை இவருடைய கழுத்தில் அணிவித்தார் என்பது போன்ற கதைகளையும் இங்குச் சிந்திக்க வேண்டும்.

அனுபந்தம் : 8

## பிற்குறிப்புக்கள் சில

குமரகுருபரர் வரலாற்றுக்குரிய ஆதாரங்கள் மூன்று என்றும் அவையாவை என்றும் முன் சொல்லப்பட்டன. முதல் திட்டமான் ஆதாரம் மரபு வழியாக அவர் வாழ்க்கையையும், நூல்களையும் பற்றிவந்த செய்திகள். மூன்றாவது இச்செய்திகளைக் காதில் கேட்டு ஒருகால் கற்பனையாக வேறு பலவும் கலந்து தண்டபாணி சுவாமிகள் பாடிய குமரகுருபரர் புராணம். இரண்டாவது மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை யாரோ தமக்குச் சொன்ன வெறுங் கதைகளை நம்பியும் திருப்பனந்தாள் காசிமடத்துப் பதினான்காம் பட்டம் இராமலிங்கத் தம்பிரான் வேண்டுமென்றே தருமபுரத்துக்கு மாறாகச் சொன்ன செய்திகளை

வைத்தும் பாடிய சரித்திரம். இச்சரித்திரம் முழுவதுமே வரலாற்றுக்குப் பயனற்றது என்று முன்னமே ஒதுக்கப் பட்டது. இராமலிங்கத் தம்பிரான், தருமபுரத்திடம் பகைமை பூண்டு, தம் நண்பரான மகாவித்துவானைச் சரித்திரம் எழுதும்படி தூண்டியபோது உண்மைக்கு மாறாகவே எழுதச் செய்தார். நண்பரான அவர் வேண்டு கோளை மறுத்ததற்கு அஞ்சி மகாவித்துவான் தெரிந்தும் பிழையாகவே பாடினார். இது வேறிடத்தில் காசிமடத்தின் வரலாறு கூறியபோது விளக்கப்பட்டது. இவை யாவும் தவறு என்று பிள்ளையவர்களின் மாணாக்கரான டாக்டர் மகா மகோபாத்தியாயர் உ.வே. சாமிநாதையர் தாம் எழுதிய பிள்ளையவர்கள் சரித்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார். மற்ற இரண்டையும் நாம் நோக்கும்போது இரண்டிலும் சில விசித்திரமான செய்திகள் காணப்படுகின்றன. இங்குச் சிலவற்றைச் சுட்டிக்காட்ட எண்ணுகிறோம். தண்டபாணி சுவாமிகள் சொல்லும் வரலாற்றுச் சுருக்கம் உரிய இடத்தில் சொல்லப்பட்டுள்ளது.

### அ. குமரகுருபரர் தருமபுரம் குருநாதரைக் காணச்சென்றது

குமரகுருபரர் தருமபுரம் சென்றபோது பணிவு நிறைந்த ஒரு மாணாக்கன் நிலையில் நாம் பார்க்கிறோம். அப்பொழுது அவருக்கு ஞானம் ஒன்றே நாட்டம். அப்படி யிருக்க ஒரு கதையில் அவர் தம்முடைய பரிசனங்கள் பின்னே வரத் தமக்கு மதுரை நாயக்க மன்னன் அளித்திருந்த விருது களுடன் தருமைத் திருமடத்துக்கு வந்து சேர்ந்தாராம்.

"திருமலை நாயக்க மன்னன் இவருக்கு அளித்த பரிசில் களும், விருதுகளும் ஏராளம். இவற்றையெல்லாம் அவர் தம்முடன் வந்த தம் தம்பியிடம் கொடுத்துப் பெற்றோரிடம் அனுப்பி விட்டு மதுரையிலிருந்து தம் யாத்திரையைத் தொடர்ந்து திருவாரூர் வந்தார். அங்குத் திருவருளின்

தூண்டுதலால் இவர் சிலகாலம் தங்கியிருந்து வழிபட்டார். இவரைப் பொறுத்த வரையில் திருவாரூர் என்பது மற்றத் தலங்களைப் போல ஒரு தலமன்று பின்னால் இவருக்கு ஞானாசாரியராக அமையப் போகின்ற தருமை மாசில்லாமணி தேசிகருக்கு மூல குருவாகிய தருமை குருஞான சம்பந்தருக்குத் திருக்கயிலாய பரம்பரையில் சிவஞானோபதேசம் செய்து தருமபுரத்துக்குச் சென்று சிவஞானப் பயிர் வளர்க்குமாறு கட்டளையிட்ட கமலை ஞானப்பிரகாசருடைய தலம், திருவாரூர். இங்குச் சில நாள் தங்கியிருந்தபோது திருவாரூர் நான் மணிமாலை பாடினார். இவ்வளவு திருவருட் செயல் தொடர்பான நிகழ்ச்சிகளுக்கு மூலமாக இருந்திருக்கிறது திருவாரூர். ஆதலால் மிக்கஇளம் வயதினரான குமரகுருபரர் மன்னன் தமக்குக் கொடுத்த பரிசில்களையெல்லாம் அவற்றி டம் மிக்க உரிமை பாராட்டிச் சுமந்து கொண்டு மதுரையி லிருந்து திருவாரூர் வந்தார். பின்னர் அவற்றைச் சுமந்து கொண்டு திருவாரூரிலிருந்து தருமபுரம் சென்றார் என்று சொல்வதுஉலகப்பற்றைத் துறந்து ஞானநாட்டமேகொண்டு செல்கின்றவரிடத்து நிகழ்ந்திருக்கக் கூடாத அசம்பாவிதம். ஆகவே இது வரலாற்றில் பெரும்பிழை.

இனி இவர் வந்தபோது தேசிகருடைய ஏவலர் இவர் களுக்கு ஆசனமிட்டார்களாம். அந்த ஆசனத்தின் மீது இவர் மேலாடையோடு சம்பிரமமோடு அமர்ந்தாராம். எதிர்ப்படும் ஞானியர் அனைவரையுமே இவர் நமக்கு ஞானாசிரியர் ஆவாரோ என்று எண்ணிக் கூர்ந்து நோக்கிக் கொண்டு வருகின்ற இந்த இளைஞர் இவ்வாறு அமர்ந்தா ராம். எதிரில் தருமை ஞானாசிரியர் மாசிலாமணி தேசிகர் தம் மாணாக்கர்களோடு அமர்ந்திருந்தார்.

தேசிகர் இவரைக் கேள்வி கேட்டுக் கொண்டே வருகிறார். இவரும் விடை கூறிக் கொண்டே வருகிறார். தேசிகர் கேட்பதெல்லாம் இவருடைய ஆன்ம பக்குவத்தை

அளவிட்டறிய வேண்டி, இறுதியாகத் தேசிகர் பெரிய புராணத்திலுள்ள"ஐந்து பேரறிவும்கண்களேகொள்ள" என்ற பாடலைக் கூறிப் பொருள் கேட்ட போது வந்தஇளைஞருக்கு அதில் ஒன்றும் இடர்ப்பாடு தோன்றவில்லை. தேசிகர் இந்தப் பாசுரத்துக்கு அனுபவப் பொருள் கூறுக என்று கேட்டாள்.

இந்தப் பாசுரம் கூறும் நிலையை அனுபவத்தில் உணர்ந் திருந்தாலல்லவா அதன் பொருள் உணர்வு ஏற்பட்டிருக்கும்? குமரகுருபரர் திகைத்தார். அப்போது பல காலம் முன்னமே தமக்கு அசரீரி உணர்த்தியது நினைவு வந்தது. "உன்னுடைய வாக்குத் தடைப்பட்ட இடம் உனக்கு ஞானாசாரிய பீடம் என்று அறிவாயாக' இந்த நினைவு அவருக்கு அப்போது வந்தது. இவரே தமக்கு மெய்ஞ்ஞானம் அளிக்கவல்ல ஆசாரியர் என்ற உணர்வு அவர் உள்ளத்தில் எழுந்தது. அவர் இவ்வளவு நாளாகத் தேடியது இந்த ஆசாரியரைத் தானே? உடனே ஆசாரியருடைய பெருமையும் தம்முடைய தகுதிக் குறைவும் இவர் மனத்தில் தோன்றின. அடுத்த கணம் எழுந்தார். தமக்கு இட்டிருந்த ஆசனத்தைத் தூக்கி அப்பால் எறிந்தார். ஆடம்பரமான மேலாடையை எடுத்துப் பணிவோடு இடையில் சுற்றிக் கொண்டார். எட்டுறுப்பும் நிலத்தில் தோய விழுந்து நமஸ்காரம் செய்தார். இவ்வாறு சொல்லப்பட்டுள்ள வரலாற்றில் இந்த ஒரு செயல் மட்டுமே ஏற்றுக் கொள்ளக் கூடியது. முருகனுடைய அருளைப் பெற்று ஞானாசாரியனைத் தேடிவந்த இந்த அருளாளர் தம்முடைய பெருமையை இங்கு நிலை நாட்டப் போகவில்லை. உண்மை ஞானாசாரியனைக் கண்டு திருவருள் உணர்த்தியவாறு அவன் தாளில் விழுந்து பிறவி நோய்க்கு மருந்தாகிய உண்மை ஞானம் பெற வேண்டும் என்ற நோக்கோடுதான் இவர் தருமை ஆசாரியர் முன்பு வந்தார். ஆதலால் இக் கதையில் குறிப்பிட்டவாறு குமரகுருபரருக்கு ஆடம்பரமும், அகம்பாவமும் கற்பிப்பது தவறு என்பது மட்டுமன்று. பெரும்பாவமும் ஆகும். இப்பகுதி பொய்க் கதையே.

ஆ. சிதம்பர செய்யுட்கோவை பற்றிய கதை:

குமரகுருபரர் சிவகங்கையில் நீராடித் தம்மோடு வந்த அடியார் கூட்டத்தோடு நடராஜப் பெருமானை வழி படுவதற்காகச் சென்று கொண்டிருந்தார். தினந்தோறும் அவ்வாறு போவது வழக்கம். வழியில் ஒரு சைவர் புராணப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார். அந்த இடத்துக்கு சுவாமிகள் நெருங்கியவுடனே குமரகுருபரருடைய சிவவேடப் பொலிவினாலும் திருவுருவப் பொலிவினாலும் கவரப்பட்டு இவரை அறியாத அக்கூட்டத்து மக்கள் அனைவரும் எழுந்து இவர் கூட்டத்தைக் கடக்கும் வரை நின்று கொண்டு மரியாதை செய்வது வழக்கம்.

ஒரு நாள் கூட்டத்தினரில் ஒருவர் பிரசங்கியாரை நோக்கி, "ஐயா, தினந்தோறும் நம் அருகே செல்லுகின்ற குமரகுருபரர் என்ற இந்தச் சைவத்துறவிக்கு நீங்கள் ஏன் எழுந்து வணங்கி மரியாதை செய்வதில்லை?" என்று கேட்டார். அதற்கு அப்பிரசங்கியார் இறுமாப்புடன், "அவர் என்ன இலக்கணக் கவி அல்லவே, வரகவி தானே?" என்று மறுமொழி கூறினார். இச்செய்தி எப்படியோ பின்னால் சுவாமிகள் காதுக்கு எட்டிற்று. அவர் இது பற்றிக் கவலை கொள்ளாவிட்டாலும் தம் அன்பர்களுக்கு உண்மையை உணர்த்தித் தவறான எண்ணத்தைக் களையும் பொருட்டுச் சொன்னார். "முயன்று பாடுவது இலக்கணக் கவி முயலாமல் எளிதாக அருள்பெற்றுப் பாடுவது வரகவி. இந்தப் பிரசங்கியார் நம்மை இகழ்ச்சியாகக் குறிப்பிட்டதாக நினைத்தாலும் அவர் வரகவி என்று நம்மைச் சொன்னது புகழ்ச்சியேயாகும். எனினும் அவர் கொண்டிருக்கின்ற தவறான எண்ணத்தைப் போக்குவதற்காக நாம் இப்பேரது ஓர் இலக்கண நூல் பாடிக் காட்டுவோம்" என்று சொல்லி யாப்பிலக்கணம் அனைத்துக்கும், இலக்கியமாகவும் நடராஜப் பெருமான் துதியாகவும் சிதம்பரச் செய்யுட் கோவை என்ற

ஓர் அழகிய நூலைப் பாடிக் கொடுத்தார். இதை அன்பர்கள் அச்சைவப் பிரசங்கியாரிடம் காட்டிய போது அவர் தமது அறியாமைக்காக வருந்திச் சுவாமிகளிடம் வந்து பணிந்து அவருக்கு அன்பரானார்.

குமரகுருபர சுவாமிகள் சிதம்பரம் நடராஜ மூர்த்தி மீது ஏற்கெனவே மும்மணிக் கோவை என்ற பிரபந்தம் பாடி யிருந்தார். தவிர அவர் குரு ஆணையின் வண்ணம் இங்கு வந்தது ஒரு மண்டலம் இருந்து நடராஜ தரிசனம் செய்து பின்னர்த் தருமைக்குத் திரும்பி ஞானோபதேசம் பெறுவதற் காக; தம்முடைய பெருமையை நிலைநாட்டுவதற்காக அல்ல. எந்தக் கணமும் ஞான நாட்டமே கொண் டிருந்த குமரகுருபரர் தமக்கொரு பெருமை வேண்டும் என்று எண்ணியவரல்லர். வழக்கமாகச் சொல்லுகின்ற வரலாறே சிறப்புடையது. அவர் அன்பர்கள் வேண்டு கோளுக்கு இணங்கி அவர்கள் ஆவலை முற்றுவிக்க வேண்டும் என்ற நிலையில் சிதம்பரச் செய்யுட் கோவை என்ற நூல் பாடிக் கொடுத்தார் என்பது தான் பொருத்தமானது.

இந்தக் கண்ணோடு தான் குமரகுருபரர் பின்னால் காசிக்குச் சென்று முகம்மதிய மன்னன் அவையில் புகுந்து சைவத்தின் பெருமையை நிலை நாட்டினார் என்ற வரலாறு காணத்தக்கது. அங்கும் கூட இவர் சிங்கத்தின் மீது செல்வாரா என்று ஆராய வேண்டியதில்லை. அங்கு அவர் கொண்ட எண்ணங்கள் இரண்டு. ஒன்று குருவின் கட்டளைப் படி காசிக்குச் செல்லுதல். இரண்டுஅங்குச் சைவம் பரப்புதல் இவர் ஒரு பெரிய பணியோடு காசிக்கு வந்திருக்கிறார். அரசவையில் மதிப்புப் பெற்றால் தான் தம் பணி நிறை வேறும். ஆதலால் மதிப்புப் பெறுவதற்கு வழி மன்னனோடு அவனுடைய அவையில் பேசுதல். அவை முன்னே தம்முடைய சைவசமய தத்துவத்தை அங்குள்ளோர் மொழியாகிய

இந்துஸ்தானி மொழியில் பேசும் பொருட்டுத் தான் அவர் சரசுவதியைத் துதித்துச் சகலகலா வல்லிமாலை பாடி இந்துஸ்தானி மொழியறிவு பெற்றார். இதை 'ஊன்றி உணரும்போது அவர் சிங்க வாகனத்தின் மீது சென்றார் என்பது கூட ஒப்புக் கொள்ளத் தக்கதே தான். ஏனெனில் அவருடைய நோக்கம் அங்குள்ளார் மதிப்பைப் பெறுதல். சிங்க வாகனமும் அந்த மதிப்பை பெற்றுத் தரவல்ல ஒரு கருவி. இது நடந்திருக்குமா என்பதை வேறிடத்தில் ஆராய்ந்திருக்கிறோம்.

இந்தச் சம்பவத்தையும் இங்குச் சொல்ல எண்ணியது குமரகுருபரர் தம்மைப் பற்றி நினைத்தவரல்லர். தம்முடைய பெருமையைப் பற்றி நினைத்தவரல்லர். பர ஞானத்தையே தேடிக் கொண்டு வந்தார்; குருவருளையே நம்பிச் செயல்பட்டார் என்ற கருத்துக்களை வற்புறுத்து வதற்காகவே.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பாடிய முதல் நூல் கந்தர் கலிவெண்பா என்ற தோத்திர நூல் என்பது நாம் அறிவோம். இதில் அடங்கியுள்ள தொடர்க் கருத்துக்களை மூவகைப் பாகுபாட்டினுள் அடக்கிக்காட்டினோம். அவை யாவன: முதலாவதாக சைவ சமயத்தின்படி சிவபெருமான் உயிர்களுக்குக் கருணை பாலிக்கும் முறைமை, அதைச் சொல்லும் முகமாக அவனுடைய ஆறு திருமுகங்களின் அருட் குறிப்புகள். பின்னர், பன்னிரு கரங்களின் செயல்கள், திருவுருவ வருணனை. இரண்டாவதாக முருகன் திருவவ தாரச் சிறப்பு, சூரசம்மாரம், இரு திருமணங்கள். முடிவாகத் தமக்கு அருள் செய்ய வேண்டும் என்று வேண்டுகோள். இவ்வளவும் இந்தச் சிறு நூலிலே மிகச் சுருக்கமாய் ஆழ்ந்த அனுபவத்தோடும், அவர் பாடிய பிள்ளைப் பருவத்திற்கேற் பவும் சொல்லப் பெறுகின்றன. இது அனேகருக்கு பேராச்

சரியத்தை விளைவித்திருக்கிறது. எவ்வாறு எனில் ஐந்து வயதுச் சிறுகுழந்தை சைவ சமயத் தோய்வு நிரம்பிய சைவ சித்தாந்த உண்மைகளை அநாயசமாக எடுத்து வீசுகிறார். இது எவ்வாறு சாத்தியம் என்பது பலரையும் திகைக்க வைத்திருக்கிறது.

ஆனால் திகைப்பிற்கும், வியப்பிற்கும் இடம் இல்லை. குமரகுருபரர் எந்தக் கௌமார சமயமும் பாடவில்லை. தமக்குத் திருச்செந்தூர்ச் சண்முக விலாசத்தில் அருள் செய்த முருகப் பெருமானைப் பரம்பொருளாகிய சிவ பெருமானாகவே அவர் கண்டார். கண்டது முருகனுடைய திருவுருவம் என்பதில் மறுப்பில்லை. இந்தக் காட்சி கிடைத்தது அருள்வசத்தால்.

அவ்வருள் காட்சியில் முருகனுடைய அருள் காட்சி என்றும், சிவபிரானுடைய அருள் காட்சி என்றும் வேறு பாடில்லை. ஆகவே இக்காட்சியானது சைவ சித்தாந்த ஞானத்தால் வரும் அருள் காட்சியே. இந்தச் சிறு நூலிலேயே தொடக்கப் பகுதியில் பதி இலக்கணமும், சிருஷ்டி காரணமும், மலபரிபாகம் இருவினை ஒப்பு, சத்திநி பாதம் ஆகியவற்றையும் உணர்த்தி பரசிவம் மானிடச் சட்டை சாத்தி குருபரன் என்று ஓர் திருப்பேர் கொண்டு குருவாக மண்மீது வந்து, பிறப்பு, இறப்பு என்ற பிறவிக் கடலில் அகப்பட்டுத் துன்புறும் பக்குவ உயிரைக் கை கொடுத்துக் கரையேற்றுகிறது என்று பாடுகிறார். எல்லாம் சொல்லி முடிவாக வேண்டும் இடத்து மும்மைப்பெருமலங் கள் மோனித்துத் தம்மை அடியார் குழுவில் கூட்டி உலவாத பேரின்ப வாழ்வு தரவேண்டும் என்று வேண்டுகிறார். இந்த அநுபவம் ஐந்து வயதுச் சிறுபிள்ளையாக இருந்த இவருக்கு எப்படி உதித்தது என்று யாரும் ஐய்யுற வேண்டியதில்லை. திருச்செந்தூரில் முருகன் பொழுது விடியும் நேரத்தில் இவருக்குக் கனவில் தோன்றி இவருக்குத் தம் உருவத்தைக்

காட்டி அருள் செய்தபோதே இவருக்குப் பூரண சிவஞான நிலை கைகூடியிருந்தது. ஆயினும் உலகியலைத் தழுவியே இவரை ஆட்கொள்ள வேண்டும் என்று முருகன் நினைத் தான்போலும். அதனால் இவருடைய உள்ளத்தில் ஞான குரு வேண்டும் என்ற அவாவை ஊட்டினான். வந்த முருகனே ஞானகுரு அல்லவா? ஏன் அந்த முருகன் அசரீரி யாக இவருக்கு "உன் வாக்கு தடைப்பட்ட இடமே ஞானகுரு என்று அறிநீ" என உணர்த்தினான்? ஏன் இத்தகைய போக்கு? இவையெல்லாமே திருவருளின்விளையாட்டு என்று தான் கொள்ளவேண்டும். குழந்தையாகிய இந்த உயிர் பக்குவப்படுத்தப்பட வேண்டியிருக்கிறது.

அனுபந்தம் : 9

## சகலகலாவல்லி மாலை

சகலகலாவல்லியாகிய சரஸ்வதித் தேவியை இவர் பாடி இந்துஸ்தானி மொழிப் புலமை பெற்ற வரலாறு வேறு வித மாகவும் சொல்லப்படும்.

"சுவாமிகள் அத்தலத்தில் வசிக்கும் நாளிலே, அந் நகரத்தை யாண்டுகொண்டு அங்கிருந்த டில்லி பாட்சாவைக் கண்டு வசனித்து தருமமியற்றுதற்குத் தக்க இடத்தைப் பெற விரும்பி, அவனுக்குரிய இந்துஸ்தானி பாஷையைத் தெரிவித்தருளும்படி சரஸ்வதி தேவியைப் பிரார்த்தித்துச் சகலகலாவல்லி மாலை என்னும் ஒரு பிரபந்தத்தைப் பாடத் தொடங்கினார்; ஒன்பது பாடலருளியும் சரஸ்வதி தேவி தமக்குத் திருவருள் செய்யாமை கண்டு, "மண் கண்ட வெண் குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென், பண்கண்டளவிற் பணியச் செய்வாய்" என்னும் பத்தாவது பாட்டை அருளிச் செய்தார். உடனே சரஸ்வதியார் திருவருள் சுரந்து அப் பாஷையை விளக்கியருளச் சுவாமிகள் களிகூர்ந்து, அவ்

வரசன் சமூகத்திற் கெழுந்தருளினார். அவன் சுவாமிகளது அருமை பெருமைகளைச் சிறிதும் அறியாதவனாகையால், சிங்காதனத்திலிருந்து கொண்டே சுவாமிகளது வரலாற்றை வினாவினான். சுவாமிகள் இதனாலே தமக்கு யாதொரு குறைவும் இல்லையாயினும், அவனுக்கு நேரிடும் கெடுதியை யெண்ணி அப்பாட்சாவின் மீது கருணை கூர்ந்து "மஹா ராஜாவே, உம்மை ஆசிர்வதிக்க வந்த நம்மை இப்படி நிறுத்திக் கொண்டு வினாவுவது தருமமல்ல" என்று உரைத் தருளினார். அது கேட்ட அரசன், "உம்மிடத்திலே தெய்வீகங் கண்டாலன்றி உமது சரீரத் தோற்றத்திற்கு நான் மரியாதை செய்யேன்" என்று கூறினான். சுவாமிகள் "அப்படியாயின், அதனை நாளையதினம் உமக்குக் காட்டு வோம்" என்று சொல்லி மீண்டு, மற்றை நாள் காளியினது அனுக்கிரகத்தால் வந்த ஒரு சிங்கத்தின் மேல் ஏறிக்கொண்டு யாவரும் அஞ்சும்படி சபையிற் புகுந்து, அரசனை நோக்கி, "நீர் இருப்பது உயிரற்ற சிங்கம். நாம் இருப்பது உயிருற்ற சிங்கம்; ஆயினும் நீர் அஞ்சவேண்டியதில்லை; உமக்கு மாத்திரம் இது பசுவாகத் தோன்றும்" என்று சொல்லி அதிலிருந்தபடியே அவன் வினாக்களுக்கு உத்தரங் கொடுத்து, அவனை வணங்கும்படி செய்து அங்கே வீற்றிருந்தருளினார்.

சுவாமிகள் அக்காலத்திலே அரசனையும், பிறரையும் சந்தோஷிப்பிக்கும்படி செய்த பிரசங்கங்களுள்ளே சிற்றின் பத்தைக் குறித்துள்ள பிரசங்கத்தைக் கேட்டுத் துறவிகளாய் விருத்தப் பருவமடைந்துள்ள அரசனுடைய குரு முதலியோர் களும் விரகத்தினாலே மயங்கிப் பூமியிலே விழுவார்கள்; யுத்த விஷயமாகச் செய்யும் பிரசங்கத்தைக் கேட்டு வயோதி கர்களும் கண் சிவந்து பற்களைக் கடித்து, ஆயுதங்களை யெடுத்துக் கொண்டு ஆரவாரிப்பார்கள். இவ்வாறு சுவாமி கள் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றிப் பிரசிங்கிக்கும் பிரசங் கத்திலும் அவர்கள் அந்தந்த மயமாதலை அடைந்து வருவா

ராயினர். அவர்களுள் சில துருக்கர்கள் மற்றப் பிரசங்கங் களைப்பற்றிச் சந்தேகியாமல் சிற்றின்பத்தைக் குறித்துச் செய்த பிரசங்கத்தில் மாத்திரம் சந்தேகமுடையவராய், ''இவர்க்குக் காமானுபவமில்லாமலே சாஸ்திரத்தால் இவ் விஷயத்தில் இவ்வளவு பேசுதல் முடியுமா?'' என்றற் றொடக்கத் தனவற்றைக் கூறிப் பலவாறு பிதற்றுவாரா யினர். அதுகண்டு சுவாமிகள், மிகவும் களிம்பேறிய ஒரு செப்புப் பாத்திரத்தை அழைப்பித்து, அவ்வாறு பிதற்றிய துருக்கர்களை நோக்கி, ''நாளைக்கு இதனை மருந்தில் லாமலே பொன்னாக்குதலாகிய ஒரு இரசவாதம் செய் வோம்'' என்று சொல்லி, அப் பாத்திரத்தை அவர்கள் காணும்படி மலத்திலே புதைத்தார்.

மறுநாள் அரசன் முதலிய பலரும் வந்து கூடிய பின்பு, சுவாமிகள் வந்து அப் பாத்திரத்தை எடுப்பித்துச் சுத்தி செய்வித்து ''இது பொன்னாம்'' என எதிரே வைத்தனர். முதனாள் ஆட்சேபித்த துருக்கர்களுட் சிலர், அது கண்டு ''இது இரசவதத்தா லன்று; மலம் புளிப் பென்கிறீர்களே; அதனையும் புசித்து அநுபவித்தீர்கள் போலும்'', என்றார். அவர்கள் அது கேட்டு மிகவுங் கோபங்கொண்டு அவரைச்சூழ சுவாமிகள் அவர்களை நோக்கி, ''நேற்றைக்கு இப்படிப்பட்ட கோபம் நமக்கும் உண்டாயிருக்குமே?'' என்று சொல்லினார். அப்பொழுது விவேகிகளாகிய அரசன் முதலாயினோர் அவர்களை யடக்கி, சுவாமிகளது புத்தியை வியந்து புகழ்ந் தார்கள். அத்துருக்கர்கள் முன்னையினும் மிக்க பொறாமை யுடையவர்களாய் ஒரு நாள் அரசனிடத்திலே வந்து, ''உமது நண்பராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சாஸ்திரங் களில் வல்லவரேனும் அவர் கைக் கொண்ட தெய்வமோ பொய்'' என்றனர்.

அது கேட்ட அரசன் அதனைச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ் செய்தனன். சுவாமிகள், உண்மையை யாவர்க்கும் வெளிப்படுத்த விரும்பி, அத் துருக்கர்களது உத்தேசப்படியே சிவக்கக் காய்ச்சிய இரும்பைக் கொணர் வித்து, ''சைவ சமயமே மெய்ச் சமயமானால், அச் சமயத்துக் குரிய சிவபெருமானுக்குப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டுமே திருவுருவமானால், அவ் வெட்டனுள்ளும் அக்கினியே பிரதானமானால் இது சுடமாட்டாது''. என்னும் கருத் தோடு அவ் விரும்பைத் தமது திருக்கரத்திலே ஏந்தியருளி னார். அது கண்ட யாவரும் அதி யற்புத மடைந்து, சிவ பெருமானே பரம்பொருளென்று தெளிந்து, சுவாமிகளைத் துதித்தார்கள். பொறாமை யதிகரித்துள்ள துருக்கர்களோ தங்கள் கருத்து முற்றாமையால் முகம் மலர்ந்து, தலை கவிழ்ந்து நின்றனர்; சுவாமிகள் யாதொரு சலனமுமின்றி அரசனது வேண்டுகோளின் படியே அந்த இரும்பை எறிந்து விட்டுச் சபையிலே வீற்றிருந் தருளினார்.

பின்னொருநாள் அத்துருக்கர்கள் அரசனை யடைந்து, ''துறவிகளுக்குச் சாதி பேதம் கூடாது'' என்று சாஸ்திரங்கள் கூறுவதால், துறவியாகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுக்கு நமது கிருகத்திலே போஜனம் செய்வித்தல் வேண்டும்'' எனக் கூறினர்; அது கேட்டு, அரசனும் அதற்கு உடன்பட்ட வனாய் அதனைச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ் செய்தனன்; சுவாமிகள் அதற்கிசைந்து, தமது வேலைக்கார னொருவனை ஒரு தட்டிலே சில செவ்வரத்தம் பூவை வைத்து ஒரு வெளைப் பரி வட்டத்தினாலே மறைத்துக் கொண்டு வரும் படி நியமித்துவிட்டு, தாம் முன் சென்று, அங்கே தமக்காகப் படைக்கப்பட்டிருந்த மாமிசங்களுள் ஒவ்வொன்றையும் தனித் தனியே வினாவி, ''பன்றி மாமிசம் ஒன்று மாத்திரம் தவறியது போலும்; ஆனால், அது நம்மிடத்திலிருக்கிறது'',

என்று சொல்லி, வேலைக்காரன் கொண்டு வந்த தட்டை வாங்கும்படி கை நீட்டினார்; அதனால், அம் மிருகத்தின் பெயரையுஞ் சொல்லாத துருக்கர்களோடு அரசனும் வெட்கப்பட்டு அதனைத் தடுத்தான். சுவாமிகள் அரசனைத் தம் வயமாகக் விரும்பி, அங்கே படைத்துள்ள மாமிசங்களனைத்தையும் உற்று நோக்க அவையெல்லாம் காய் கனி முதலிய பல அரிய உணவுப் பொருள்களாயின. அது கண்ட அரசன் சுவாமிகளை வணங்கித் தனது குறையை யிரந்து, "இனி அடியேன் செய்ய வேண்டிய பணி யாது?" என்று வினாவினான்; சுவாமிகள், "உமது ஆளுகையிலுள்ள இக் காசிமா நகரத்தில் நாம் எண்ணி வந்த தருமத்தை நடத்துவதற்கு ஓரிடம் வேண்டும் என்றார். அரசனும் "தேவரீர்க்குப் பிரீதியான இடந்தருவேன்" என்று உடன்பட்டான். அன்றிரவு சுவாமி நித்திரை செய்யும் பொழுது கேதாரேசுவரர் அவரது சொப்பனத்திலே தோன்றி, 'அன்பனே! நீ அரசனிடத்திலே உபய கருடன் வட்டமிடு மிடத்தைக் கேள்" என்று கட்டளையிட்டு மறைந்தருளினார். சுவாமிகள் விழுத்தெழுந்து திருவருளைத் துதித்து, மற்றை நாள் உஷஸ் காலத்திலே கேதாரேசுவரரைத் தரிசித்துக்கொண்டு வெளியிலே வந்தபோது, அந்தக் கேதார கட்டத்தின் அருகில் அரசனது பள்ளி வாசலில் சிவாஞ்ஞைப்படி உபய கருடன் வட்டமிடுதலைக் கண்டு, திருவுள மகிழ்ந்து, அரசனிடத்திற் சென்று அவ்விடத்தைத் தெரிவித்தார். உடனே அரசன் யாதொரு தடையுஞ் சொல்லாமல் அந்த இடத்தில் ஒரு பெரிய திருமடங் கட்டி, அதிலே தனது முகரும் வைத்துத் தத்தஞ் செய்து, அவர்க்கு வேண்டிய சிறப்புக்களையும் செய்தான். இதுவே குமாரசாமி மடம் என்று சொல்லப்படுகிறது."

தமிழ் மொழியில், தனிச்சரசுவதி தோத்திர நூலாக உள்ள நூல் இந்தச் சகலகலாவல்லி மாலையன்றிச் சரசுவதி

தோத்திரம் என்ற பெயரோடு கட்டளைக் கலித்துறையால் செய்யப்பட்ட 30 பாடல் கொண்ட ஒரு தனிநூல் உண்டு. இது கம்பர் செய்ததென்று வழங்குவது; ஆனால் இராமாயணம் பாடிய கம்பர் செய்ததன்று, எனினும் இதுவும் ஒரு பழமையான நூலாகவே இருக்கலாம் என்றும் அறிஞர் கருதுவர்.

அனுபந்தம் : 10

## கயிலைக் கலம்பகம்

சுவாமிகளுடைய நூல்களைக் கூறிய இடத்தில் இரண்டாவது கயிலைக் கலம்பகம் என்றும், இந்நூல் இப்போது கிடைக்கவில்லை என்றும், கிடைக்கின்ற எட்டுப் பாடல்களும் இந்நூலைச் சேர்ந்தன அல்ல என்றும் சொல்லப்பட்டது. கீழே அவ்வெட்டுப் பாடல்களை வேறு சில குறிப்புக்களோடு தருகிறோம்.

இக்கயிலை என்பது சுவாமிகள் பிறந்த ஸ்ரீவைகுண்டத்தின் பாகமாகிய கயிலாசபுரம். அங்கு ஒரு பெரிய சிவாலயம். கற்கோயிலாக உள்ளது. சுவாமி கயிலாச நாதர். அம்பிகை சிவகாம சுந்தரி. அங்கு 1987 ஏப்ரல் மாதம் ஊரார் ஒரு லட்சார்ச்சனை நடத்தினார்கள். அச்சமயம் இப்பாடல்களை வெளியிட்டார்கள். அக்கோயில் தாமிரபரணி நதிக்கரையில் அமைந்துள்ள நவ (ஒன்பது) கயிலாசங்களில் ஒன்று. சுவாமி சுயம்பு என்பது ஐதிகம்.

1. கங்கைச் சடையும் கயிலைப் பிரான் இமய
மங்கைக் கமுதாம் வடிவழகும் அங்கத்
திருத்தோடும் கண்டுளத்தில் சிந்தித்தால் கால
மிருத்தோடும் ஓடும் வினை.

2. தேமாம் பொழிலுடுத்த தென்வைகுந்தைக் கயிலைக்
கோமானை முக்கட் கொழுமணியைக் காமருபூந்
தாமச் சடையானைத் தாள்தொழுதால் புன்புழுக்கூடு
ஆமச் சடையான் அயன்.

3. தன்னந் தனியே நின்றுமதித்
தழல்நின் றெறியச் சமைந்திடுமென்
அன்னஞ் சுவையார் அமுதென நஞ்
சமுதாக் கியதாம் அறிவாரோ
பொன்னம் பலமும் வெள்ளிமன்றும்
பொதுவென் றுரிமைத் திருத்தொண்டர்
நன்னெஞ் சகத்தும் நாடகம் செய்
நடத்தார் கயிலை இடத்தாரே.

[வண்டு]

4. கூற்றிருக்கும் கொலைமழுவும் கொடியிருக்கும்
இடமருங்கும் கொண்டு தண்தேன்
ஊற்றிருக்கும் பொற்கயிலை விற்றிருக்கும்
பெருமானார்க்கு உரையீர் அந்தோ
மாற்றிருக்கும் பசும் பொன்முலை உயிரிருக்கும்
இடம் தேடி வருந்தித் தென்றல்
காற்றிருக்கும் தமிழ்நாட்டில் குடியிருக்க
முடியாது களிவண் டீரே.

5. [கழிக்கரைப் புலம்பல்]

கழியே கழிக்கரையே கண்டலே தென்திரைக் கடலே
சுழியே சுழிபடு தண்டுறையே யொண்துறைத் தமிழின
மொழியேர் வைகுந்தைக் கயிலேசர் வெற்பின் முழுவதும் பெண்
பழியே கொளக்கடவார் ஒரு கூற்றம் பகருமினே.

6. நங்கள் புன்கண் அறுத்துளக் கண்
அளிக்க வைத்த அருட்கணார்
நடன குஞ்சித பதமெடுத்தொரு
நாத கீத முழங்கிடக்

கங்கை பொங்கரன் மங்கையொடு நடம்
ஆடுவார் மதிசூடுவார்
கயிலைநாதர் வைகுந்தை வாணர்
கடுக்கை மாலை கொடுக்கிலார்

அங்கண் மாலையின் மதியமல்ல
அசைந்த தென்றலும் அல்லவெற்கு
ஆகுலம் புரி கோகிலங்களல
அரசுவா வென உருவிலான்
மங்குல் அறவிடு கங்குல் அளவிள
வாடையலவளர் கொம்பனார்
வம்புமல மலரம்புமலவளை
மாற்றமே கொடுங் கூற்றமே.

[அம்மானை]

7. பூணுதற்கு வைத்ததுத்திப் பூணர்கயிலேசர்ஒரு
வாணுதற்கு மாலானார் வைகுந்தத் தம்மானை
வாணுதற்கு மாலானார் வைகுந்தத் தாமாகில்
காணுதற்குக் கார்மேனி காட்டாரோ அம்மானை
கண்டமட்டில் மெத்தக் கறுத்திருப்பார் அம்மானை.

[அம்மானை]

8. கைம்மான் மறியேந்தும் கண்ணுதலார் தென்கயிலைப்
பெம்மான் ஒருபாதிப் பெண்ணணர்கான் அம்மானை
பெம்மான் ஒருபாதிப் பெண்ணரே யாமாகில்
அம்மான் அருந்தனம் உண்டாகாதோ அம்மானை
ஐயம் புகுவார்க்கு அருந்தனமே தம்மானை.

அனுபந்தம் : 11

## நேபாளத்து மோரங்கி மடம்

நேபாளத்தில் மோரங்கி என்ற இடத்தில் காசிக்குமார சாமி மடத்துக்கு ஒரு கிளை மடம் இருந்தது. இந்த ஊர் முகரங்கி என்று மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை எழுதிய குமரகுருபரர் சரித்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார். குமரகுருபரர் தம்முடைய அடியவராய் இருந்த வாகீச முனிவர் என்பவரை முகரங்கிக்கு அனுப்பி அங்குக் ''கண் மணி (உருத்திராக்கம்) விளையும் பூமி கைக்கொள்வாயாக'' என்று சொல்லி அனுப்பினார். அப்படியே அவர் அங்குச் சென்று கண்மணியாகிய உருத்திராக்கம் விளைகின்ற காடுடைய அந்த இடத்தைக் கைக்கொண்டார். (அதாவது பணம் கொடுத்து விலைக்கு வாங்கினார் என்றுதான் யூகிக்க வேண்டியிருக்கிறது.) அதில் ஒரு மடமும் அமைத்தார். இங்கு மடம் என்பது இன்று அதற்கு அடியவர்கள் பலர் ஒரு குருவின் கீழ்த் தங்கி வாழ்கின்ற இடம் என்று பொருள்ல்ல; மற்றப்படி ஓர் அடியவர் வாழ்வதற்கான இல்லம் என்பதே பொருளாகும்.

மகாவித்துவான் அவர்கள் பாடிய குமரகுருபரர் சரித்திரத்தை ஐயரவர்கள் நினைவாக உள்ள திருவான்மியூர் நூல் நிலையச் சங்கத்தார், 1979 இல் மகாவித்துவான் இறந்த 100 ஆவது ஆண்டுவிழா நடந்தபோது அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அதில் முகரங்கி மடத்தைச் சொல்லிய இடத்தில் இவர் கூறிய ஒரு பாட்டுக்கு விளக்க மாக அவர்கள் பொழிப்புரை எழுதியபோது வாகீச முனிவ ராய் விளங்கிய குமரகுருபரரே என்றும் அவரே சான்றோர் கள் விரும்பியவாறு முகரங்கி என்னுமிடத்தில் தக்க மடம் அமைத்துச் சிறப்புடன் வாழ்ந்தார் என்றும் உரை எழுதி யிருக்கிறார்கள். இது பொருத்தமல்ல. இவர் முகரங்கிக்குப் போகவுமில்லை. அங்கு வாழ்ந்திருக்கவுமில்லை. இவர் காசியில் கங்கைக்கரையில் கேதார கட்டத்தின் அருகில் மடம்

அமைத்து அதில் ஆயுள் முழுமையும் இருந்து கொண்டு பல தருமங்களை நடத்திக்கொண்டு வந்தார். அப்போது அவரிடத்து அங்கு வெள்ளியம்பல வாணத் தம்பிரான் வாகீச முனிவர், இறுதியில் சொக்கநாதத் தம்பிரானும் பின்னும் பல மாணாக்கரும் இருந்தார்கள். இவர்கள் வாகீச முனிவருக்கு முகரங்கிக்குச் செல்லுமாறு கட்டளையிட அவர் சென்று உருத்திராக்கம் விளையும் காடு வாங்கி மடம் அமைத்துக் கொண்டு வாழ்ந்தார் என்று கருதுதல்தான் சந்தர்ப்பத்துக்குப் பொருத்தம்.[1]

வடநாட்டில் காவியுடை அணிந்தவர்கள் எல்லாருமே 'சாதுக்கள்'. சாது என்றால் சந்நியாசி. அவர்களில் வடநாட்டார் தென்னாட்டார் என்ற பேதமோ சைவர் வைணவர் வேதாந்தி என்ற பேதமோ பாராட்டுவதில்லை. இன்றும்கூட அங்கு எல்லாச் சந்நியாசிகளுக்கும் மிகுந்த சிறப்பு உண்டு. அதை அங்குப் போகிறவர்கள் நன்கு காணலாம்.

மோரங்கியில் இருந்த தம்பிரான் 'ருத்ரேசுவர மகந்து' என்று அந்நாட்டில் வழங்கப்பெற்றார். அந்த மடம் ருத்ரேசுவர ஸ்தானம் என்று அவர்கள் பாவித்தார்கள். முற் கூறியபடி அங்கு வாகீசத் தம்பிரான் சென்று காடு வாங்கி மடம் அமைத்தார். பின்னால் வைத்தியலிங்கத் தம்பிரான் முதலான பலர் சென்று ஒருவர் பின் ஒருவராய் அந்த இடத்தை நிர்வகித்து வந்திருக்கிறார்கள்.

"மோரங்கியில் உள்ள திருமடத்தில் பூஜையில் உள்ள மூர்த்தியின் பெயர் ஸ்ரீ பிந்தீசுவரர். அம்பிகையின் பெயர் ஸ்ரீ வாலாம்பிதேவி. ஆண்டு ஒன்றுக்கு அக்கால நேபாள

---

1. கா. சுப்பிரமணியப்பிள்ளை வாகீசத் தம்பிரான் என்ற மற்றொருவர் என்றே எழுதுகிறார்.

நாணயத்தில் ரூ. 5000/- வரக்கூடியதாகவும் வரியாக ரூ. 1700உம் செலுத்த வேண்டியதாகவும் உள்ள பரப்பை உடையதாக இம்மடத்துக்குச் சொத்து இருந்தது. இங்கு விஜயபுரி ஜ்வாலாமுகி வழியே செல்லுதல் வேண்டும். நேபாளத்தில் நிர்வாகம் ஏற்குமுன் காட்மாண்டு சென்று வாங் நதியில் நீராடி பசுபதிநாதர் குஹ்யேசுவரியை வழிபட்டுத் தரிசனம் செய்து, அரசர் அரண்மனை சென்று முதல் மந்திரியையும் அரசனையும் கண்டு அவர்களுக்குரிய ஒகையுறைகள், குதிரை, பீதாம்பரங்கள், வாசனைப் பொருள் முதலியன அளித்து ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் அருளாசியையும் குருவருட் பிரசாதத்தையும் திருநீறு வழங்கி விடைபெற்றுப் பின் மடத்தின் பொறுப்பேற்றல் வேண்டும். அரசனும் முதல் மந்திரியும் தம்பிரான் சுவாமிகளுக்கு உரிய முறையில் வணக்கம் தெரிவித்து புனுகு கஸ்தூரி முதலிய நறுமணப் பொருள்களும் உருத்திராக்கங்களும் அன்பளிப்பாக வழங்குவதும் வழக்கம். சிவராத்திரியில் ஸ்ரீபசுபதி நாதர் ஆலய தரிசனம் அப்பொழுதும் சிறப்பு மிக்கதாக இருந்து வந்தது. கண்டகி நதியில் சுவேத விநாயகர் (வெள்ளைப் பிள்ளையார்) சுயம்பு மூர்த்திகள் கிடைக்கும்.''

நேபாள மகாராஜா காசிக்கு யாத்திரையாக வருவது வழக்கம். அப்படிப்பட்ட சமயங்களில் அவர் மோரங்கியில் இருந்த குமாரசாமி மடத்துத் தம்பிரானையும் உடன் அழைத்துக்கொண்டு வருவார். இவரால் காசி விசுவநாதத் தரிசனம் நன்கு செய்விக்கப்படும் என்பது கருத்து.

1843 இல் நேபாளத்தில் இருந்த மகாராஜாவுக்கும் அவர் புதல்வருக்கும் மன வேற்றுமை உண்டாகியதால் நாட்டில் பெருங்குழப்பங்களும் உள்நாட்டுப் போரும் நடைபெற்றன. இருதரப்புக்களிலும் ஈடுபட்டவர்களை மாற்றார்

கொன்று குவித்தும் கைகால்களை ஊனமாக்கியும் விட்டார்கள். எப்பொழுது என்ன நேருமோ என்று மக்கள் மனங் கலங்கியிருந்தார்கள். இந்த நிலையில் அங்கே அற நிலையங்களைப் பரிபாலித்தல் எளிதாக இல்லை.

1872 இல் மோரங்கி மடத்துச் சொத்துக்களை நியான்சிங் ரேரிந்து என்பவன் மோசடியாகக் கவர்ந்து கொண்டு அங்கிருந்த தம்பிரான் சுவாமிகளை வெருட்டி விட்டான். இது குறித்து அக்காலத்தில் நேபாள பிரதம மந்திரியும் சேனைத் தலைவனுமான ராஜா ஜங் பகதூரிடம் குமாரசாமி மடத்தின் சார்பில் தெரிவித்துக் கொள்ளப் பட்டது. அவர் வழியே மன்னனுக்கு மனுச் செய்து கொண்டதில் மோசடி செய்த நேரிந்துவைக் கண்டித்துத் தண்டனை வழங்கினார்கள். மடத்துச் சொத்து மீண்டும் தம்பிரான் சுவாமிகளிடம் வழங்கப்பட்டது. அந்த அரச உத்தரவுக்கு லால் மோஹர் என்று பெயர். சாகிப்ஜி மகாராணா பிரதம மந்திரி என்று ஜங்பகதூர் அழைக்கப் பட்டார்.

இந்த ஜங் பகதூர் 1877இல் இறந்து விட்டான். அவனுடைய பிள்ளைகள் தம்முள் சச்சரவிட்டார்கள். இதனால் ஆட்சியில் பெருங்கேடு. நேபாளத்தில் அரசன் என்று ஒருவன் இருந்த போதிலும் இன்று இருந்து வருவது போலவே அன்றும் படையின் தளபதியே நாட்டைப் பெரிதும் பரிபாலித்து வந்தார். தலைவர் இறந்து பிள்ளைகள் சச்சரவிட்டபடியால் ஆட்சி சீர்குலைந்து அன்றே வெள்ளைக்காரருக்கும் ஆட்சியில் இடம் கிடைத்தது என்று அக்காலம் எழுதியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட குழப்பமான காலத்தில் நேபாள அரசு, மடத்துக்கு உரியதாய் இருந்த ஜ்வாலாமுகி ஜாகிர்களைப் பறிமுதல் செய்துவிட்டது என்று தெரிகிறது. ஆட்சி குழப்பமான நிலையில் இதற்கு எந்தப் பரிகாரமும் காணமுடியவில்லை.

மோரங்கி மடத்தில் அங்கிருந்த தம்பிரான் தமிழ் நாட்டு விழாக்களைச் சிறப்பாக அங்குக் கொண்டாடினாராம். வள்ளியம்மை திருமணம் என்பது தமிழ் நாட்டில் பலவகையாகக் கொண்டாடும் ஒரு பெரு நிகழ்ச்சி. இது முருகன் விழா. அன்று, ஒரு சமய விழாவுங்கூட. இத் திருமணத்தைச் சிறப்பிக்கிற சேமிப்ரி என்ற ஒரு வடமொழி நூல் இந்த மடத்தின் சார்பில் செய்து மன்னனுக்கு அளிக்கப் பட்டதாம். இதிலுள்ள குறிஞ்சிக்கதைப் போக்கு ஒரு கால் அம்மலை நாட்டு மன்னனுக்கு உவப்பு அளித்திருக்கலாம்.

காலம் நிரம்ப மாறிவிட்டது. நேபாளம் ஒரு சுதந்திர ராஜ்யமல்லவா? மோரங்கி மடத்தையும் அதன் சொத்துக் களையும், தமிழ் நாட்டாரிடமிருக்கக் கூடாதென்று நேபாள அரசு கைப்பற்றி நேபாளத்தாரிடமே விட்டுவிட்டது என்று அறிகிறோம். மோரங்கி மடம் மிகவும் பிரபலமாக விளங்கி வந்திருந்தது என்று பல குறிப்புக்களால் தெரிய வருகிறது. 1827 இல் சடையட்பர் திருப்பனந்தாளில் பெரிய பட்டம் தம்பிரான். இவருக்குக் கீழ் காசியில் அய்யாறப்பத் தம்பிரான் பெரியவராகவும் இராமலிங்கம் என்பவர் இளையவராகவும் இருந்து வருகிறார்கள். 1827 ஏப்ரல் மாதத்தில் சடையப்பர் அய்யாறப்பருக்குப் பின்வரும் தோரணையில் உத்தரவு போடுகிறார். "இராமலிங்கத்தின் பொறுப்பில் காசிமடத்தை விட்டு விட்டு நேபாளத்திலுள்ள மோரங்கிக்குச் சென்று அங்கு உள்ள தம்பிரானுக்கு உதவிக்கு ஒருவரை அமர்த்தி அங்கு நடைபெறும் தருமங்கள் இன்னும் செம்மையாக நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்யவும்."

பின்னும் 1828 இல் மோரங்கி மானேஜராய் இருந்த அழகிய திருச்சிற்றம்பலத் தம்பிரான் என்பவர் விஜயாபூர் என்ற இடத்தில் இருந்த கிளைமடத்தைப் பரிபாலிப்பதற்கு சீனியர் தம்பிரான் ஒருவரையும் ஜூனியர் தம்பிரான்

ஒருவரையும் அனுப்பி வைக்கும்படி திருப்பனந்தாள் சடையப்பத் தம்பிரானுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். இவற்றையெல்லாம் நோக்கும்போது அக்காலம் காசிக் குமாரசாமி மடமும் அதற்குத் தலைமை ஸ்தானமாய் இருந்த திருப்பனந்தாள் காசி மடமும் அளவற்ற சீரும் சிறப்பும் பெற்றுச் சிறந்த சைவ சமய ஆட்சி செலுத்தி வந்தன என்று அறிகிறோம்.

1880 ஜூன் 6 இல் திருப்பனந்தாளில் தலைமைத் தம்பிரானாயிருந்த 2ஆம் இராமலிங்கத் தம்பிரான் என்பவர் தருமபுர ஆதீனத்தின் மீது பகைமை கொண்டு அப்போது திருவாவடுதுறையில் ஆதீன கர்த்தராயிருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகருடைய பேரன்புக்குப் பாத்திரமாகி தாம் திருவாவடுதுறைக்குப் போன காலங்களில் தமக்கு நெருக்கமாக நண்பராகியிருந்த குமாரசுவாமித் தம்பிரான் என்பவரைத் திருப்பனந்தாள் பட்டத்துக்கு வந்து திருப் பனந்தாள் காசி மடத்தையும் அதன் கிளை மடங்களையும் சொத்துக்களையும் பரிபாலிக்க வேண்டுமென்று ஓர் உயில் எழுதி வைத்து 16-6-1880 இல் காலமானார். அப்போது திருப்பனந்தாள் காசி மடத்தாருக்கு மட்டுமே மோரங்கி யைப் பற்றித் தெரியும். அது பற்றிக் கொஞ்சமும் தெரியாத திருவாவடுதுறைத் தம்பிரான் ஒருவர் திருப்பனந்தாளில் திருவாவடுதுறைப் பரிவாரங்களுடன் வந்து உட்கார்ந்து கொண்டபோது மோரங்கி கேட்பாரில்லாமல் சீரழிந்து நேபாள அரசால் எடுத்துக்கொள்ளப்பட்டது. இது சைவத்துக்கும் தமிழுக்குமே ஏற்பட்ட ஈடுசெய்ய முடியாத பெரு நஷ்டம். போனது போனதுதான். மோரங்கி சம்பந்தமான ஒரு சிறு துண்டுக் குறிப்புக்கூட திருப்பனந் தாள் காசி மடத்திலோ, காசிக் குமாரசாமி மடத்திலோ மிச்சமில்லை. பின்வந்த திருவாவடுதுறையார் ஒரு தஸ்தா வேஜி மிச்சமில்லாமல் எரித்துவிட்டார்கள் என்று பிரசித்தம்.

# மேற்கோள் செய்யுள் அகராதி

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 98 | 18 | துழிக்கோயில் | திருக்கோயில் |
| 107 | 21 | பானிவிலோச்சன | பானுவிலோசசன |
| 107 | 22 | பந்தசகாயமா | பக்தசகாயமா |
| 107 | 25 | தும்பசம்ப கூழ்ப | கம்பசாம்ப கடம்ப |
| 119 | 30 | காத்தில் | காலத்தில் |
| 169 | 15 | வில்லை | வில்லை |
| 172 | 23 | குருக்கனார் | குருக்களார் |
| 173 | கடைசிவரி | விட்டாதென்று | விட்டதென்று |
| 175 | 14 | 1896 | 1876 |
| 176 | 14 | திருஉருவ | திருஉருவப் |
| 177 | கடைசிவரி | சிறப்பு | சிறப்புச் |
| 180 | 5 | புள்ளிருக்கும் | புள்ளிருக்கு |
| 182 | 6 | பன்னிரெண்டாம் | பன்னிரண்டாம் |
| 182 | 16 | அதற்கு | அதற்குப் |
| 182 | 16 | பிற்பட்டிருந்த | பிற்பட்டிருந்தது |
| 182 | கடைசிவரி | குக | குகன் |
| 183 | 25 | பின் | அயின்றபின் |
| 184 | 5 | இடத்து | இடத்துத் |
| 184 | 8 | உருவம் | பருவம் |
| 185 | 10 | பொருள் | அனுபவப்பொருள் |
| 185 | 18 | என்று | என்றுச் |
| 188 | 5 | அங்ஙனமே | அங்ஙனம் |
| 192 | 9 | ஆசாரியார் | ஆசாரியர் |

| | | | |
|---|---|---|---|
| 197 | 9 | அப்படிபாயின் | அப்படியாயின் |
| 198 | 18 | புதிதாக | புதிதாகச் |
| 198 | 22 | பெ்ற்றதே | பெற்றதே |
| 199 | 20 | மாதவனு மல்லாமல் | மாதவனு மல்லால் |
| 200 | 26 | முதுகின்மேல | முதுகின்மேல் |
| 201 | 28 | கிருஷண | கிருஷ்ண |
| 205 | 29 | இறைறவ | இறைவ |
| 206 | 1 | சித்தி | அருட்சித்தி |